# முல்லை

ஆசிரியர் : கண்ணதாசன்.

உள்ளே :-

கா. அப்பாதுரையார், எம். ஏ., எல். டி.,
வ. சம்பந்தன், பி. ஏ.
சொ. ஆனந்தன், பி. எஸ்சி., பி. டி.
அகிலன்
இரா. இளஞ்சேரன்
ஆ. மாதவன்
இரா. கோதண்டராமன்
கோவி. மணிசேகரன்
பொன்னிவளவன்
சிவ. இளங்கோ
பி. ஆர். ராஜாராம்
ப. புகழேந்தி
கண்ணதாசன்

மற்றும் பலரின்
எழுத்தோவியங்கள்.



'முல்லை'யில் வெளிவரும், கதைகளில் வரும் நிகழ்ச் களும் பெயர்களும் கற்பனையே.

# சோகம் நிறைந்ததடி!



கூப்பிட்டுச் சென்றெனைத்
தோப்புக்குள் காதலர்
கொஞ்சி அணைத்ததனால்-தன்
நெஞ்சில் இணைத்ததனால்-நான்
சாப்பிடும் வேளையில்
தோப்பு நிகழ்ச்சியால்
சண்டை பிறந்ததடி-பெற்றோர்
தொண்டை வறண்டதடி!

ஆற்றுக்குச் சென்றுநான்
ஊற்றுக்கள் தோண்டையில்
அன்பர் அழைத்ததனால்-உடல்
இன்பம் விளைத்ததனால்-நான்
சோற்றினை உண்கையில்
ஊற்று நிகழ்ச்சியால்
சோகம் நிறைந்ததடி-பெற்றோர்
வேகம் பிறந்ததடி!

வண்டுள்ள சோலையில்
கண்டெனைக் காதலர்
வட்டம் கெடுத்ததனால்-சுக
நாட்டம் கொடுத்ததனால்-நான்
உண்டிடும் வேளையில்
கொண்ட நிகழ்ச்சியால்
ஊக்கம் கலைந்ததடி-பெற்றோர்
தூக்கம் தொலைந்ததடி!

ஊர்க்குள்ளே நாடகம்
பார்க்கையில் காதலர்
ஓரம் அழைத்ததனால்-இதழ்
ஈரம் இழைத்ததனால்-பசி
தீர்க்கையில் பெற்றவர்
நோக்கிய நோக்கினில்
தேகம் அயர்ந்ததடி-பெற்றோர்
தீங்கும் உயர்ந்ததடி!

—பொன்னிவளவன்.

துறை, நிலை, முறைமை கண்டு
சொல்வன துணிந்து சொல்வோம்

# எண்ணம்

மலர் 2  ஆகஸ்டு, 1958  இதழ் 10

பன்மொழிப் புலவர் அவர்களின் 'நெருப்பாறு' முதலிய நல்ல கதைகள் பல, இந்த இதழில் மணம் பரப்புகின்றன. தொடர்ந்து எழுதும் எழுத்தாளர்கள் அவற்றை எழுதிச் சிறப்பித்திருக்கிருர்கள்.

கட்டுரைகளில், சிறுகதை பற்றிப் பிரபல எழுத்தாளர் அகிலன் அவர்கள் எழுதியுள்ள கட்டுரை, குறிப்பிடத்தக்க ஒன் ரகும். சிறு கதைத் துறையில் வெற்றிபெற்றுள்ள அகிலன், சி றுகதையின் பிறப்பையும், வளர்ச்சியையும், பண்பையும் தெளிவு டுத்துகிருர் அந்தக் கட்டுரையில். வேறு கட்டுரைகளும் உள்ளன.

'மனிதத் தன்மை'—ஆசிரியர் எழுதியது.

புதிதாக இந்த இதழில் 'அறிவியல் அரங்கம்', 'செ ன்ற இதழ்' முதலிய பகுதிகள் வருகின்றன.

வழக்கமான சுவைகள் இதழில் நிறைய இருக்கின்றன.




நல்ல வெயில். தெரு வழியே செல்லும் இளைஞன் ஒருவன், ஒரு வீட்டின் முன்பு நின்று, தாகத்திற்குத் தண்ணீர் கேட்கிறான். வீட்டிற்குள்ளே தாயும் பெண்ணும் இருக்கிறார்கள். தாயாருக்கு ஏதோ கைவேலை. தன் பெண்ணிடம் சொல்லி வெளியில் நிற்பனுக்குத் தண்ணீர் கொடுத்துவரச் செய்கிறாள்.

தாகத்தால் துடிக்கும் இளைஞன், அவனுக்கு வெறும் தாகம் மட்டிலுமிருந்தால், அந்தப் பெண் கொடுக்கும் தண்ணீரை மட்டும் குடித்துவிட்டல்லவோ செல்ல வேண்டும்? அவன் அப்படிச் செய்யவில்லை.

தனக்குத் தண்ணீர் கொடுக்கும் அந்த இளம் பெண்ணின் முகத்தைக் கண்களால் பருகுகிறான்; குறும்புச் சிரிப்புச் சிரிக்கிறான். மெல்லத் தன் கரம் நீட்டி அந்த மெல்லியலாளின் வளைக்கரத்தையே பற்றிவிடுகிறான்.

'ஆ !' என்று சத்தமிட்டுப் பதறுகிறாள் பெண்.

தாயார் விழுந்தடித்துக்கொண்டு வெளியே ஓடி வருகிறாள். எதற்காக இந்தப் பெண் இப்படிச் சத்தமிடுகிறாள் ? தாயாருக்குத் தெரியவில்லை.

"என்னடியம்மா சத்தம் ?"

அந்தப் பெண், 'இந்த முரடன் என் கரம் பற்றி இழுத்து விட்டானம்மா !' என்றல்லவோ சொல்ல வேண்டும் !

அவள் அப்படிச் சொல்லவில்லை.

" அம்மா, இவனுக்கு விக்கிக் கொண்டதம்மா ! நான் பயந்தே போய் விட்டேன் !" — பச்சைப் பொய்யைப் பொருத்தமாகச் சொல்கிறாள்.

அந்தப் பொல்லாத இளைஞனும் வேண்டுமென்றே விக்கலை வரவழைத்துக்கொள்கிறான். வெறும் தாகமா அவனுடையது? காதல் தாகம் !

பழந்தமிழ் இலக்கியத்தின் சுவையான காட்சிகளில் இஃது ஒன்று. ஆம், சிறந்த சிறுகதைக்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

எது சிறுகதை என்ற கேள்விக்கு இப்படிப் பதிலளித்து விடலாம்: முதலும் முடிவும் தெரிந்துகொள்ள முடியாத இந்த வாழ்க்கையின் ஒரு சின்னஞ்சிறு காட்சியோ, மெல்லிய அசைவோ, சூறாவளியின் சுழற்சியோ, நீர்க்குமிழியின் வட்டமோ, இப்படி ஏதாயினும் ஓர் அணுவின் சலனமே சிறுகதை.

தினந்தோறும் நமது வாழ்வில் எத்தனை எத்தனையோ சுவையான நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன, பொதுவாக மற்றவர்கள் காணத் தவறும் ஒன்றை, கண்டாலும் உணரமுடியாத ஒன்றை, உணர்ந்தாலும் வெளிப்படுத்த முடியாத ஒன்றைச் சிறுகதைக் கலைஞன், அனுபவித்து, உணர்ந்து வெளிப்படுத்துகிறான்.

அளவில் மிகச் சிறிய கதையாக இருக்கலாம். கதாபாத்திரங்கள் ஒன்றோ பலவோ இருக்கலாம்.

கதை நடக்கும் காலம்கூட ஐந்துநிமிடமோ, ஒருநாளோ, ஒன்பதாண்டுகளோ இருக்கலாம். ஆனால், கதையைப் படித்து முடித்த பின்பு, ஓர் உணர்ச்சி மட்டும் படிப்பவர் நெஞ்சில் நிறைய வேண்டும். எழுதி முடித்த கதைக்குப் பின்னேயும்முன்னேயும் உள்ள எழுதாத கதைகள் படிப்போர் உள்ளத்தில் விரிய வேண்டும். இதில் வெற்றி பெற்று விட்டால், அஃது அருமையான சிறு கதைச் சித்திரம் என்பதில் ஐயமில்லை.

முழுமையான வாழ்வையோ, வாழ்வின் பல கோணங்களையோ எதிர்பார்ப்பதற்கில்லை. பல்வேறு மனப்பண்புள்ள பாத்திரங்களின் உணர்ச்சி அறிவுப் போராட்டமன்று அதன் நிலைக்களம். வாழ்க்கையின் ஒரே ஒரு கோணம், வாழ்க்கை வெள்ளத்தின் ஒரே ஒரு சுழிப்பு, உணர்ச்சிப் பெருக்கின் ஒரே ஒரு திருப்பம் இவற்றுள் ஒன்று போதும் சிறு கதைக்கு. வீட்டுக்குள்ளே இருந்து கொண்டே நாம் சன்னல் வழியே வெளி உலகைப் பார்ப்பதில்லையா? அந்தச் சன்னல்வழிக் காட்சியே கதையின் வித்து. அந்தக் காட்சியில் அற்புதமான கற்பனை வர்ணங்களைத் தீட்டிக் கொடுக்கிறான் கலைஞன். அவ்வளவுதான்.

> ஒரு சிறு நிகழ்ச்சியை மையமிட்டுச் சுழன்று, அதனைச் சுற்றிச் சிந்தனைக் கற்களாலும், கற்பனைக் கலவையாலும் ஒரு சிறு வீட்டைக் கட்டி முடிக்கும் கலைதான் சிறுகதை.
>
> —பெர்னாட்ஷா.

கதைகள் எப்போது, எங்கே பிறந்தன? கதை கேட்கும் ஆசை எப்போது எங்கெல்லாம் தோன்றியதோ அதையடுத்தே அவை பிறந்திருக்க வேண்டும். "பாட்டி, ஒரு கதை சொல்லு!" என்று பச்சிளம் குழந்தைகள் கேட்பதும்,பாட்டி தன் கால்களை நீட்டிவிட்டுக்கொண்டு, "ஒரே ஓர் ஊரில், ஒரேஒரு ராஜா இருந்தானாம்" என்று தொடங்குவதும் நீண்ட நாட்களாக உலகத்தின் பல பாகங்களில் இருந்துவரும் பழக்கம்.

வாழ்க்கை கதைகளால் உயர்ந்திருக்கிறது. மதங்கள் கதைகளால் வளர்ந்திருக்கின்றன. மனிதப் பண்புகள் கதைகளால் மெருகேறியிருக்கின்றன.

ஏசுநாதர் நீதிக் கதைகள், ஈசாப் கதைகள், பஞ்ச தந்திரக் கதைகள், வேதாளக் கதைகள், புத்தர் நீதிக் கதைகள் இப்படிப் பலப்பல கதைகள் படிப்பினையை அடிப்படையாகக் கொண்டு தோன்றியிருக்கின்றன. ஆனால் இவை உயர்ந்த குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும், சிறந்த சிறுகதைகள் என்று சொல்ல முடியாதவை. படிப்பினைகளைத் தவிர உணர்ச்சி அழகும், கற்பனை மெருகும், சொல் நயமும், கவிதைப் பூச்சும் சிறுகதைகளுக்கு முற்றிலும் தேவை.

மறுமலர்ச்சிக் காலம் என்று தமிழில் சொல்லப்படுகிற காலத்தில் தோன்றிய சிறு கதைகளுக்கும், பழந்தமிழ் அகத்துறைக் காட்சிகளுக்கும் தொடர்பில்லை. அதுபோலவே பழங்காலத்து நீதிக் கதைகளுக்கும், நம்முடைய இன்றைய சிறுகதைக்கும் தொடர்பில்லை. பொங்கியெழுந்த வெள்ளம்போல் கரைபுரண்டு வந்த ஆங்கிலத்தின் மோதுதலால் நமக்கேற்பட்ட புதுவிழிப்பின் திவலைகள் நம்முடைய சிறுகதைகள்.

ஆங்கிலம் தன்னோடு உலகத்தில் உள்ள புதுமைச் செல்வங்கள் அனைத்தையும் வாரிக்கொண்டு வந்தது. நம்முடைய பழம் பெரும்

மொழியின் கட்டுக்கோப்பை அதனால் அசைக்கக்கூட முடியவில்லை. நம்மிடமிருந்துகூட அது கடன் வாங்கிக்கொண்டது. நாமும் ஆங்கிலத்தால் புதுமை பெற்றோம்; மறுமலர்ச்சி பெற்றோம்; வீடு பெற்றோம். இதைச் சொல்லிக்கொள்ள வெட்கப்பட வேண்டிய அவசியம் ஏதும் நமக்கில்லை. அருமையான புதுமை இலக்கிய நயம் நிறைந்த மொழிகளில் ஒன்று ஆங்கிலம்.

மேனாடுகள் பலவற்றில் நாவல்களும் நாடகங்களும் எழுதப்பெற்ற பின்னரே, சிறு கதைகள் தோன்றத் தொடங்கின. நாமோ நேருக்கு மாறான முறையில் எடுத்த எடுப்பில் சிறு கதைகள் எழுத முன் வந்தோம். சுமார் முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே புதுமைத் தமிழில் முதல் சிறுகதை பிறந்திருக்க வேண்டும்.

உரைநடை இலக்கண வரம்புக்கு உட்பட்ட சிறு கதைகளைக் 'கலைமகள்', 'விகடன்' போன்ற பத்திரிகைகளும், உட்படாத கற்பனைகளை 'மணிக்கொடி' போன்ற பத்திரிகைகளும் வெளியிட்டு வந்தன.

'மணிக்கொடி'ச் சிறு கதை ஆசிரியர்களிடமும் உணர்ச்சிப் பெருக்கும், வேகமும், வளைவு நெளிவுகளும், மேனாட்டுக் கதை அமைப்பு முறைகளும் மிகுந்து காணப்பட்டன. மற்றவர்களிடம் நேரான கதைப்போக்கு, அழகு, அமைதி, முழு உருவம் தென்பட்டன.

ஆரம்பச் சிறு கதைகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். சிறிதும் பிறமொழிக் கலப்பற்ற சொந்தக் கற்பனைகள்; பிறநாட்டுக் கதைகளைச் சிதைத்தும் உருமாற்றியும் எழுதப்பெற்ற கலப்புக் கதைகள்; முற்றிலும் மொழி பெயர்ப்புக்கள்.

சொந்தமாகச் சிறுகதை எழுதியவர்களில் சிலர் இன்றுவரை நிலைத்து நிற்கிறார்கள். 'புதுமைப் பித்தன்', கு. ப. ராஜகோபாலன் போன்றவர்கள் இன்று நம்மிடையே உயிருடன் இல்லை என்பது உண்மைதான். ஆனால் அவர்கள் எழுதிய எழுத்துக்கள் உயிர்ச் சித்திரங்களாக, ஆழ்ந்த வலிமை உள்ள கற்பனைகளாக நிலைத்துவிட்டன. தமிழ் நாட்டில் புதுமை இலக்கியம் வளர வேண்டும் என்ற ஆவலில் அவர்களே அனேக பிறமொழிக் கதைகளையும் தமிழில் மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார்கள். அவர்களுடைய சொந்தக் கற்பனைகளும், மொழிபெயர்ப்புகளும் சிறு கதைத் துறையின் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டிருக்கின்றன. 'கல்கி'யின் ஆரம்ப காலத்துச் சிறு கதைகளும் எண்ணற்ற வாசகர்களிடம் சிறு கதை படிக்கும் ஆர்வத்தைத் தூண்டிவிட்டன.

வேறு சில எழுத்தாளர்கள் ஆரம்ப சூரத்தனத்திற்குப் பிறகு, தாங்கள் எதிர்பார்த்த அளவுக்கு ஆதரவு வாசகர்களிடம் கிடைக்காததாலோ தங்கள் வாழ்வுக்கு வேறு வசதிகள் கிடைத்து விட்டதாலோ, புதுப் புதுக் கற்பனைகள் உருவாக்கும் திறனற்ற கற்பனை வரட்சியாலோ சிறு கதைத் துறையிலிருந்து ஒதுங்கிப் போனார்கள். 'முன்னாள் எழுத்தாளர்கள்' என்ற பழம் பெருமை பாடுவதுடன் நிறுத்திக்கொண்டு, புதிதாகச் சிறுகதைத் துறைக்கு வந்த இளைஞர்களைப் பழிப்பதுடன் இவர்களுடைய திருப்பணி நின்றுவிட்டது. இவர்களிலிருந்து வேறுபட்ட பி. எஸ். ராமையாவைப் போன்ற சிலர், மீண்டும் புதிதாகச் சிறு கதைகள் எழுத முன்வந்திருக்கிறார்கள்; அழகான கதைகள் எழுதியும் வருகிறார்கள்.

இடையில்தான் சுமார் பதினைந்து ஆண்டுகட்கு முன்பு இளைஞர்களாகிய என் போன்றோர் சிறுகதைத் துறையில் உழைக்க முன் வந்தோம். எழுதப் புகுந்த சமயத்தில் என் போனறவர்களுக்கு வழிகாட்டியவர்கள் பெரும்பாலும் எங்களுக்கு முன்பு எழுதிய தமிழ்ச் சிறு கதை ஆசிரியர்களே. எங்களது

வயதுக்கும், அநுபவத்திற்கும், சூழ் நிலைக்கும் ஏற்ற சிறுகதைகள் எழுதினோம்; காதற் கதைகளை எழுதுவது தவறென்று நாங்கள் அன்றைக்கும் நினைக்கவில்லை ; இன்றைக்கும் நினைக்கவில்லை ; இனியும் நினைக்கப் போவதில்லை. காதற் கதைகள் மட்டுமே எழுதிக் கொண்டிருக்கக் கூடாது. வேறு பலவகையான கற் பனைகளும் வேண்டும். காதலைத் தவிர மற்றும் பல உணர்ச்சிகளைக் கதைகளில் வெளியிட வேண்டியது அவசியந்தான். நாங்கள் எழுதிய கதைகளைத் தொடர்ந்து படித்து வருபவர்கள் எங்களிடம் ஏற்பட்டு வரும் இந்தமாறுதல்களையும்வளர்ச் சியையும் கவனிக்காமல் இருக்க முடியாது.

காதலைப் பற்றிக் குறிப்பிடும் போது, ஒழுக்கத்தைப் பற்றியும் கூற வேண்டியிருக்கிறது. ஒழுக்கத் திற்கு மாறான உணர்ச்சியன்று காதல். ஒழுக்கத்தை வளர்க்கக் கூடிய தூய அன்பு அது.

எழுத்தாளன் ஒழுக்கத்தை வலி யுறுத்தும் உபதேசியல்லன். எனி னும் அவன் ஒழுக்கக்கேட்டை வர் ணனை செய்யும் ஊதாரியுமல்லன். இன்றைக்குச் சில பத்திரிகைகள் தங்களுடைய கீழ்த்தரமான வியா பார தந்திரத்திற்காக வெளியிடும் கதைகளுக்கும் இலக்கிய வளர்ச் சிக்கும் தொடர்பே இல்லை.

சிறு கதைகளின் இன்றைய நிலைக்கு வருவோம். புதுமைத்தமிழ் இலக்கியம் வளரவேண்டுமானால் எழுத்தாளர்களும் பத்திரிகையாளர் களும் ஒத்துழைக்க வேண்டியிருக் கிறது. பிறமொழியாளர்களிடம் உள்ள அந்த ஒற்றுமை தமிழ் நாட் டில் குறைவு. சிறுகதைகளைப் பொறுத்த மட்டில் பத்திரிகைகளின் துணையின்றிப் புத்தகங்களாக மட் டும் வெளியிட்டுப் பலன்பெற முடி யாது. பத்திரிகை படிக்கும் வழக்க முள்ளவர்களின் சிந்தனை, புத்தகம் படிக்கும் அளவுக்கு இந்த நாட்டில் இன்னும் வளர்க்கப்பட வில்லை. வெறும் பொழுதுபோக்கை மட்டும் குறிக்கோளாகக் கொண்டிருக்கும் பத்திரிகைகள் வாயிலாக எப்படி இலக்கிய வளர்ச்சியை எதிர்பார்க்க முடியும் ?

ஆகவே, ஆண்டுதோறும் ஆயிரக் கணக்கில் சிறு கதைகள் வெளிவந் தும், நூற்றுக்கு ஐந்துகூட இலக்கிய மதிப்புப் பெறவில்லை. என்றாலும் அந்த ஐந்து கதைகளையும் நாம் புறக்கணிக்கலாமா ? இத்தகைய சாதகமற்ற சூழ்நிலையில் கூடத் தன்மை வாய்ந்த கதைகள் எழுது வோர் சிலர் இருக்கிறார்கள். இவர் களின் கதைகளைத் திரட்டிப் பிற இந்தியமொழிக் கதைகளுடனே, பிற நாட்டாரின் இக்காலக் கதை கதைகளுடனே ஒப்பிட்டுப் பார்த் தால், நாம் சிறிதும் சோர்வடைய வேண்டியதில்லை. உலகத்துச் சிறு கதைகளுடன் தலைநிமிர்ந்து நிற்கும் தகுதியை நம்முடைய சிறு கதை களும் வென்றுவிட்டன.

ஆனால் எண்ணிக்கையில் இவை போதவே போதா. அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிறந்த சிறு கதைகளைத் தேடிஎடுக்கும் நிலையில் தான் நாம் இன்னும் இருக்கிறோம். இரண்டு வகையில் நமக்குவளர்ச்சி தேவை. ஒன்று, பொதுப்படை யாகவே எல்லாக் கதைகளின் தர மும் உயரவேண்டும். இரண்டு, கவிதை நயம், கற்பனைச் செறிவு, கருத்தாழம், எழுத்து வலிமை இவை யனைத்தும் நிறைந்த இலக்கி யப்படைப்புக்கள் எண்ணிக்கையில் பன்மடங்காகவேண்டும்.

இதற்குரிய அறிகுறிகள் திட ரென்று இந்த ஆண்டில் தோன்றத் தொடங்கியிருக்கின்றன.

தமிழ்ப் பத்திரிக்கைகாரர்கள் விழித்துக்கொண்டு விட்டார்கள். நாடு விடுதலை பெற்றபின்பு பிற மொழியாளரின் வளர்ச்சியைக் காண அவர்களுக்கு வாய்ப்பு அதி கரித்திருக்கின்றது. படிப்போரின்

பண்பும் உயர்வதை உணர்ந்துகொண்டார்கள். எங்கு பார்த்தாலும் இப்போது சிறுகதைப் போட்டிகள்! இளம் எழுத்தாளர்களுக்கு உற்சாகமூட்டி நல்ல கதைகளை எழுதச் செய்வதற்கு இதுவும் உள்ள வழி. ஆனால் இததுடன் நின்றுவிட்டால் விரும்பும்பலன் கிடைத்துவிடாது. ஏற்கனவே படிப்போரிடம் மதிப்புப் பெற்ற ஆசிரியர்களுக்குத் தனிச் சலுகைகள் உருவாக்கச் செய்யவேண்டும்.

கதைகள் எழுதுவது எளிதான செயலன்று. ஒவ்வொரு சிறந்த சிறுகதையும் ஒரு கவிதைத் துணுக்கு. தந்தச் சிமிழில் நுணுக்கமான சித்திர வேலைப்பாடுகள் செய்வதுபோல், எழுத்தாளன் ஒவ்வொரு வரிக்கும் மெருகேற்ற வேண்டியிருக்கிறது. புதிய கற்பனையென்பது வேண்டும்போதெல்லாம் கிடைக்கும் கடைச்சரக்கன்று. ஒவ்வொரு கதைக்கும் ஒரு புத்தம் புதுக் கதைக் கரு வேண்டும். அதைத் தேடி, உருக்கொடுத்து, முழுமைபெறச் செய்வதில் உள்ள சிரமங்கள் சிறு கதை ஆசிரியனுக்கே தெரியும். வெறும் எழுத்துக் கட்டிடங்கள் சிறு கதைகளல்ல. ஒவ்வொன்றும் உயிர்த்துடிப்புள்ள ஒரு புத்தம் புதுப் பிறவி.

பதினைந்து வருட அநுபவத்தில் நான் கண்ட உண்மை இது. வெறும் புகழ்தான் சிறு கதைகளுக்கு! சிறுகதைகள் எழுதுவதைப்போல் நஷ்டமான கலைத் தொழில் வேறெதுவும் இல்லை. கதைக்காகச் செலவிடும் நேரம், உழைப்பு, சிரமம் இவற்றால் கத்திரிக்காய் பயிரிடலாம்! குடித்துப் பழகியவன் அதை மாற்ற முடியாமல் திண்டாடுவதைப்போல் தான், இன்றைக்குச் சிறு கதை ஆசிரியனும். பொழுது போக்கிற்காகப் பக்கம் நிரப்புகிறவர்களுக்கும், பிறர் எழுத்துக்களுக்கு விளக்கம் கூறுகிறவர்களுக்கும், சொந்தமாகக் கதை எழுகிகிறவர்களுக்கும் ஒரே விதமான பற்றாக்குறை அன்பளிப்பு.

எழுதுகிறவர்களுக்குப் பொருளும் வேண்டும்; புகழும் வேண்டும். இவை இரண்டும் இல்லாவிட்டால் புதிய புதிய கற்பனைகள் தமிழ்நாட்டில் மலரப் போவதில்லை.

கடைசியாகச் சிறுகதை எழுதுகிறவர்களை மதிப்பிடும் முறைபற்றி ஒரு சொல்:

கம்பனையும் வள்ளுவனையும் நிறுத்துப் பார்க்கும் தராசில் எங்களையும் எடைபோட வேண்டாம். நிலைபெறக்கூடிய இலக்கியங்களாக நாங்கள் இதுவரை ஏதும் உருவாக்காமல் இருக்கலாம். அப்படி ஆக்க முடியுமா, இல்லையா என்பதை முடிவு செய்யவேண்டியவர்கள் எங்களுடைய கதைகளைத் தொடர்ந்து படிப்பவர்கள்; படிக்கப்போகிறவர்கள்.

பெற்ற தாய்க்கு ஒவ்வொரு குஞ்சுமே பொன் குஞ்சுதான். சொந்தக் கற்பனைகளை நாங்கள் நெஞ்சில் சுமந்து உருக்கொடுத்து உலவவிடுகின்றோம். இலக்கியத் தோட்டத்தில் அன்றே மலர்ந்து அன்றே வாடும் மலர்களும் இருக்கலாம். ஒரு சில வாடா மலர்களும் இருக்கலாம். அன்றே மலர்ந்து அன்றே மறைவதானாலும், அதன் மணத்தை நுகரக்கூடியவர்களுக்கு அம்மலர் மகிழ்வைத் தருகின்றதல்லவா? வாடி உதிரும் மலர்களை எருவாகக் கொண்டு, வாடாத மலர்கள் பல புதுமைத் தமிழ் இலக்கியத் தோட்டத்தில் மலரத்தான்போகின்றன. ★

# மனிதத் தன்மை

## கண்ணதாசன்

மனிதன் இயற்கையை அழைத்தான்.
இயற்கை வந்தது.

மனிதன் கேட்டான் :
'அம்மா எனக்கு வேண்டும்!'
'என்ன வேண்டும் மகனே, என்ன வேண்டும்?'
'வற்றாத செல்வம் வேண்டும்!'
வாரி வழங்கிற்று இயற்கை.
பொன்னைக் கொடுத்தது.
பொருளைக் கொடுத்தது.
கண்ணைப் பறிக்கும் மாளிகை தந்தது.
வண்ண விளக்குகளை வளரவிட்டது.
ஏறிச் செல்ல ஊர்தியும் தந்தது.
இணையில்லாத ஆடைகள் தந்தது.
இயற்கை மறைந்தது.
மனிதன் செல்வத்தில் திளைத்தான்.
பணத்தை வாரி வாரி இறைத்தான்.



நாட்கள் நடந்தன.
செல்வம் இருந்தது.
ஆனால், மனிதன் தேய்ந்தான்.
நிம்மதிக்காக அலைந்தான்.
காதலிலே நிம்மதி கிடைக்கும்.
ஆம்; அவன் முடிவு கட்டினன்
இயற்கையை அழைத்தான்.
இயற்கை வந்தது.

மனிதன் கேட்டான் :
'அம்மா, எனக்கு இன்னும் வேண்டும்!'
'என்ன வேண்டும் ?''
'காதல் வேண்டும்!'
இயற்கை தந்தது.
அழகுக் கன்னியர்,
அற்புத வடிவினர்,
பழகப் பழகத் தெவிட்டாப் பாவையர்,
சித்திரம் போன்றவர்,
சிங்கார மேனியர்,
கைத்திறங்காட்டிச் சிற்பிகடைந்த
கலைவண்ணச் சிலையினர்.
இயற்கை மறைந்தது.
மனிதன் அனுபவித்தான்.
பகலை இரவாக்கினன்,
இரவைப் பகலாக்கினன்,
வெளி உலகை மறந்தான்,
மாளிகைக்குள்ளேயே கிடந்தான்.
அவன் உடல் தளர்ந்தது.
மனம் சலித்தது.

பெண்ணைத் தொடுவதற்கும் மண்ணைத் தொடுவதற்கும் பேதமில்லாமல் போயிற்று.

மனிதன் மீண்டும் இயற்கையை அழைத்தான்.
இயற்கை வந்தது.
'அம்மா, எனக்கு இன்னும் வேண்டும்!'
'என்ன வேண்டும், மகனே ?'

'செல்வத்தைத் தந்தாய்; திளைத்தேன்.
சேயிழையார் கிடைத்தனர்; அனுபவித்தேன்.
இருந்தாலும், மனிதருள் மனிதராகவேஇருக்கிறேன்.

மன்னனாக வேண்டும்; மண்டலங்களைக் கட்டியாள வேண்டும்.

இயற்கை அதையும் வழங்கிற்று.
மனிதன் இப்போது மன்னன்!
'இம்'மென்றால் ஏழாயிரம் பேர்.
'இந்தா' என்றால் இருபதாயிரம்.
குரல் கேட்டால், குவலயம் நடுங்கும்.
ஆட்டிப் படைத்தான் அவனியை.
ஆர்ப்பரித்து முழங்கினான்.
மக்களை மாக்களாக்கினான்.
மண்டலம் தனதென்று மமதையிலாழ்ந்தான்.
மக்கள் கொதித்தனர்.
கூடினர்.
புறப்பட்டனர்.
'எங்கே மன்னன்? எங்கே மன்னன்?'
மன்னன் ஓடினான்;
கூவி அழைத்தான் இயற்கையை.
'அம்மா! அம்மா!'
'என்ன மகனே?'

'என் உடல் துடிக்கிறது; கொதிக்கிறது; குளிர மறுக்கிறது; எப்பொழுதும் கோபமாகவே இருக்கிறது!'

'சரி, இப்போது என்னதான் கேட்கிறாய்?'

'எல்லாவற்றையும் கொடுத்தாயே, இறுதியாக எனக்கு நீ தர வேண்டியது ஒன்று; எனக்கு மனிதத் தன்மை வேண்டும்; மனிதத் தன்மை!'

இயற்கை சிரித்தது.

'மகனே! இதைத்தவிர எல்லாம் எனக்குள் அடக்கம்; இதுமட்டும் உனக்குள் அடக்கம். இதை உன்னிடமிருந்துதான், நீ பெற்றாக வேண்டும்!'

இயற்கை மறைந்தது.






அல்லிக் குளத்தையும், அதை ஒட்டிச் செல்லும் நடை பாதையையும் மாறிமாறிப் பார்த்தபடியே கரையில் உட்கார்ந்து கொண்டிருந்தான், மாதவன். இன்றைக்காவது பத்மாவைப் பார்த்து விட மாட்டோமா என்ற தவிப்பு அவனுக்கு..

இப்பொழுது தானே மணி ஆறு ஆகிறது. இருட்டு வருவதற்கு இன்னும் நேரம் இருக்கிறது. சிறிதுநேரம் இருந்துபார்க்கலாம். இவ்வளவு நேரமும் இருந்துவிட்டு, இப்போது புறப்பட்டுப் போய்விட்டால், அந்த நேரம் பார்த்து அவள் வந்தால்...?

எப்படியும் பத்மாவைக் காண வேண்டும். கண்டு நடைபெற்ற அந்த சம்பவத்திற்கு விளக்கம் கேட்டாக வேண்டும் என்ற தீர்மானம் எப்போது உதயமானதோ அப்போது முதல்தினமும் காலையும், மாலையும் அங்கே உட்கார்ந்திருப்பவனாயிற்றே அவன்! எனவே, அன்றும் இருட்டும்வரை இருந்து பார்த்துவிட்டுப் போவது என்ற முடிவோடு உட்கார்ந்திருந்தான் மாதவன்.

பத்மாவைக் கடைசியாக அவன் பார்த்து ஒரு மாதம் ஆகிவிட்டது. இந்த நீண்ட ஒரு மாதமும் அவனுடைய நேரங்களில் பெரும் பாலானவை அவளைக் காணும் முயற்சியிலும், அதற்கான எண்ணங்களிலுமே செலவிடப்பட்டிருக்கின்றன. என்றாலும் பலன்தான் எதுவுமில்லை. அவனுடைய முயற்சிகள் அனைத்தும் ஆற்றுவெள்ளத்தில் கிழிக்கப்பட்ட கோடுகள்போல உருவற்றும், தெளிவற்றும் போய் விட்டன. அந்தப் பிரயத்தனத்தில் அவன் பெற்ற தோல்வியின் முத்திரை, அவனது கண்களிலும், முகத்திலும், ஏன் உடல் முழுதுமே தெளிவாக தெரியத்தான் செய்தது. என்றாலும் இந்தத் தோல்வி தொடர்ந்து நிலைத்து விடாது என்பதில்மட்டும் அவனுக்கு எப்படியோ ஒரு நம்பிக்கை!

பத்மாவுக்குத் திருமணமாகி பதினைந்து நாட்கள் ஓடிவிட்டன. திருமணத்துக்கு முன்னால் பதினைந்து நாட்கள்; பின்னால் பதினைந்து நாட்கள். அவளைக் காணமுடியாத இந்த ஒரு மாதத்தில் முதல் பதினைந்து நாட்களைவிட, அடுத்த பதினைந்து நாட்கள்தான் சித்திரவதை செய்தன. அவன் அழுதான்; அரற்றினான்; ஆத்திரப்பட்டான். என்றாலும் என்ன செய்வது? அவளைத்தான் கண்ணிலேயே காணமுடியவில்லையே! கண்டாலல்லவா காரணம் கேட்பதும், அது காரணமாக மனத்துக்குக் கட்டுப்பாடு விதித்துக் கொள்வதும்...!

அவனுடைய நினைவுகள் தடம் புரண்டன.

அவனுக்கும் அவளுக்கும் ஏற்பட்ட அந்த முதல் சந்திப்பு; அது ஏற்படுவதற்கான காரணம்; அதனைத் தொடர்ந்து நடைபெற்ற நிகழ்ச்சிகள்...எல்லாம் அவனது நினைவுகளில் தவழ்ந்தன.

★

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் நடந்தது அது.

மாதவன் அப்போது எந்த வேலை யும் பார்க்காமல் ஊர்சுற்றிக்கொண் டிருந்தான். எப்பொழுது பார்த்தா லும் எதையாவது ஒன்றைப் பேசி, ஊர்வம்பை 'வாங்கிக் கட்டிக்கொள்' வது அவன் வழக்கம்.

காலையில் எட்டு மணிக்கு பள்ளி எழுச்சி. ஒன்பதுவரை 'டீ'க்கடை யில் 'பேச்சுக் கச்சேரி'. பிறகு அல்லிக்குளத்துக் குளிப்பு. காலை 'டிபனு'க்குப் பிறகு நூல் நிலைய முற் றுகை. பகல் ஒரு மணிக்கு சாப் பாடு. பிறகு ஒரு தூக்கம். நான்கு மணிக்கு எழுந்து, திரும்பவும் ஊர் உலா. நடக்கமுடியாமல் கால்கள் ஓய்ந்து போனால், அல்லது பொறுக்க முடியாத பசி ஏற்பட்டுவிட்டால் வீடு—மணி ஒன்பதுக்கோ, பத் துக்கோ அல்லது அதற்கும் பிறகோ —இதுதான் அவனது 'தினசரிக் கடன்'களாக இருந்த காலம் அது.

இந்த நிகழ்ச்சி நிரலில் மிகுந்த உற்சாகத்துடன் அவன் கலந்து கொள்ளும் நேரம், அல்லிக்குளத்து குளிப்புக்கென ஒதுக்கியிருக்கும் நேரம்தான். அல்லிக்குளம் அந்த ஊரிலேயே பிரசித்தி பெற்றது. அங்கேதான் அவனோடு படித்த மாணவர்களை அவன் சந்திக்கமுடி யும். வளர்ந்த பிறகு பழகும் நண்பர் களைவிட, வளர்ந்துகொண்டிருந்த பிராயத்து நண்பர்களிடம்தான் என்ன வேண்டுமானாலும், எவ்வ ளவு வேண்டுமானாலும் பேச லாமே!

முதன் முதலில் சங்கரன்தான் அந்த விஷயத்தைப்பற்றி மாத வனிடம் பிரஸ்தாபித்தான். சங் கரனுக்கு எப்போதுமே மாத வனிடம் தனிப் பிரியம். மாதவ னின் பேனாவில் பிறக்கிற 'அபத் தங்'களை யெல்லாம் 'அற்புதம்' என்றே சொல்லிப் பழக்கப்பட்டு விட்ட 'மகாரசிகன்' அவன். அத னாலேயே மாதவனுக்கும் அவனை மிகவும் பிடிக்கும்.

சங்கரன் மெதுவாக மாதவனிடம் கேட்டான்:

'மாதவா, உனக்கு அருணகிரி ஐயங்காரைத் தெரியுமில்ல...அது தான், பத்தாவது வகுப்பில் நமக்குக் கணக்குப் பாடம் எடுத்தாரே...நீ கூட ஒருநாள் பெரிய தகராறு பண் ணலே...அவரு?'

'ஆமாம்; அவருக்கு என்ன?'

'அவரோட பொண்ணு ஒண்ணு; பத்மா'ண்ணு பேரு!'

'பத்மாவா?'

'ஆமடா...நீ 'ஸ்கூல்'ல 'இலக் கியக் கழக செக்ரடரி'யா இருந்தப்போ, 'மீட்டிங்'கிலே 'பிரே யர்' படிக்கச் சொல்லுவியே...அந் தப் பொண்ணு!'

'ஆமாம்... பத்மாதான்... அந்தச் சின்னப் பொண்ணு...ஆயிரங் கோணலா முகத்தை வச்சுக்கிட்டு, 'அருள்புரிவாய் கருணைக் கட லே'ண்ணு ஒரே பாட்டையே எப்ப பார்த்தாலும் பாடுமே?'

'ஆமாமா...அதுதான்; அந்தப் பொண்ணுதான். அடடடடா... என்ன அழகுங்கிறே...நீ கட்டாயம் அவளைப் பார்க்கணும்,போ... அவ் வளவு அழகு...!'

'நீ பார்த்தியா...?'

'பின்னே!......காலையில எட்டு மணிக்கு இங்கே வர்'ரா...பக்கத் திலே இருக்கு பாரு கிணறு... அதிலே தண்ணி எடுத்திட்டுப் போரா...!'

'சரிதான்!..... ஊரில இருக்கிற வங்களையெல்லாம் பார்க்கிறது தான் என்வேலை போலிருக்கு!... போதும்; வேற எதையாவது பேசு!...''

**'உறவு' என்ற தலைப்பில் வரும் இரண்டாவது கதை இது. இதற்கும், சென்ற இதழில் வந்த 'உறவு'க்கும் எந்த உறவும் இல்லை. இரண்டும் இரண்டு பிரச்சி னைகள் பற்றியவை; ஒன்றுக் கொன்று தொடர்பற்றவை.**

மாதவன்தான் சொன்னான் வேறு எதையாவது பற்றிப் பேசும்படி. ஆனால் அது வெறும் வெளிப் பேச்சுக்குத்தான். உண்மையில் சங்கரன் இன்னும் அவளைப்பற்றி ஏதாவது சொல்லமாட்டானா என்றே தோன்றியது அவனுக்கு. சாதாரணமாக, விரசமில்லாத அழகை பூஜா மனப்பான்மையோடு ரசிக்கும் சங்கரனை பார்க்கும்படி தூண்டுவதென்றால், அவள் எப்படிப்பட்ட அழகியாக இருக்கவேண்டும்! அதனாலேயே இன்னும் அவளைப்பற்றி அவன் ஏதாவது பேசமாட்டானா என்றிருந்தது மாதவனுக்கு. என்றாலும், கூடாது என்று கட்டளையிட்டு விட்டு, பின் அதையே செய் என்று ஆணையிடுவது...

அவளை அவன் சின்னப்பெண்ணாகப் பார்த்திருக்கிறான். அப்போது அவள் உயர்நிலைப்பள்ளியில் இரண்டாவது பாரமோ, மூன்றாவது பாரமோ படித்துக் கொண்டிருந்தாள். மிகச் சாதாரணமாக இருந்த அந்தப் பெண்ணா, இப்படி சங்கரன் ரசிக்கும்படியான பேரழகியாக இருக்கிறாள்? அது பெரிய அதிசயம்தான்! அவள் எப்படித்தான் இருப்பாள்? 'இப்படி இருப்பாளா?', 'அப்படி இருப்பாளா?' என்று அவன் ஒவ்வொரு சித்திரமாக மனத்திரையில் தீட்டிப் பார்த்தான்; எதுவும் அழியாமல் நிற்க மறுத்துவிட்டது. எப்படியும் அவளை மறுநாள் பார்த்துவிடுவது என்று தனக்குள் முடிவுசெய்து கொண்டான் அவன்.

மறுநாள் காலை மணி எட்டு அடித்ததும், மாதவன் அல்லிக்குளத்துக்கு வரும் பாதையில் நடந்துகொண்டிருந்தான். அல்லிக்குளத்துக்கு இரண்டு பாதைகள். ஒன்று குளத்தின் வடபகுதியை அடையும் செம்மண்பாதை. மற்றொன்று தென்பகுதியை அடையும் சரளைவிரித்த ரோட்டுப்பாதை. குளத்துக்குவரும் பெரும்பான்மையோர் செம்மண் பாதை வழிதான் வருவது வழக்கம். ரோட்டுப்பாதையில் அடுத்த வீதி வீடுகளின் பின்பகுதிகளும், தோட்டங்களும் இருந்ததால், அந்த வழியில் ஆள் நடமாட்டம் மிகவும் குறைவாகத்தான் இருக்கும். மாதவன் அந்த வழியாகத்தான் வந்து கொண்டிருந்தான்.

அந்தப் பாதையில் கொஞ்ச தூரம் விரைவாக நடந்து வந்து கொண்டிருந்த மாதவன், எதையோ நினைத்துக்கொண்டு திரும்பிப்பார்த்தான். அங்கே யாரோ ஒரு பெண், இடையில் குடம் ஒன்றை வைத்துக்கொண்டு, மெதுவாக நடந்து வந்துகொண்டிருந்தாள். தூரத்திலிருந்துபார்ப்பதற்கே அவள் அழகியாகத்தான் தோன்றினாள். சங்கரன் குறிப்பிட்ட நேரமும், அவள் குடம் கொண்டு வரும் ஒயிலும் அவள்தான் பத்மாவாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தை மாதவனுக்கு அளித்தன. எப்படியும் நின்று, நிதானமாகப் பார்த்துவிட வேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டான் அவன்.

திடீரென அவனுக்கு ஒரு புது யோசனை தோன்றியது. யாரோ பின்னால் வந்துகொண்டிருப்பவர்களை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதைப்போல், அங்கே கொஞ்ச நேரம் நின்றான். கொஞ்சநேரம் தான். அதற்குள் அவன் அருகில் வந்துவிட்டாள் அவள். மாதவன் நிமிர்ந்து பார்த்தான். ஆமாம், அவள்தான்; பத்மாதான்! ஆனால் இவளுக்கும், அவன் பள்ளிக்கூடத்தில் பார்த்திருந்த அந்தச் சின்னப் பெண்ணுக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்...!

மாதவன் அவளைப் பார்த்த போது, அவளும் அவனைப் பார்த்து விட்டாள். ஒரு கணம்தான். பிறகு அவள் தலை தானாகவே கவிழ்ந்து கொண்டது. ஆனால்மாதவன்மட்டும் அவளைப்போலத் தலையைக் கவிழ்த்துக் கொள்ளவில்லை. நிமிர்ந்து பார்த்தபடியே இருந்தான்; பார்த்துக்

கொண்டே அவள் பின்னால் நடந்தான்.

சங்கரன் சொன்னதில் தவறு இல்லேதான். அவன் சொற்கள் அர்த்தமில்லாதவை அல்ல. அவள் கண்டிப்பாக ஒவ்வொருவரும் பார்த்தாகவேண்டிய அழகிதான்...

காலேயில் பனிநீரைத் தாங்கி நிற்கும் மென்மையான ரோஜா இருக்கிறதே, அதன் நிறம் அவளுக்கு. அவளுடைய கண்கள் அழகான கண்கள். அவை விஷமம் செய்யும் விரிந்த கண்களல்ல; சின்னக் கண்கள். சின்னக்கண்களானாலும் கவர்ச்சியான கண்கள். அவற்றை அவள் மூடித் திறக்கும்போது, அவை இதழ் விரிந்த மலர்கள் போலிருக்கும்; அதுவும் சின்னஞ்சிறு மல்லிகை மொட்டுகள் விரிந்தாற்போலிருக்கும். அவை உப்புச்சப்பற்ற சாதாரணக் கண்களல்ல; கனவுகளைத் தேக்கி வைத்திருக்கும் கண்கள். அந்தக் கண்களுக்குக் கீழே எப்போதும் அச்சுக்குலேயாத புதுமையாக வீற்றிருக்கும் அருமையான கன்னங்கள்... அவளுடைய முகம் மலர் என்ருல், அவை அதன் இதழ்கள். அவையே மலர்களானல் அந்த முகத்தைப் பூந்தோட்டம் என்றுதான் குறிப்பிட வேண்டும். அடிக்கடி விரிந்து விரிந்து குவியும் அந்த உதடுகளில்தான் எத்தனைபசுமை! அந்த மேல் உதட்டின் வலது மேல் புறத்தில் ஒரு சின்னஞ்சிறு மச்சம்; அதுதான் எத்தனை பொருத்தமாக அமைந்திருக்கிறது! அந்த மச்சம் அங்கே இருப்பதுதான் அழகா, இல்லாமலிருப்பது அழகா என்பது தீர்மானிக்க முடியாத ஒரு விஷயம். ஏனென்ருல் இப்பொழுதிருக்கும் அந்த மச்சத்தை எப்படி இல்லாமல் செய்ய முடியும்!......அவளுடைய மூக்கு கூர்மையான கிளிமூக்கு அல்ல; விரிந்துபோய் விகாரமாய நிற்கும் மூக்கும் அல்ல. நல்ல மூக்கு; ஒரு நல்லமூக்கு எப்படி இருக்கவேண்டுமோ, அப்படிப்பட்ட மூக்கு!...... அவளுடைய கரங்கள் உவமை சொல்லமுடியாத சிற்பங்களின் கரங்கள்...கால்கள் பிரசித்தி பெற்ற நாட்டியக்காரர்களின் கால்களையெல்லாம் போட்டிக்கு அழைப்பவை...

அவளுடைய உருவம் மாதவனின் மனதில் நன்ருக, அழுத்தமாகப் பதிந்துகொண்டுவிட்டது—உயர்ந்த ரப்பரைக் கொண்டு அழித்தாலும் அழியாத கரிப்பென்சில் எழுத்துப்போல.

அவன் அன்று இயந்திரம்போல் செயல்பட்டான். அவசர அவசரமாகக் குளித்துவிட்டு, சீக்கிரமாகவே கிளம்பிவிட்டான். புறப்படும்போது அவன் கண்கள் அந்தக் கிணற்றையே நோக்கின. அவளும் அப்போது குடத்தை இடையில் தூக்கி வைத்துக்கொண்டு புறப்படத் தயாராக இருப்பது அவனுக்குத் தெரிந்தது. அப்படியானல், வந்த பாதையிலேயே திரும்பிவிட்டாலென்ன? போகும்போதும் ஒருமுறை நன்ருகப் பார்த்துக்கொண்டு போகலாம் அல்லவா? அப்படிப் போவதா; இல்லை, எப்போதும் போகும் பாதையில் போவதா? இந்தக் கேள்விகளைப் போட்டு, நெடுநேரம் அவன் 'மண்டையை உடை'த்துக் கொள்ளவில்லை. ஏனென்ருல் அவள் புறப்பட்டதுமே இவனும் அவனையறியாமலே அவளுக்குப் பின்னல் புறப்பட்டுவிட்டான்.

ஈரமான உடம்பில் ஒட்டிய, அரைகுறையாகக் காய்ந்த துணிகளோடு அவன், அவள் பின்னல் நடந்தான். அதனல்தானே என்னவோ, இப்போது அவனிடம் வரும்போது இருந்த வேகம் இல்லை; படபடப்பு இல்லை. அவற்றிற்குப் பதிலாக அவனையறியாமல் எப்படியோ ஏற்பட்டுவிட்ட பயம் இருந்தது; உருத் தெரியாத ஒரு பீதி, இருந்தது. ஆனல் அந்த பீதி-பயம் எதைப் பற்றியது என்று அவனுக்கேதெரிய

**யாருக்கு பாக்கியம் ?**

எண்பது வயதான ஒருவரின் பிறந்த நாள் விழாவில் பலர் அவரைப் புகைப்படம் பிடித்தார்கள். அவர்களுள் ஒருவன் அவரிடம் சொன்னான்;

'ஐயா! இதுபோலவே உங்களுடைய நூற்றாண்டு விழாவிலும் படம் எடுக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்க வேண்டும் !'

அதற்கு அவர் இப்படிச் சொன்னார் :

'ஏன் தம்பி இவ்வளவு அதைரியப்படுகிறாய் ? உனக்கு ஒன்றும் அவ்வளவு வயதாகிவிடவில்லையே! நீ வாலிபன்; அதோடு நல்ல திடகாத்திரனாகவும் இருக்கிறாயே !'

வில்லை. என்றாலும் எதனாலோ தூண்டப்பட்டு, அவள் பின்னாலேயே நடந்தான் அவன்.

குறிப்பிட்ட தூரம் கடந்ததும், அவள் ஒரு வீட்டின் பின்புறமாக உள்ளே நுழைவது தெரிந்தது அவனுக்கு. அதைக் கண்டதும் விரைவாக நடந்தான் அவன். வீட்டிற்குள் நுழைவதற்குள் ஒருமுறை பார்த்து விட வேண்டும் என்ற ஆசை அவனுக்கு.

வீட்டின் கதவை நெருங்கிவிட்ட அவள், கதவின் அருகில் நின்றுகொண்டு திடீரென்று பாதையைத் திரும்பிப் பார்த்தாள். ஒரே ஒரு கண் வெட்டு நேரம்தான். அதற்குள் அவள் பார்வை, பாதையில் வந்துகொண்டிருந்த மாதவனை முற்றுகையிட்டுவிட்டுத் திரும்பிவிட்டது. பிறகு அவள் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போய்விட்டாள்.

முதல் நாள் பெற்ற போதையை மறக்கமுடியாமல் மறு நாள் கடையைத் தேடிவரும் குடிகாரனைப் போல, அடுத்த நாள் மாதவன் அதே நேரத்தில் அங்கே வந்துகொண்டிருந்தபோது, அவளும் சொல்லி வைத்தாற்போல் வந்துகொண்டிருந்தாள். இன்று அவளுடைய நடையிலும், தோற்றத்திலும் கொஞ்சம் வித்தியாசம் தெரிந்தது. அது பெருக்கலுக்கும், வகுத்தலுக்கும் உள்ள பெரும் வித்தியாசமல்ல; கூட்டலுக்கும், பெருக்கலுக்கும் உள்ள குறைந்த வித்தியாசம்தான் !

இருவரும் கொஞ்ச தூரம் நடந்தார்கள். ஒரு இடத்தில் திடீரென்று அவள் நின்று, அவனை முன்னால் போகவிட்டாள். அவளது அந்த எதிர்பாராத செயல், அவனைத் திகைக்க வைத்துவிட்டது. அவனால் இப்போது முதல் நாளைப் போல் யாருக்காகவோ நிற்பது போல் நிற்கவும் முடியாது. வேறு என்ன செய்வது ? அவன் பேசாமல் முன்னாலேயே நடந்தான்.

'மன்னிக்கணும். மாதவன் தானே உங்க பேரு ?'

யார் அந்தக் கேள்வியைக் கேட்கிறார்கள் ? அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். யாரும் பக்கத்தில் இல்லை. அப்படியானால் அவளா கேட்கிறாள் ? அவளா ? ஒரு வேளை யாரோ கேட்பதுபோல் அவன் கற்பனை செய்துகொள்கிறானா ? அப்படியானால் திரும்பவும் அந்தக்குரல் கேட்கிறதே !

'நான்தான் கேட்கிறேன் !'

அவனுடையதிகைப்பைப்பார்த்துவிட்டு, அவளே திரும்பவும் கேட்டாள்.

'ஆமா... மாதவன்தான்... உங்க பேரு பத்மா இல்லை ?'

'ம்...அதுதான். பத்மா தான். அருணகிரி ஐயங்கார் பொண்ணு'

'சந்தோஷம்.....அப்பா சௌக்கியமா ?'

'ஓ ! இருக்கார். உங்களைப் பத்தி அவர் ரொம்ப சொல்லியிருக்கிறார் !'

'ஹி...ஹி...ஆமாம்; தவறுதான். நான் அவர்கிட்ட தப்பாதான் சண்டை போட்டுட்டேன். அது இப்பதான்-இவ்வளவு படுச்சு உல

கத்தைப் புரிஞ்சுக்கிட்ட பெறகு தான்-தெரியுது!...'

'நீங்க, அவருக்கும் உங்களுக்கும் நடந்த சண்டையைப் பத்திச் சொல்றீங்களா? அவர் அதை எப்பவோ மறந்துட்டாரே! இப்ப அவர், நீங்க 'மீட்டிங்'கில பேசறது, பத்திரிகையில கதை எழுதறது, உங்களைப் பத்தி மத்தவா புகழ்றது...இதைப் பத்தில்ல சொல்றார், என்னோட 'ஸ்டூடண்ட்'டுண்ணு, பெருமையா!...நீங்க அதைப் போய்ச் சொல்றேளே!...'

'அப்படியா? ரொம்ப சந்தோஷம். நான் அவரைக் கேட்டதாகச் சொல்லணும்!...'

'ஓ, சொல்றேன்! கட்டாயமாச் சொல்றேன்!'

என்ன முட்டாள்தனம்! இவளைப் போய் இவள் அப்பாவிடம் நாம் கேட்டதாகச் சொல்லச் சொல்கிறோமே! என்று தன் புத்தியைத் தானே நொந்துகொண்டான் மாதவன்.

அந்தப் 'புத்திசாலி'த்தனத்தை உணர்ந்துகொண்டதனாலோஎன்னவோ, பிறகு அன்று அவன் எதையும் அவளிடம் பேசவில்லை. பேசாமல் தன் போக்கில் சென்றான்.

அதற்கு அடுத்தநாள் அவளைக் கண்டபோதுதான், அவன் அந்தப் புன்னகையைத் தரிசித்தான். அடேயப்பா, அந்தப் புன்னகைக்குத்தான் எத்தனை சக்தி! அவளுக்கு வாய்விட்டுச் சிரிக்கத் தெரியாது போலிருக்கிறது. புன்னகை செய்து செய்து பழக்கப்பட்டிருப்பவர்கள் மட்டுமே, இவ்வளவு அழகாக, கவர்ச்சியாக, கச்சிதமாகப் புன்னகை புரியமுடியும்!

அந்தப் புன்னகை தொடர்ந்தது. ஏதோ ஒரு செடியில் தினம் தவறாமல் ஒரே ஒரு பூப் பூக்குமாமே அதுபோல, நாள் தவறாமல் அந்தப் புன்னகை மலர்ந்தது. தினமும் மாதவன் வருவான்; பத்மாவும் வருவாள். முதலில் ஒரு பார்வை; முதல்நாள் கொல்லைப்புறக் கதவின் அருகில் நின்று பார்த்தாளே, அது போன்ற பார்வை! பிறகு ஒரு புன்னகை!

இந்தக் கதை தொடர்ந்தது.

அவனைக் கண்டதும் அப்படிப் பார்க்கும், புன்னகை புரியும் அவளுடைய அந்தச் செய்கை...!

மாதவன் பெருமிதத்தால் விம்மினான்.

அந்தப் பெருமையை மேலும் உயர்த்தும் சம்பவம், ஒருநாள் நடந்தது.

வழக்கம்போல் நடந்து போய்க்கொண்டிருந்தபோது, அவள் கேட்டாள்:

'நீங்க, சாயங்காலம் இந்தப் பக்கம் வர்ரதில்லையா?...'

'எப்போதாவதுதான் வருவேன்; தினம் இல்லை!'

'நான் தினம், அஞ்சு மணிக்கு வருவேன்!...'

அப்படியானால், அவள் தினமும் மாலையிலும் அவனை எதிர்பார்க்கிறாளா? இல்லாவிட்டால் ஏன் அப்படிக் கச்சிதமாக மணிக்கணக்கைச் சொல்லவேண்டும்? ஆமாம் ஏன் அவள் மாலையிலும் வரச் சொல்கிறாள்?

கேட்டுவிட வேண்டும்போல் தான் இருந்தது, மாதவனுக்கு.

### அனுதாபத் தீர்மானம்!

'என் அப்பாவிடம் என்னைத் திருமணம் செய்துகொள்ளப்போவதாகச் சொல்லிவிட்டீர்களா?'

'ஆமாம்!'

'அவர் என்ன சொன்னார்?'

'என்னைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, விக்கி விக்கி அழுதார்!'



ஆமாம் அவள்தான் அப்புறம் எதுவும் பேசவேயில்லையே!

அன்று முதல் மாலையிலும் அல்லிக் குளத்தை 'முற்றுகை'யிடும் வேலையை அவன் மேற்கொண்டான். இப்போது நாள் தோறும் புன்னகையும், பார்வையும் மொத்தம் நான்குமுறை விரிந்தன. அவ்வளவுதான்; அவ்வளவேதான்! அதற்கு மேல் எதுவுமே இல்லை!

இடையில் எப்போதாவது அவள் [illegible] பேசமாட்டாளா [illegible] அவன் எதிர்பார்ப்பான். ஊஹூம்; அவள் வாய் திறந்தால்தானே! ஒரு வார்த்தை கூட அவள் வாயிலிருந்து வராது.

ஒரு நாள் அவள் பேசுவதற்குரிய சந்தர்ப்பத்தை எப்படி உருவாக்குவது என்பதையும் அவன் கண்டு பிடித்து விட்டான்.

அவனது தந்தையாரின் தவிர்க்க முடியாத கட்டளை காரணமாக வெளியூர் திருமணம் ஒன்றுக்கு அவன் செல்ல வேண்டியதாயிற்று. போய்த் திரும்ப மூன்று நாட்கள் ஆகிவிட்டன. மூன்ருவது நாள் அவளைக் கண்டபோது, அவளது கண்களில் தனியான ஒளி ஒன்று மின்னுவதை அவன் காண முடிந்தது.

அன்றும் அவள்தான் ஆரம்பித்தாள்:

'மூணு நாளா, ஆளே கண்ணுல படலையே...!'

'ஆமாம். வெளியூருக்குப் போயிருந்தேன்; ஒரு கல்யாணம் !'

'கல்யாணமா? நல்ல வேளை. உங்களுக்கேகல்யாணம் இல்லையே!

அதற்கு மாதவன் என்ன பதில் சொன்னுன் என்பது அவனுக்கே தெரியாது. சரியாக எதுவுமே சொல்லத் தெரியவில்லை அவனுக்கு. வெறுமனே அசட்டுச் சிரிப்பொன்று சிரித்துக்கொண்டான் அவன். அது முட்டாள்தனத்தையும், புத்திசாலித்தனத்தையும் ஒரே நேரத்தில் பிரதிபலிக்கும் சிரிப்பு. ஆனுல் அவளுடைய 'நல்ல வேளை, உங்களுக்கே கல்யாணம் இல்லையே !' என்ற வார்த்தைகள்மட்டும் அவன் நெஞ்சைவிட்டு மறைய மறுத்துவிட்டன.

அது முதல்தான் தொடர்ந்தாற் போல் இரண்டு மூன்று நாட்கள் அவளைக் காணுமலிருந்துவிட்டால், அவள் ... நிச்சயமாகப் பேசுவ... ன்ட ... துவிட்டது அவனுக்கு. ஆ... அவள் பேச வேண்டும் என்பதற்காக, அவளைத் தினசரியும் பார்க்காமலிருக்கமட்டும் அவனுல் முடியவேயில்லை.

கொஞ்சம் கொஞ்சமாக செய்தி அவனுடைய 'அல்லிக்குள நண்பர்' களுக்கு எட்டியது. தான் பத்மாவைப்பற்றிச் சொல்லியதிலிருந்து, எட்டு மணிக்கே குளிக்கக் கிளம்பிவிடும் மாதவனின் சுறுசுறுப்பை விவரிக்கத் தொடங்கிய சங்கரனின் 'கண்டுபிடிப்பு'கள் அவர்களின் காதுகளையும், கருத்துகளையும் நிறைத்தன. இப்பொழுதுமாதவனை எங்கே கண்டாலும், 'எப்போ கல்யாணம்?' விவகாரசெல்லாம்எப்படிஇருக்கு?' 'களவியல் கூட முடுஞ்சுடுத்தோ ?' என்றெல்லாம் கிண்டல் செய்யத் தொடங்கிவிட்டார்கள் அவர்கள்.

அவர்களுடைய அந்தக் கிண்டல்கள் அவனுக்கு மகிழ்ச்சியையே அளித்தன. அவன் அவர்களின் கிண்டல்களை எண்ணி எண்ணி மகிழ்ந்தான். நினைத்து நினைத்துச் சிரித்தான். இதையெல்லாம் பத்மாவிடம் சொன்னுலென்ன ? சொல்லி, அவளையும் தன்னைப் போல் சிரிக்க வைத்தாலென்ன ? என்றும் எண்ணினுன். சொல்லிவிடவும் திட்டமிட்டான். எல்லாம் அவனுக்குள்ளே தான் ! ஆனுல் ஏனே தெரியவில்லை, அவளைக் கண்டதும் அதைச் சொல்லவேண்டும் என்று அவனுக்குத் தோன்றவேயில்லை. அதுவரை முடிவு செய்துவிட்டு,அவளைக் கண்டதுமே அந்த முடிவைக் கைவிட்டுவிடும் அவனுடைய போக்கு அவனுக்கே கூடப் புரியவில்லை. அவளுடைய பார்வையும், புன்னகையும்...... அவனுல் எதையும் அவளிடம் சொல்ல முடியவில்லை. நேரில்தான் சொல்ல முடியவில்லை, எதையாவது எழுதிக் கொடுத்து, அதோடு மேலும் சில விவரங்களையும் அவளிடம் கேட்கலாம் என்று அவன் எண்ணினுன். எழுதியும் எடுத்துக்கொண்டு போனுன். ஆனுல் கொடுக்கமுடிந்தால்தானே! அந்தப் பார்வையும், புன்னகையும் தான் அவனைச் செயலற்றவனுக்குகின்றனவே! பலமுறை கொண்டு போய்க் கொண்டுவந்து கிழித்துப் போட்டதுதான் மிச்சம் !

இரண்டு ஆண்டுகள் !

இந்த நாட்கள்தாம் எத்தனை விரைவாகப் போய்விட்டன! அந்தப் பார்வையும், புன்னகையும்தான்

அவற்றையும் விரட்டி விரட்டி அடித்தனவோ ?

பிறகுதான் திடீரென்று அது நடந்தது. தொடர்ந்தாற்போல் ஒரு வாரமாக அவளைக் காணவில்லை. எட்டாவது நாள் அவனுக்குவந்த கடிதங்களோடு, ஒரு அழகான திருமண அழைப்பும் இருந்தது. மணமகள் ?...பத்மாதான் !

அவனுக்கு எதுவுமே ஓடவில்லை. என்ன செய்வதென்றே புரியவில்லை. அவளையும் காணமுடியவில்லை. இவ்வளவு அவசரமாக அவளுக்குக் கல்யாணம் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதன் காரணமும் தெரியவில்லை. ஒருவேளை அவளுக்கும் அவனுக்கும் இருக்கும் அந்த 'உறவு' அவள் வீட்டாருக்குத்தெரிந்திருக்குமோ? என்ன இருந்தாலும் அவளுக்கு விருப்பமில்லாமல், கட்டாயப்படுத்தி நடைபெறும் இந்தத் திருமணம்......அவன் தனக்குள்ளேயே புழுங்கினான். திருமண அழைப்பை அனுப்பிய அவள்,ஏன் தன்னைக் கைவிட்டு விடாமல் அழைத்துச்செல்ல அவனுக்குக் கடிதம் எழுதவில்லை? அப்படியானல்......?அவனல் எதையுமே நிதானமாக யோகிக்க முடியவில்லை. தன்னுடைய கோழைத்தனம் காரணமாக பத்மா விருப்பமில்லாத எவனுக்கோ மாலையிடுவதாகவும், எப்பொழுதும் அவனை நினைத்து அழுது கொண்டிருப்பதாகவும்.. ... இன்னும் எதை எதையோ நினைத்து மாதவன் தனக்குள் அழுதான்.

அவன் போகாமலே பத்மாவின் திருமணம் சிறப்பாக நடைபெற்ற சேதியை, அவனுடைய நண்பர்கள் தெரிவித்தார்கள். அதோடு விட்டிருந்தால் பாதகமில்லையே, அவர்களுடைய 'உறவை'ப் பற்றியுமல்லவா அவர்கள் கேட்டுத் துளைத்தார்கள் !

அது முதல்தான் மாதவன் அவளைப் பார்க்கவேண்டும் என்பதோடுகூட, எப்படியும் அவளைக் கண்டு அதைப் பற்றிக் கேட்டுவிடுவது என்று திட்டமான முடிவுக்கு வந்தான். அந்த முடிவு திருமணத்துக்கு முன்பைவிட பின்பு தவிப்பாகவேகூட நின்றது; இலட்சியமாகவேகூட உருவெடுத்தது. நாள்தோறும் அல்லிக்குளத்தைக் 'காவல் காக்கும் !' வேலையையும் அவன் மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

இருட்டு வந்துகொண்டிருந்தது. கைக்கெடிகாரத்தின் முட்களைச் சற்று உற்றுப்பார்த்தால்தான் நேரத்தைச் கண்டுபிடிக்க முடியும். அவ்வளவு நேரம் ஆகிவிட்டது. இன்றும் ஏமாற்றம்தாஞ என்று சலித்துக் கொண்டே எழுந்தான் மாதவன். யாரோ எதிரில் வருகிறார்களே, யார் அது? அவள் போலவே இருக்கிறதே ! ஆமாம், அவள்தான்; பத்மாதான் !

அவன் அடித்தொண்டையிலிருந்து கத்தினான் :

'பத்மா !'

அந்தக் குரலில் ஆசையும், வெறியும், ஆவேசமும், ஆச்சரியமும் இன்னும் எல்லா உணர்ச்சிகளும் மிதந்தன.

பழக்கமான அவனுடைய குரல் கேட்டு, அவள் நிமிர்ந்தாள். அவனை அப்பொழுது அவள் எதிர்பார்க்கவேயில்லை போலிருக்கிறது. அந்தப் பார்வையில் எதிர்பார்க்காததைக் காணும் ஆச்சரியம் நிழலிட்டது. அது கொஞ்ச நேரம்தான். பிறகு அதே பார்வை !...அதே புன்னகை!

'ஓ ! மாதவனா? என்ன இப்படி, ஆளே உருமாறி விட்டீர்கள் ? உடம்பு சரியில்லையா ?

அவனல் அதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. என்ன சொல்வது ?

பிறகும் அவளேதான் பேசினாள் :

'அது இருக்கட்டும்; நீங்கள் ஏன், என் கல்யாணத்துக்கு வரவில்லை? நான் உங்களைக் கண்டிப்பாக எதிர்பார்த்தேன். அப்பாகூட நீங்கள் நிச்சயம் வருவீர்கள், வருவீர்கள் என்று சொல்லிண்டேருந்தார். அவர்தான் அழைப்பு அனுப்பினாராமே !...நானே உங்

களை நேரே அழைக்கலாம்'னு தான் இருந்தேன். ஆனாலும் கல்யாணப் பொண்ணேயா கல்யாணத்துக்கு அழைக்கிறது? வெட்கமாருக்காதா? அதோட பாருங்கோ... கல்யாணத்துக்கு ரெண்டு வாரத்துக்கு முன்னாலயே, திடீர்னுகிணத்துக்கு தண்ணி எடுக்க நான் போக வேண்டாம்'னு, அப்பா சொல்லிட்டார். நான் என்ன செய்யறது? இருக்கட்டும். ஆனாலும் நான் உங்கமாதிரிஇருக்கமாட்டேன்.நீங்க அழைச்சாலும், அழைக்காட்டாலும் கண்டிப்பா உங்க கல்யாணத்துக்கு வந்து விருந்து சாப்பிடுவேன்...இப்போ எனக்கு நேரமாச்சு...வரட்டுமா?... இன்னும் ரெண்டு மூணு நாளானா மாப்பிள்ளை அகத்துக்குப் போகவேண்டியிருக்கும்...வரேன்!'

அவனுடைய பதிலை எதிர்பார்க்காமலே அவள் போய்விட்டாள். போகும்போதும் அதே பார்வை!... அதே புன்னகை!...

அவனை எதிர்பார்த்தாளாமே! அவளுடைய கல்யாணத்துக்கு.

அவனுடைய கல்யாணத்துக்கு அவன் அழைக்காவிட்டாலும், அவள் வருவாளாமே! வந்து விருந்து சாப்பிடுவாளாமே! அப்படியானால்...

அப்படியானால் ஆளை விழுங்கிவிடுவதைப்போல் பார்ப்பாயே, அதற்கு என்ன அர்த்தம்? நாள் தவறாமல் புன்னகை செய்து கிரங்க வைப்பாயே அதற்கு என்ன அர்த்தம்? இப்பொழுது போகும்போதும்அதே பார்வையை, புன்னகையை வீசி விட்டுச் செல்கிறாயே, அதற்கு என்ன அர்த்தம்?

அர்த்தமில்லாத அந்த 'உறவை' எண்ணி அவனுக்கு சிரிப்பதா,அழுவதா என்றே தெரியவில்லை.

**'உனக்கும் எனக்கும்**
**உறவு காட்டி**
**உலகம் சொன்னது கதையா?'**

என்ற பாடலை எப்படித்தான் அப்போது அவனால் முணுமுணுக்க முடிந்ததோ, அதுவே ஆச்சரியம் தான்! ★

# இந்தியத் துணைக்கண்ட மக்கள் தொகை - சில விபரங்கள்

இந்தியத் துணைக்கண்டத்தில் ஆண்களின் எண்ணிக்கை பெண்களின் எண்ணிக்கையைவிட அதிகமாக இருக்கிறது. ஆண்கள், பெண்கள் ஆகிய இருபாலார் விஷயத்திலும் மணமானவர்களின் எண்ணிக்கை மணமாகாதவர்களின் எண்ணிக்கையைவிட அதிகமாகும்.

ஆனால் மனைவியை இழந்தவர்கள் அல்லது விவாகரத்துச் செய்துகொண்ட ஆண்களின் எண்ணிக்கையானது, விதவைகள் அல்லது விவாகரத்துச் செய்துகொண்ட பெண்களின் எண்ணிக்கையில் பாதிகூட இல்லை. அவர்களில் பெரும் பகுதியினர் 45 வயதுக்கும் 54 வயதுக்கும் உட்பட்டவர்கள்.

சீரமைக்கப்பட்ட மாநிலங்களுக்கான 1951ம் வருடத்திய மக்கள் தொகையின் மாதிரித் தகவலை ரிஜிஸ்திரார் ஜெனரல் சமீபத்தில் வெளியிட்டிருக்கிறார். இந்த விவரங்கள் சுமார் 350 லட்சம் பேர் சம்பந்தப்பட்டதாகும். இப்புதிய அட்டவணைகளில், கல்வி, ஜீவியம், மணமானவர்கள், விதவையானவர்கள், மணவிலக்கு செய்து கொண்டவர்கள் முதலியவர்கள் சம்பந்தமான பழைய புள்ளி விவரங்கள் புதிய ரீதியில் முறைப்படுத்தித் தரப்பட்டுள்ளன.

கேரளாவில்தான் மணமாகாதவர்களின் எண்ணிக்கை மிக அதிகமாக இருக்கிறது. அங்கே 60.2 சதவிகிதம் ஆண்களும், 48.2 சதவிகிதம் பெண்களும் தனித்த வாழ்வு நடத்தி வருகின்றனர். இது விஷயத்தில் பீஹார் கடைசிப் படியில் இருக்கிறது. அங்கே மணமாகாத ஆண்கள், பெண்கள் ஆகியோரின் எண்ணிக்கை சுமார் 15 லட்சம் ஆகும். மாதிரித் தகவல் விவரத்தில் அடங்கியுள்ள ஜனத்தொகையின் மொத்த எண்ணிக்கை சுமார் 38 லட்சம் ஆகும்.

கல்வி விஷயத்தில் கேரளாதான் இந்தியாவில் முதல் ஸ்தானத்தை வகிக்கிறது. ஆனால், கேரளாவுடன் மலபார் மாவட்டம் சேர்க்கப்பட்டதன் காரணமாய் அங்கே எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் விகிதாசாரம் ஆண்கள் விஷயத்தில் 6.1 சதவிகிதமும், பெண்கள் விஷயத்தில் 7 சதவிகிதமும் குறைந்துவிட்டது.

ஜீவனோபாய ரீதியில் புள்ளிவிவரங்களைப் பிரித்துக் கணித்தால், விவசாயம்தான் உன்னத ஸ்தானம் வகிக்கும். விவசாயத்தில் சுமார் 250 லட்சம் பேர் ஈடுபட்டிருக்கின்றனர். வர்த்தகத் துறையில் 20 லட்சம் பேரும், போக்குவரத்து ஸ்தாபனங்களில் $5\frac{1}{2}$ லட்சம் பேருக்கு மேலும் ஈடுபட்டுள்ளனர். விவசாயத் துறையில் ஆண்களும் பெண்களும் சமமாக இருக்கின்றனர்.

மொத்தம் 350 லட்சம் பேரில் சுமார் 290 லட்சம் பேர் கிராமாந்தரங்களிலும், சுமார் 60 லட்சம் பேர் நகர்ப்புறங்களிலும் வசிக்கின்றனர்.



# சென்ற இதழ்

> இது புதிய பகுதி. சென்ற இதழ் பற்றிய முழு விமர்சனம் இங்கு தரப்பட்டிருக்கிறது. இந்த இதழ் பற்றியது அடுத்த இதழில் வரும். வாசகர்கள் ஒவ்வொரு இதழ் பற்றியும் தங்கள் விமர்சனத்தை எழுதலாம். எழுதப்பட வேண்டியது விமர்சனம்; வெறும் பாராட்டுக்கள் மட்டுமல்ல.

ஆசிரியர் கண்ணதாசன் அவர்களுடைய **"ஆட்டனத்தி ஆதிமந்தி"** தொடக்கம் முதற்கொண்டு பயந்து வந்த கவிதை இனிப்பை, முற்றுந் தறுவாயிலும் முழுக்க முழுக்கக் கொடுப்பது பெரிதும் மகிழ்ச்சிக்குரியது. அக்குறுங் காவியத்தின் இறுதியில் உள்ள,

**"துறவெனில் எண்ணந்தானே ?**
**தொடருநல் அழகைக் கூடத்**
**துறந்திடல் ஏலா தன்றோ ?"**

என்ற பாடல் வரிகள் குறிப்பிடத்தக்கன.

**"நாட்டுப் பண்", "மருந்தே வாராய்"** என்ற இரண்டு கவிதைகளும் ஒவ்வொரு வகையில் சிறப்புடையனவாகத் திகழ்கின்றன. "நாட்டுப் பண்" "ஜன கணமன" என்னும் பாடலின் ஒலி அலையில் வடிவம் பெற்று, இசைக்க இன்பஞ் சேர்க்கிறது. "மருந்தே வாராய் !" என்ற கவிதையில் உணர்ச்சி கொழிக்கிறது; இனிமை சொட்டுகிறது. என்றாலும், அக்கவிதையின் உள்ளீட்டில் புதுமை ஒன்றும் இல்லை என்பதைக் கூறாதிருக்க இயலவில்லை.

கட்டுரைகளில், **"செக் தமிழறிஞர் கமில் சுவெலெபில்"** என்னும் பேட்டிக் கட்டுரையை மனமாரப் பாராட்டத் தோன்றுகிறது. கமில் சுவெலெபில் அவர்களுடைய தமிழறிவையும், தமிழ் மொழியின் அருமைபற்றிய அவர்கள் கருத்துக்களையும் அறிய நெஞ்சம் மகிழ்கிறது. நெஞ்சை அள்ளும் தெள்ளுதமிழின் மேன்மையை அறியாமல் உறங்கிக் கொண்டிருக்கும் எண்ணற்ற தமிழர்கள் உள்ளத்தில், அத்தமிழறிந்த புலவரின் சொற்கள் கிளர்ச்சியை நிச்சயம் உண்டாக்கும்.

**"கவிக் குயிலின் கான"**த்தில் கவிஞர் இக்பாலின் புரட்சி வித்துக்கள் அழகுபடத் தரப்பட்டுள்ளன. சோம்பிக் கிடக்கும் நெஞ்சங்களில் சுறுசுறுப்பையும் விழிப்பையும் ஏற்படுத்தும் ஆற்றல் அக்கட்டுரைக்கு உண்டென்றால் அது மிகையாகாது.

மலையாள எழுத்தாளர் **"கேசவதேவ்"** பற்றிய கட்டுரை, வளரும் எழுத்தாளர்கட்கு வழிகாட்

டியாக அமைந்திருக்கிறது எனலாம். **"திராவிட மொழிகளில் நாடகக் கலே"** என்ற கட்டுரை இலக்கிய மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லே.

டென்னஸி வில்லியம்ஸ் அவர்களுடைய ஓரங்க நாடகம் நல்ல முறையில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. **"அந்தி"** என்னும் மகுடத்தைத் தாங்கிக்கொண்டிருக்கும்அந்நாடகம் உள்ளத்தைத் தொடுகிறது; நன்ருகத் தொடுகிறது.

இனி. 'முல்லே'யில் முகிழ்த்திருக்கும் முத்தான கதைகள் பல. அவைகளில் சத்துள்ள கதை **'உறவு'** ஒன்றுதான். கதையின் தொடக்கம், ஓட்டம், முடிவு கச்சிதமாக அமைந்திருக்கின்றன. கதையின் கருவைத் தனியாக எடுத்துப் பார்த்தால் பயங்கரம் தோன்றும். இருந்தபோதும் கதையின் கட்டுக்கோப்பால் கருவில் புதைந்திருக்கும் பயங்கரத்தை நாகரிகமாக மறைத்து கதையை ஓட்டிச் செல்கிருர் ஆசிரியர் புகழேந்தி. அவருடைய கைவண்ணம் மனமாரப் பாராட்டுதற்குரியது. சமுதாயத்தில் பதுங்கியிருக்கும் இது போன்ற கோளாறுகளே இவ்வளவு நாகரிகமாகச் சித்தரிக்கும் கதைகள், நிறைய வெளிவர வேண்டும்.

உடம்பில் பகட்டையும் உள்ளத்தில் இருட்டையும் வளர்த்துச் சென்னே போன்ற, பெரிய நகரங்களில் உலவும் இற்றைக் காலத்துப் போலி நாகரிகத்தைக் குத்திக்காட்டும் வகையில் அமைந்துள்ள **'மேல்பூச்சு'** ஒரு நல்ல கதை.

துப்பாக்கி வெடிகளில் தொடங்கி, கண்ணீர்த்துளிகளில முடியும் **'கைதியின் காதலி'** என்னும் கதையைப் படிக்கும் பொழுது, தமிழ்க் கதையைப் படிக்கின்ருேம் என்ற நினேவே அற்றுப்போகிறது. பாத்திரங்களுக்குச் சூட்டப்பெற்றுள்ள பெயர்களால் நேர்ந்த கேடு இது. உண்மையில் இது ஒரு பெரிய குறையாகும். குறிப்பிடுவதற்குச் சிறப்பாகக் கதையில் ஒன்றையும் காணேம்.

அடுத்தபடியாக, நீண்டு நெடுக வளர்ந்திருக்கும் **'செந்தாமரை'**யைப் பற்றி ஏதேனும் சொல்ல வேண்டுமானுல்... என்ன சொல்வது? கதையின் கட்டுக்கோப்பில் தளர்ச்சி காணப்படுகிறது. இக்கதையில் வரும் 'குடிலன்' (வில்லன்) திரைப்படக் கதையில் தோன்றும் 'குடிலர்'களேக் கவனப்படுத்துகின்ருன். என்னவோ! கதையைப் படித்து முடித்தவுடன் தவிட்டுத்தூரலும் எள்ளடித்த களமும்தாம் நினேவிற்கு வருகின்றன. கதையிலும் கட்டுரையிலும் அடங்காத எழுத்தோவியங்கள் சில உள்ளன: அவைகளில்...

**'அன்பிலா நெஞ்சில் தமிழில் பாடி...'** ஓர் உணர்ச்சிப்பொறி,

**'ராஜிமை'** ஒரு பேச்சுத் துணுக்கு.

**'சஞ்சல புருஷன்'** ஓர் உருவகச் சித்திரம்.

**'மங்கையும் மணிமகுடமும்', 'கல்யாணி', 'இயற்கை அன்னேயின் எச்சரிக்கை'** முதலிய எழுத்தோவியங்களும் பரவாயில்லே; படிக்கலாம்!

—இரா. வேங்கடபதி, சென்னே-30

**ஆட்டனத்தி-ஆதிமந்தி**

அத்தியும், ஆதிமந்தியும், மருதியும் வந்துபோகும் இந்தக் குறுங் காவியம் இந்த இதழோடு முற்றுப் பெற்றிருக்கிறது. தொடக்கம் முதல் அருமையாக வந்துகொண்டிருக்கும் கவிதை வரிகளைப் பாராட்டாதோர் இருக்க முடியாது. இந்த இதழில்தான் என்ன, அப்படிப்பட்ட வரிகள் இல்லாமலா இருக்கின்றன! கதைச் சம்பவங்களை விடுங்கள்; கால ஓட்டத்தை ஆசிரியர் சொல்கிறார் பாருங்கள் :

**கீழ்த்திசை வானில் வெள்ளி**
**கிளம்பிடும்; கதிரோன் நாட்டை**
**வாழ்த்திட வருவான்; வான**
**வரம்பிடை ஊர்வான்; மீண்டும்**
**மேற்றிசை படுப்பான்; அந்தி**
**மேனியைக் காட்டும்; பாதை**
**தோற்றிட ஒளியை நல்கத்**
**தோன்றுவாள் நிலவுப்**
**பெண்ணும்!**

ஒரு பருக்கை போதாதா, ஒரு பானைச் சோற்றைப் பதம் பார்க்க?

**நாட்டுப் பண்**

முடியரசன் அவர்களின் பாடல் இது. சுவையாக இருக்கிறது.

**அந்தி**

டி. எச். லாரன்ஸ் பற்றி டென்னஸி வில்லியம்ஸ் எழுதிய ஓரங்க நாடக மொழிபெயர்ப்பு இது. லாரன்ஸின் தத்துவங்கள் நிறைந்து கிடக்கின்றன, நாடகத்தில். நல்ல நடை. நம்மையறியாமலே லாரன்ஸிடம் அனுதாபம் கொண்டுவிடுகிறோம் நாம்.

**மேல்பூச்சு**

பட்டண வாழ்வின் போலித் தன்மையைச் சித்தரித்திருக்கிறது. நாகரிக உலகில் நாளும் நடக்கும் சம்பவத்தை-சாதாரணமாக நம் சிந்தை தொட்டுப் போகும் நிகழ்ச்சியை கேலியும், கிண்டலும் கலவையிடும் முறையில் கதையாக்கி இருக்கிறார் எழுதியவர்.

லாவகமான நடை கதை முழுதும் ஒரே சீராக வரியிட்டிருக்கிறது. கதைப்போக்கில் தொய்வோ, தேக்கமோ இல்லாததும் குறிப்பிடத்தக்கது.

இவர் நல்ல கதைகளை அதிகமாக எழுதுபவர். இன்னும் எழுதலாமே!

**செக் தமிழறிஞர்**
**கமில் சுவெலெபில்**

சுவையும், பயனும் மிகுந்த பேட்டி விபரங்களைத் தந்திருக்கிறார் அன்பெழில்.

**உறவு**

துணிச்சலான முயற்சி. சிக்கலில்லாத, தெளிவான நடை; நயமான சொல்லாட்சி கதையை விரசமாக்காமல்காப்பாற்றுகிறது. விரல்விட்டு எண்ணக்கூடிய சில சிறந்த தமிழ்க் கதைகளின் வரிசையில் இதனையும் வைக்கலாம்.

'பத்தினி இலக்கியம், பரத்தை இலக்கியம் என்பதில்லை; உயர்ந்தவை, தாழ்ந்தவை என்ற இரு பிரிவே உண்டு இலக்கியத்தில்'. இந்த அளவுகோலில் 'உறவு' உயர்ந்த படைப்பு!

கருத்தில் இருக்கும் புதுமை கதை சொல்லும் முறையில் இல்லை. சாதாரணமாகக் கதை போகிறதே தவிர எழுதியவரின் முத்திரையோ, தனி நுணுக்கங்களோ இல்லாதது பெருங்குறை. 'அந்திமக்கிரியைகளை' இத்தனை விரிவாக விபரமாக எழுதவேண்டியதில்லை.

மொத்தத்தில், காலவெள்ளம் அடித்துப்போகாத, நிலைத்து நிற்கும் கதை.

**மங்கையும் மணிமகுடமும்**

வரலாற்றின் ஒரு வியப்பான சேதியைச் சுவையாக எழுதியிருக்கிறார்.

**கல்யாணி**

சிறப்பான முடிவைக்கொண்ட நடுத்தரமான கதை. தெளிவு இல்லாவிட்டாலும் பாத்திரங்களுக்கு பண்பு இருக்கிறது.

இவரால் சிறந்த கதைகளை எழுதமுடியும்!

**கேசவதேவ்**

நிறைவுற்ற ஒரு மனிதாபிமானியின் நிகழ்ந்துகொண்டிருக்கும் வாழ்க்கையின் அழகான சித்தரிப்பு இந்தக் கட்டுரை.

போராட்டங்களிலேயே வளர்ந்தவர் தேவ். தொட்டில் பருவத்திலிருந்தே எதிப்பையும் கொடுமையையும் உணர்ந்த அவரது எழுத்துக்கள், புதியன விரும்புவோரின் 'வேத'மாகத் திகழ்கின்றன. இத்தகைய புரட்சி சிந்தனையாளரை முதன்முதலாக மாதவன் தமிழகத்திற்கு அறிமுகம் செய்திருக்கிறார்.

**திராவிடமொழிகளில் நாடகக்கலை**

நீண்ட வரலாற்றை சுருக்கமாகத் தொகுத்திருக்கிறார் சிவ. இளங்கோ. பயனுள்ள எழுத்து.

**அன்பிலா நெஞ்சில் தமிழில் பாடி**

சமீப காலமாக சிலர் எழுதிவரும் பாணியில் அமைந்த கதை போன்ற காவியம்.

**மருந்தே வாராய்!**

நல்ல சொற்களால் பின்னப்பட்ட கவிதை. இனிமையுமுண்டு.

**கைதியின் காதலி**

மேலைநாட்டு சாயலைத் தழுவிய கதை இது.

அலின, சார்லஸ், பீட்டர் போன்ற கதாபாத்திரங்கள் தோன்றும் இந்தக் கதை, தழுவலுமல்ல, தமிழ்நாட்டுக் கதையுமல்ல; இது புதுமையிலும் புதுமை! 'ஏதோ ஒரு கதை எழுதவேண்டும்' என்ற நினைப்பில் எழுதினால் அது எப்படியிருக்குமோ, அப்படித்தானிருக்கிறது 'கைதியின் காதலி'!

**கவிக்குயிலின் கானம்**

இக்பால்—அவரது கவிதை, அவற்றின் மகத்துவம் ஆகியவை பற்றிச் சொல்லும் சிறந்த கட்டுரை.

தெளிவான நடை இதன் சிறப்பியல்பு.

**செந்தாமரை**

'மஞ்சள் கயிறு' அதிகமாக அடிபடுகிறது இதிலே. எழுத்தில் ஓட்டம் தென்படும் அளவுக்கு உயிர் இல்லை. வேலியை உவமையாக்குவதற்காக, கதாபாத்திரத்திற்கே அந்த வேலையைக் கொடுத்திருப்பது 'என்னவோ'போலிருக்கிறது. பாத்திரங்கள் வெறும் சினிமாச் சித்தரிப்புகளையே நினைவிற்குக் கொண்டுவருகின்றன. அத்தனை பாத்திரங்களும் வெறும் பொம்மைக் கோடுகளாக வந்து போகிறார்கள்! கதையின் முதலும் முடிவும் இயற்கையை விட்டு வெகுதூரம் விலகியே நிற்கின்றன. நீட்டி, நெளித்து, வளைத்து நிறைய எழுதியிருக்கிறார்! என்ன செய்யலாம்? முழுமை இல்லையே, எதிலும்!

—சே. தம்பி, திருவனந்தபுரம்-1.

# மயிலாசனம்

## வ. சம்பந்தன், பி.ஏ.,

நடு நிசி. மையிருட்டு. சுடுகாட்டு அமைதி எங்கும் தாண்டவமாடிக் கொண்டிருந்த வேளை. பயங்கர அமைதியைக் கிழித்துக் கொண்டு 'பாராஉஷார்' என்று தூங்கிவழிந்து கொண்டே கோட்டைக்குள்ளே காவலாட்கள் எழுப்பும் கூக்குரல்... எங்கோ ஒரு நாய் அழும் குரல் அந்தகாரம் நிறைந்த குவாலியர் கோட்டையினுள்ளே எதிரொலித்தது. எல்லாம் அடங்கி ஒடுங்கி விட்டவேளை...ஆனல் இரு ஜீவன்கள் மட்டும் அந்த அகால நேரத்தில் கூட உறங்கவில்லை. ஒன்று ஆண்... மற்றென்று பெண்...காதலர்கள் இருவரும்...அவர்கள் முகத்திலே பிரேமையின் பூரிப்பில்லை...பிரிவின் துயர்தான் படிந்து கிடந்தது. ஆண் அழகன்...ராஜகளை முகத்தில்... எடுப்பான தோற்றம்...அரச குமாரன் அவன்...ஜஹாம்பனு ஷாஜகான் பாதுஷாவின் புதல்வன்... பெயர் முராட்...அவள் அவனுடைய ஆசைக்காதலி சரசாநிபாய்... ஆனல் ராஜகுமாரனின் நிலையில் இல்லை இப்பொழுது அவன். தற்சமயம் அவன் ஒரு காவல் கைதி. சொந்த சகோதரன் ஔரங்கசீப்பினுல் குவாலியர் கோட்டையினுள்ளே காவலில் வைக்கப்பட்டுள்ள காவல் கைதி. ஔரங்கசீப் சகோதரன் முராடை, குவாலியர் கோட்டையினுள் பாதுகாப்புக் கைதியாக அடைத்து வைத்தான். ஆனல் முராடினுயைமுரட்டுத்தனம் சும்மாஇருக்கவில்லை. அவனுடைய அந்தரங்க நண்பர்கள் கோட்டைக் காவலை முறியடித்து, முராடை வெளியேற்றிக்கொண்டுவர வேண்டுமென நாட்டிலே இரகசியமாக வேலை செய்தனர். அதனுடைய விளைவு இரவு முராட் கோட்டையிலிருந்து தப்பிச் செல்ல வேண்டிய வசதியை ஏற்படுத்திக்கொடுத்தது. அவன் ஒருவன் மட்டும்தான் இரகசியமாக தப்பிச் செல்ல முடியும்... அந்த நிலையில் அதுதான் சாத்தியமாக இருந்தது. தன்னுடன் கோட்டையில் அடைக்கப்பட்டிருந்த காதலியிடம் கடைசி முறையாக விடைபெற்றுக்கொள்ள வேண்டி அவளைச்சந்தித்தான் முராட். அதற்கப்புறம் அவர்கள் இருவரும் மறுபடியும் சந்திக்கிருர்களோ என்னவோ, யார் கண்டார்கள்?...பைத்தியக்காரி அவள். காதலன் பிரிவுச் செய்தி கேட்டு புழுவாய்த்துடித்தாள். பீறிட்டு வரும் துக்கத்தை அடக்க முடியவில்லை அவளால்; 'ஓ'வென்று அழுதாள் செய்தி கேட்டு. காதலியின் அழுகைக் குரலே அவனுக்குக் காலனுக வந்து சேர்ந்தது. அவளுடைய அழும் குரல்கேட்டு அரைத் தூக்கத்தில் ஆடிக்கொண்டிருந்த கோட்டைப் பாதுகாவலர்கள் உஷாராகி விட்னர். விளைவுபற்றிச் சொல்லவேண்டுமா? கோட்டையிலிருந்து தப்பிச் செல்ல வேண்டி முராட் போட்ட திட்டமெல்லாம் பகல் கனவானது தான் மிச்சம்! அவன் பிடிக்கப்பட்டு குற்றம் சாட்டப்பட்டு அவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது ஔரங்கசீப்பினுல். மறுநாள் பொழுது விடிந்தால் அவன் தலை மண்ணிலே உருளும். மறுநாள் காலை முகலாய சாம்ராஜ்யத்தின் மயிலாசனத்தில் அமர்ந்து நாட்டை ஆளும் யோக்கியதை படைத்த பாதுஷாவின் மகனின் தலை

மண்ணிலே சாய்க்கப்படும்; அதுவும் சொந்த சகோதரன் ஔரங்கசீப்பினால்!...

...மரணதண்டனை விதிக்கப்பட்ட முராட் அன்று இரவு பூராவும் தூங்கவேயில்லை. தூக்கம் எங்கிருந்து வரும்? சூழ்நிலை அவனிடம் விளையாடிய பயங்கர விளையாட்டைக் கண்டு அவன் உள்ளம் பொங்கியது. தன்னுடைய வாழ்க்கையே சூதாட்டக்காயாகிவிட்டது கண்டு, அவன் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது! நடுநிசியிருக்கும். தூரத்தே யாரோ எழுப்பும் அழுகுரல் அவன் காதுகளில் வந்து எதிரொலித்தது. அத்த சத்தத்தை தவிர வேறு சத்தமே கிடையாது. பயங்கரமான அமைதி ஆட்சி புரியும் அந்த இடத்திலே தன்னந் தனியனாக பாதுஷாவின் மகன் தன் உள்ளத்துடனே போராடிக்கொண்டிருந்தான் அந்த நட்டநடுநிசியில்! பயங்கரமான இரவும் கொடூரமான தனிமையும் சேர்ந்து, அவன் நெஞ்சத்திலே என்ன என்ன நினைப்புகளைத் தோற்றுவித்ததோ; கண்மூடவில்லை அவன். நினைவு எங்கோ ஓடியது. உடல்தான் குவாலியர் கோட்டையினுள் கிடந்ததே தவிர அவன் நெஞ்சுமட்டும் பழைய நினைவு அலைகளிலே மிதந்து கொண்டிருந்தது...

முராட் ஹிந்துஸ்தானத்தின் ஏகசக்ராதிபதியாகி விடவேண்டும் என்று துடிதுடித்துக் கொண்டிருந்த காலம் அது. பாதுஷா ஷாகான் உயிரோடு இருக்கும் பொழுதே பிள்ளைகள் நான்கு பேருக்குமிடையே சிம்மாசனத்திற்கான உரிமைப்போர் ஆரம்பமாகி விட்டது. நால்வருக்குள்ளே ஔரங்கசீப் வெகு சூட்சமக்காரன். நல்ல அறிவாளி...குடிக்கமாட்டான். பட்டத்திற்காக சகோதரர்களை ஒவ்வொருவராக ஒழித்துக்கட்டும் திருப்பணியிலே தன் மூளையையெல்லாம் செலவழிக்கத் தொடங்கினான் அவன். வைரக்கற்கள் பதித்த மயிலாசனத்திலே பாதுஷாவாக தான் அமருவதற்குத் தடையாக இருந்த தடைக்கற்கள் ஒவ்வொன்றையும் வெகு சாமார்த்தியமாக அகற்றிக் கொண்டே வந்தான் அவன். தன்னுடைய லட்சியத்திற்கு பெரிய தடையாக முராட் இருப்பான் என்பது ஔரங்கசீப்புக்குத் தெரியும். ஆகவே அவனை ஒழித்துக் கட்ட திட்டம் போட்டு வேலை செய்தான். முராடினிடம் வீரம் இருந்ததே தவிர, விவேகம் இல்லை. யாராவது தூக்கிவைத்தும் பேசினால் உச்சி குளிர்ந்துவிடும் அவனுக்கு. சூழ்ச்சிகளும் சதிச்செயல்களும் அரண்மனையிலும் அந்தப்புரங்களிலும் சர்வசாதாரணமாகி விட்டிருந்த அந்தக் காலத்திலே முராடினால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. அத்துடன் அவன் நல்ல குடிகாரன்...குஷிப் பேர்வழியும் கூட. வெறும் ஆர்ப்பாட்டமும் அலங்கார வாழ்வும் எத்தனை நாளைக்கு சமாளிக்க முடியும்? மயிலாசனத்தில் அமர்ந்து ஹிந்துஸ்தானத்தில் பாதுஷாவாக முடிகட்டிக் கொள்ள வேண்டும் என்று கொள்ளை ஆசை என்னவோ இருந்தது அவனுக்கு!

பாதுஷா ஷாஜகானின் அந்திமக் காலம் நெருங்கி விட்டது. ஆடி ஓடி ஓய்ந்து மூலையில் உட்கார்ந்து விட்டார் பாதுஷா. அரசாங்க அலுவல்களையெல்லாம் மூத்த மகன், பாதுஷாவின் அபிமானத்தைக் கவர்ந்த தாரா தான் பார்த்துக் கொண்டிருந்தான். தாரா மன்னனின் மனதைக் கவர்ந்தவன். அவனுடைய நேர்மையான நடத்தையும் உள்ளன்பும் மன்னரின் அன்புக்கு அவனைப் பாத்திர மாக்கின. அரசன் தலை எப்பொழுது சாயும் என்று கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தனர் மற்ற மூவரும். சகோதரர்களிடையே ஏற்பட்ட அதிகார வெறி... பட்டத்து ஆசை...நாட்டிலே இரத்தக் களரியையும் உள் நாட்டுச் சண்டையும் மூட்டி விட்டது. ஔரங்கசீப் டில்லியை நோக்கி

படை கொண்டு தாக்கினுன். தகப்பனுக்கு எதிராக மகன் போர் முரசு கொட்டினுன்! முராட் சும்மா இருப்பானு? அவனும் தன் படைகளைத் திரட்டிக்கொண்டு, டில்லியை நோக்கிச் செல்ல ஆரம்பித்தான். இரண்டு பேருக்குமே தான் பாதுஷாவாகி விடவேண்டுமென்று ஒரே ஆசை! இந்த சந்தர்ப்பத்தில்தான் சூழ்நிலை முராடுக்கு மிட்டாயில் விஷத்தை வைத்து ஊட்டியது! மயிலாசனத்தில் ஒருவர்தானே அமர முடியும்!...

முராடும் ஔரங்க சீப்பும் ஒரே திசையிலிருந்து டில்லியை நோக்கிப் படையெடுத்தனர். அவர்களுடைய படை முகாம்கள் அருகருகேதான் இருந்தன. முராட் ஔரங்க சீப்பை தொடர்ந்த மாதிரி படை திரட்டிக் கொண்டு வந்ததற்குக் காரணம் இருந்தது. ஔரங்க சீப் டில்லி சென்று வெற்றி பெற்றுவிட்டால், மன்னனுக தான் வரவேண்டும் என்ற தன் ஆசையெல்லாம் மண் மேடிட்டுப் போய்விடு மல்லவா? ஆகவே, ஔரங்கசீப்பைக் கண்காணித்துக் கொள்ளவேண்டும். முடிந்தால் அவனைத் தடுத்து நிறுத்தி விட்டு, தான்மட்டும் டில்லி சென்று வெற்றி பெற்றுவிட்டால் பின்பு மயிலாசனம் தனக்குத்தானே?... இவ்வாறு திட்டம் போட்டு வேலை செய்தான் முராட்...

சொந்த சகோதரர்கள் ஒருவருக்கொருவர் போர் முரசு கொட்டவே நாட்டிலே உள்ள அழிவுச் சக்திகளுக்கு கொண்டாட்டமாகி விட்டது. அமைதி குன்றினுல்தானே கொள்ளையும் அக்ரமமும் செய்ய முடியும்? ஏராளமானோர் இருவர் கட்சியிலும் சேர்ந்தனர். முராடின் கை மெல்ல மெல்ல ஓங்கியது! முராடின் பலம் சிறிது ஓங்கவே எச்சரிக்கையாகி விட்டான் ஔரங்க சீப். 'தானும் பட்டத்திற்கு வர முயற்சிக்கிறேம்' என்று முராட் தன்மீது கொண்டிருக்கும் சந்தேகத்தை முளையிலேயேகிள்ளியெறிய வேண்டும் என்று நினைத்தான் அவன். அதற்கான சதித்திட்டத்தை வெகு கூர்மையாகத் தீட்டினுன் முராடை ஊக்குவிப்பது போல், குறைவாக இருந்த அவனுடைய படைக்கு, குதிரைகளும் பணமும் கொடுத்தான் ஔரங்கசீப். இரண்டு பேரும் சேர்ந்து உட்கார்ந்து கலந்து பேசி, ஒரு முடிவுக்கு வந்து ஒன்ருக இரண்டு பேருமாகச் சேர்ந்து, டில்லியைத் தாக்க திட்டம் போடவும், கடந்த சமுகார் யுத்தத்திலே முராட் பெற்ற வெற்றியைப் பாராட்ட வேண்டியும் ஒரு விருந்து நடத்தப் போவதாகவும் அதற்கு முராட் வந்து கௌரவிக்க வேண்டுமென்றும், தனக்கு அரச பதவியிலே சிறிதும் பிரியமில்லாதது போலவும் சகோதரனுக்கு மிகவும் பணிவாகச் செய்தி அனுப்பினுன் ஔரங்கசீப். முராடின் நண்பர்கள் முராடை அனுப்ப ஒப்பவில்லை. தங்கள் தலைவனை ஔரங்க சீப்பினிடம் பேச்சு வார்த்தை நடத்த அனுப்ப அவர்கள் பிரியப் படவில்லை. ஔரங்கசீப்பின் சொல்லிலே நஞ்சு கலந்திருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரியும். வர முடியாது என்று பதில் அனுப்பி விட்டான் முராட். ஔரங்கசீப் இதற்கெல்லாம் சளைக்கவில்லை. தூண்டில் காரனுக்கு மீன் மீது தானே கண்! அவன் பொறுமையைக் கையாண்டான். தினந்தோறும் ஆள் மூலமாக தன்னுடைய அழைப்பை மட்டும் அனுப்பத் தவறவில்லை அவன். முராட் பிடிவாதமாக அவனுடைய அழைப்பை உதறித் தள்ளிக் கொண்டே வந்தான். கடைசியாக நூருடீன் என்ற முராடின் தலைமை மெய்க்காப்பாளனை எப்படியோ தன் வலையில் போட்டுக்கொண்டான் ஔரங்கசீப்... நூருடீன் துரோகியாக மாறினுன். முராடினிடம் ஆசை வார்த்தைகளைக் கொட்டி அளந்து...பேச்சிலே போதையை ஊட்டி எப்படியோ முராடின் மனதைக் கலைத்து விட்டான்



அவன். ஒரு நாள் ஔரங்கசீப்பின் கூடாரத்திற்கு முராடின் மனதைக் கலைத்து அவனை எப்படியோ அழைத்துக்கொண்டுவந்து சேர்த்து விட்டான்.

தன் சதித்திட்டத்திலே பெரும் பங்கு சுலபமாகவே நிறைவேறுவது கண்டு ஔரங்கசீப் பூரித்துப் போனான். வெளியே எதையும் காட்டிக் கொள்ளாமல் மகிழ்ச்சி பொங்க மிகவும் தடபுடலாக முராடை வரவேற்று உபசரித்தான். சகோதரனின் வஞ்சக நெஞ்சம் தெரியாமல் முராட் ஆடம்பர வரவேற்பிலும் அலங்காரச் சொற்களிலும் மயங்கிப் போனான். முராடை கௌரவிக்க பிரமாதமான விருந்து தயார் செய்யப்பட்டது. உயர்ந்த பட்டுக் கம்பளத்தை விரித்து அதன் மீது சகோதரனை அமரச் செய்து தடபுடலாக விருந்து ஊட்டினான் ஔரங்கசீப். உயர்ந்த மதுவகைகளை தங்கக் கிண்ணங்களிலே ஊற்றி ஊற்றிக் கொடுத்தான் சகோதரனுக்கு. இந்த அளவுக்கு ஔரங்கசீப் குடிக்க மாட்டான். குடியைக் கண்டாலே நஞ்சென வெறுப்பான். ஆனால் எதிரியின் பலவீனம் எங்கிருக்கிறது என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். அவனுடைய அலங்கார உபசரிப்பு வார்த்தைகளிலே மதுவைவிட போதை அதிகம் இருந்தது. முராடுக்கு உயர்ந்த மது என்றால் உயிர். தங்கக் கிண்ணங்களின் விளிம்புகளிலே வழிந்து நிறைந்தோடும் போதை தரும் மது, அவனுடைய உள்ளத்திலே கிறு கிறுப்பை ஏற்படுத்தியது. சந்தர்ப்பம் கிடைத்தால் சும்மா விடுவானா, ஔரங்கசீப்? நன்றாகப் பயன்படுத்திக் கொண்டான். குடியும் சாப்பாடும் அதிகமாகவே அசந்து போய்விட்டான் முராட். அப்படியே கூடாரத்திலேயே சாய்ந்துவிட்டான். தூக்கம் அவன் கண்களைச் சொக்கியது. மது நன்றாக வேலை செய்தது. மெய்மறந்தான் அவன். துணைக்கு யாரும் இல்லை; அவனுடைய அடிமை வேலைக்காரன் ஒருவன்தான் அருகில் இருந்தான். அவனையும் ஔரங்கசீப்பின் ஆட்கள் வேலை தீர்த்துவிட்டனர். தன்னந்தனியாக கிடந்த முராடுக்கு பணிவிடை செய்ய அழகான அடிமைப் பெண் ஒருத்தி ஔரங்கசீப்பினால் அனுப்பப்பட்டாள். அந்தக் கட்டழகியின் குலையாதபருவமும் ஸ்பரிசமும் மிக நன்றாக வேலை செய்தன. முன்பே அரைத் தூக்கத்தில் ஆடிக்

கொண்டிருந்த முராட், நித்திரா தேவியின் பரிபூர்ண கடாட்சத் திற்கு வெகு சீக்கிரத்தில் பாத்திர மானுன். அசந்து தூங்கும் நிலையில் கிடந்த அவனுடைய போர்க் கருவி களையெல்லாம் நைசாக வெளியே எடுத்துக்கொண்டு வந்துவிட்டாள் அந்த அடிமைப் பெண்!

எதிர் பார்த்துக்கொண்டிருந்த இரை தன் வலையிலே வந்து இவ்வ ளவு சுலபமாக விழும்பொழுது எந்த மடையன்தான் சும்மா இருப் பான்? தூக்கம் கலைந்து முராட் கண் விழித்துப் பார்த்தபொழுது ஔரங்கசீப்பின் கைதியாக தான் சிறை பிடிக்கப்பட்டிருப்பதைத்தான் கண்டான்!

நயவஞ்சகமான முறையில் முராட் சிறை பிடிக்கப்பட்ட செய்தி வெளியிலே யாருக்குமே தெரியாது. எல்லாம் மூடுமந்திரமாகவே வைக் கப்பட்டது. இரவோடு இரவாக கைதி முராட் அந்த இடத்தைவிட்டு அப்புறப் படுத்தப்பட்டான். அரச குடும்பத்துப் பெண்கள் செல்வது போல யானைமீது பல்லக்கு ஜோடித்து கோஷா முறையில் முராடை அனுப்பினுன் ஔரங்கசீப் டில்லியில் அருகில் உள்ள சலீம்கார் கோட்டைக்கு!

முராட் சிறை பிடிக்கப்பட்டு அன்று இரவு சலிம்கார் கோட் டைக்கு கொண்டு செல்லப்பட்டு சிறை வைக்கப்பட்டான். ஔரங்க சீப்பின் சதித்திட்டம் முதல் கட்டத் திலேயே மகத்தான வெற்றியைப் பெற்றது. முராடின் படை வீரர்க ளுக்கு இந்தச்செய்தியே தெரியாது. மறுநாள் தலைவனில்லாதஅந்தப் ப டாளம் ஔரங்கசீப்பின் சாமார்த்தி யத்தினுலும் பணத்தினுலும் வஞ்ச கப் பேச்சினுலும் அவனுடைய படையுடனே சேர்க்கப்பட்டது! முராடின் உண்மையான ஆட்கள் கூட பணத்தையும் பதவியையும் கண்டு மயங்கினர்! துரோகிகளுக்கு நல்ல வேட்டை! நயவஞ்சக துரோகி நூருடீன் ஔரங்கசீப்பி னுல் தடபுடலாக கௌரவிக்கப் பட்டான்!

தன் இலட்சியப் பாதையிலே இருந்த ஒரு தடைக் கல்லை அகற்றி விட்டோம் என்ற பூரிப்புடன், டெல் லியை நோக்கி புதுத் தெம்புடனும் இரட்டை மடங்கு பலத்துடனும் புறப்பட்டான் ஔரங்கசீப். காலம் ஓடியது. முராட் சிறை பிடிக்கப் பட்டு மூன்ருண்டுகள் ஓடிவிட்டன. சலிம்கார் கோட்டையிலிருந்து குவாலியர் கோட்டைக்கு மாற்றப் பட்டு காவல் கைதியாக இருந்தான் முராட். ஆனுல் அவனுடையநினைவு மட்டும் மக்கள் மனத்தைவிட்டு அவ்வளவு சுலபத்தில் மறைய வில்லை. அவனுடைய தாராள மனப்பான்மையும் குஷியான வாழ் வும் நாட்டிலே அவனுக்கு ஏராள மான நண்பர்களை ஏற்படுத்தியிருந் தன. நகரத்து கடை வீதிகளிலே கூட ஜனங்கள் முராடைப் புகழ்ந்து பாடும் பாடல்களை பகிரங்கமாகப் பாடத் தொடங்கிவிட்டனர்! கைதாகி குவாலியர் கோட்டையி னுள்ளே அடைபட்டுக் கிடக்கும் முராடுக்கு நாட்டிலே ஆதரவு கொஞ்சம் கொஞ்சமாகப் பெருகி யது. அதனுடைய விளைவுதான்... அவனை எப்படியும் சிறைச்சாலையி லிருந்து தந்திரமாக மீட்டுக் கொண்டு வந்துவிட வேண்டு மென்று அவனுடைய நெருங்கிய நண்பர்கள் போட்ட திட்டம். அந்த ரகசியத் திட்டம்தான் முராடினு டைய காதலி... சரசாதிபாயின் புத்திகெட்டதனத்தினுல் அப்படியே சுக்கு நூருகிவிட்டது! காதலனைப் பிரியவேண்டுமே என ஏக்கம் பீறிட்டு அவள் எழுப்பிய அழுகுரல் தான், முராடின் உயிருக்கே ஆபத் தாக வந்து சேர்ந்தது!

முராடை வெளியேற்ற தீட்டிய திட்டம், ஔரங்கசீப்பின் காது களுக்கு எட்டியது. தடைக் கல்லே இல்லை என்ற நிலையை உண்டாக்கி விடவேண்டும் என்ற முடிவுக்கு வந்தான் அவன். காவல் கைதியாக

இருந்த முராடின் மீது வழக்கு ஒன்று போடப்பட்டது. பழிவாங்கு வதை, திட்டத்துடனும் எச்சரிக் கையுடனும் சொய்தான் ஔரங்க சீப்!...கூர்ஜரத்திலே கோட்டை கொத்தளங்களை அமைத்த முராட் எதிரிகளை முறியடித்துக் கொண் டிருந்தான் சில வருடங்களுக்கு முன்னால். அப்பொழுது பட்டத்திற் கான போர் ஆரம்பிக்கப்படவில்லை. ஷாஜகான்பாஷாவலுவுடன் இருந்து ஆட்சிபுரிந்து கொண்டிருந்தார். அப்பொழுது முராடுக்கு துணையாக அலிநாகி என்ற தன் மந்திரிகளில் ஒருவனை ஷாஜகான் கூர்ஜரத்திற்கு அனுப்பிவைத்தார். அலிநாகி திறமைசாலி. யோக்கியன்...ரொம் பவும் கண்டிப்பானவன். முராடைச் சுற்றிக்கிடந்தவர்கள் அலிநாகியை வெறுத்தார்கள். அவர்களுடைய கோலாகல வாழ்க்கைக்கு அவன் இடைஞ்சலாக இருந்தான். அவ னைத்தீர்த்துக்கட்டவேலை செய்தனர் முராடின் நண்பர்கள். அலிநாகியின் மீது பொய்குற்றம் ஒன்று ஜோடித்து அவனை துரோகி என்று விளம்பரப் படுத்தினார்கள். தன் நண்பர்களின் பொய்யான வார்த்தையை நம்பி விட்டான் முராட். முட்டாள்தன மாக ஆத்திரத்தில் அலிநாகியை குத்திக் கொன்று விட்டான் அவன்!...

அலிநாகியின் அநியாய மரணத் திற்கு இப்பொழுது பழிவாங்க ஔரங்கசீப்புக்கு நல்ல வாய்ப்பு கிடைத்தது! முராடினால் கொலை செய்யப்பட்ட அலிநாகியின் மகன் ஔரங்கசீப்பின் தூண்டுதலினால் மனுவொன்றைஔரங்கசீப்பினிடம் தாக்கல் செய்தான். தன் தகப் பனின் அநியாய மரணத்திற்குப் பழி வாங்க வேண்டும் என்று மனுவிலே கோரியிருந்தான் அவன். எல்லாம் ஔரங்கசீப்பின் ஆட்கள்தானே! முராட் விசாரிக்கப்பட்டு குற்றம் சாட்டப்பட்டு, மரணதண்டனை விதிக்கப்பட்டான்!

மூன்று தடைக் கற்களிலே ஒரு தடைக்கல்லை அப்புறப்படுத்தியாகி விட்டது. இன்னும் பாக்கி தாரா... ஷுஜா! இவர்கள்தான். இவர்கள் இருவரையும் தீர்த்துக் கட்டி விட் டால், அப்புறம் ஹிந்துஸ்தானத்தின் பாதுஷா தான்தான் என்ற பூரிப் பிலே ஔரங்கசீப் மூழ்கித் திளைத் துக்கொண்டிருந்த அதே நேரத்தில் குவாலியர் கோட்டையிலே ஷாஜ கான் பாதுஷாவின் அருமைப் புதல் வர்களில் ஒருவனான முராட், தன் னந்தனியாக மறுநாள் பொழுது விடிந்தால் தன் தலை சீவப்படுமே என்பதை எண்ணி எண்ணிக் கத றிக்கொண்டிருந்தான்!

"அல்லா! என்னை மன்னித்து விடு!" என்று ஆண்டவனை நோக்கி கடைசி நேரத்திலே பிரார்த்தித்தான்! ஹிந்துஸ்தானத்தின் மணி மகு டத்தை தனதாக்கிக்கொள்ளவேண் டும் என்ற வேட்கையுடன் போரிட்ட பாதுஷாவின் மகன், கேட் பாரற்று அனாதையாக இரத்தக்கண் ணீர் வடித்துக் கொண்டிருந்தான், பாதாளச் சிறையினுள்ளே!

மறுநாள் காலை குவாலியர் கோட் டையினுள்ளே அவன் தலை சீவி எறி யப் பட்டது, ஔரங்கசீப்பின் ஆட் களால்! மயிலாசனத்திலே அமர்ந்து மகுடம் சூட்டிக்கொள்ள ஆசைப் பட்ட தலை, குவாலியர் மண்ணிலே சாய்ந்தது; அதுவும் சொந்த சகோ தரன் ஔரங்கசீப்பின் வாளினால் துண்டிக்கப்பட்டு. ஷாஜகான் பாதுஷா கட்டுவித்த மயிலாசனத் தில் மீது ஏற்பட்ட முதல் இரத்தக் கறை அது! அரசபதவி... சொந்த இரத்தத்தைக் கூட லட்சியம் செய் யாது என்ற உண்மையை, முராடின் உடலிலிருந்து வழிந்தோடிய இரத் தம் உலகுக்கு பகிரங்கமாகப் பறை சாற்றியது! ★

அறிவியல்
அரங்கம்

# வானையளப்போம்

செ. ஆனந்தன், பி. எஸ்சி., பி. டி.

> "வானையளப்போம்—கடல்
> மீனையளப்போம்
> சந்திரமண்டலத்தியல்
> கண்டு தெளிவோம்!"

என்று பாரதியார் அன்று கண்ட கனவு நினைவாகிக்கொண்டு வருகிறது! சந்திரமண்டலத்தியலைக கண்டு தெளிவதற்காக, அமெரிக்க, ருஷ்ய செயற்கை நிலாக்கள் விரைவிலே கிளம்பப் போகின்றன.

பறவையைப் பார்த்து பறக்கக் கற்றுக்கொண்ட மனிதன், கடல் மீனைக் கண்டு, நீர்மூழ்கிக் கப்பலைத் தோற்றுவித்த அதே மனிதன், மதியைக் கண்டு செயற்கை மதியை வானிலே சுழலவைத்த அதே மனிதன், சந்திரனைச் சுற்றிவிட்டு திரும்பி வருவதற்காக ராக்கெட்டுகளை விரைவிலேயே அனுப்பப் போகிருன்!

சந்திரனில் போய் இறங்கி விட்டுப் பிறகு திரும்பி வருவதென்பது எளிதான செயலல்ல! ஆனால், எதையும் சாதிக்கவல்ல அறிவியல் அதையும் சாதித்துக் காட்டப் போகிறது! இந்த ஆகஸ்ட், செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் இதற்கான சோதனைகளை அமெரிக்க விமானப் படையினர் நடத்தப் போவதாக அண்மையில் அறிவித்துள்ளனர். இத்தகைய ஆராய்ச்சிகளை, உலகுக்கு முன்கூட்டியே அறிவிக்காமல், ருஷ்யாவும் இரகசியமாக செய்துகொண்டுதானிருக்கிறது.

சந்திரனிலே போய் இறங்குவதற்கு முன்னல், ராக்கெட்டுகளின் மூலம் சந்திரமண்டலத்தைப் பற்றிய விபரங்களை மேலும் அறிய விரும்புகிருர்கள். சந்திரனில் புதைந்துள்ள இரகசியங்கள் இந்த உலகளவென்ருல், நாம் இன்று சந்திரனைப்பற்றி அறிந்திருப்பதோ கைம்மண்ணளவுதான்! எனவே சந்திரனைப் பற்றி நன்கு அறிந்துகொள்ளாமல், சந்திரனிலே போய் செத்துமடிவதால் என்ன பயன்? ஆழந்தெரியாத ஆற்றிலே நீந்தத் தெரியாதவன் சிறிதும் சிந்திக்காமல் இறங்கலாமோ?

எனவே 'சந்திரமண்டலத்தியலை'ப்பற்றி நன்கு தெரிந்துகொள்வதற்காக, சந்திரனைச் சுற்றிவிட்டுத் திரும்பிவரக்கூடிய ராக்கெட்டுகளை அமெரிக்கர்கள் அனுப்பப்போகிருர்கள். முன்பு ருஷ்யர்கள் அனுப்பிய "ஸ்பூட்னிக்" என்ற செயற்கைச் சந்திரனும், அமெரிக்கர்கள் அனுப்பிய ஆல்பாவும் வானவெளியிலே சுற்றிவந்து நமக்கு ஏராளமான செய்திகளைக் கொடுத்துள்ளன. மேலும் அமெரிக்கர்கள்

இப்பொழுது அனுப்பப் போகும் செயற்கைச் சந்திரன், வான வெளியைத் தாண்டி, சந்திரனைச் சுற்றியுள்ள வானமண்டத்திலே உல்லாச பவனி வந்து, அங்கே சந்திரனிலே உள்ள அற்புதமான காட்சிகளைப் படம் பிடித்துக் கொண்டு, சந்திரனை வலம்வந்து, இயற்கை தந்த அந்த எழில் மதியை, (செயற்கை மதியான இந்த ராக்கெட்) ஓர் முறை வணங்கிவிட்டுத் திருப்பி பூமியை அடையும்!

ஆனால், இவர்கள் அனுப்பப் போகிற ராக்கெட், சந்திரனைச் சுற்றி வருவதற்குப் பதிலாக, அதையே தாக்கினாலும் தாக்கலாம்! அங்ஙனம் சந்திரனைத் தாக்கும்பொழுது சந்திரனிலே புதியதொரு களங்கம் உண்டாகலாம்! ராக்கெட் சந்திரனைத் தாக்கும்பொழுது, சந்திரனிலே உண்டாகும் "வடு" மிக மிகச் சிறியதாக இருக்குமானால் அதை எப்படி நாம் அறிந்துகொள்வது? இவர்கள் அனுப்புகிற ராக்கெட் சந்திரனைத் தொட்டதா, இல்லையாவென்பதை எப்படி அறிந்து கொள்ள முடியும்?

சந்திரனை அணு ஆயுதத்தினால் தாக்கலாமா? அணுகுண்டைப் போட்டாலும், அதனாலேற்படுகின்ற "வடு"வை இங்கிருந்து பார்க்க முடியாது! ஆனால், மிக மிக வேகமாகத் தாக்கினால், அதிர்ச்சியினால் உயரே எழும்பும் தூசுகளைப் படம்பிடிக்க முடியும். இங்ஙனம் உயரே தூக்கி எறியப்படும் தூசுகளில் சூரிய ஒளி பட்டு திரும்பி வருமானால், அவைகள் பிரகாசமாக நமக்குக் காட்சியளிக்கலாம்!

ஆனால், இங்ஙனம் அணு குண்டை சந்திரனிலே போடுவதானது அபாயகரமானதும் விரும்பத்தகாததுமாகும். இதன் மூலம் சந்திரனின் வானவெளி முழுவதும் நச்சுக்காற்றால் நிரப்பப்படலாமன்றோ? மேலும் நாம் பூமியிலிருந்துகொண்டு, போடுகின்ற ஏட்டுக் கணக்குகள் பொய்த்துவிட்டாலும் பொய்த்துவிடலாம்! வானவெளிப் பயணத்தில் ஏற்படப் போகும் இடையூறுகளை நாம் எப்படி முன்கூட்டியே கூற இயலும்!

எனவே, அணு ஆயுதங்களை வைத்து ராக்கெட்டுகளை நம் தலைக்குமேல் அனுப்பினால், அது சந்திரனைச் சுற்றிக்கொண்டு வந்து, நம் தலையிலேயே விழுந்தால்...? "அதெப்படி நடக்க முடியும்?" என்று சிலர் கேட்கலாம். ஏன் அப்படி நடக்க முடியாது? அமெரிக்கா முதலில் அனுப்பிய செயற்கைச் சந்திரன் திரும்பி விழவில்லையா?

சந்திரனைத் தாக்குவதற்காக அமெரிக்கர்கள் அனுப்பப் போகிற கருவிகள், ஒருவேளை அவர்களையே தாக்கினாலும் தாக்கலாம்! அணுகுண்டை ராக்கெட்டில் வைத்து அனுப்பித் தன் தலையிலேயே அணுகுண்டைப் போட்டுக் கொள்ளப்போகிறார்களா? நினைத்தாலே உள்ளம் நடுநடுங்குகிறதே! வானை யளக்க வேண்டியது தான்; ஆனால், அதற்காக மனித இனத்தையே அழிக்கவல்ல அணுகுண்டுகளைக் கொண்ட ராக்கெட்டுகளால் மட்டும் வானையளக்க வேண்டாம்! அப்படி நன்கு ஆராயாமல், நெருப்போடு விளையாடுவதைப் போல் விளையாடினால், சந்திர மண்டலத்தியலை கண்டு தெளிவதற்குள்ளாக, நாம் செத்து மடியவேண்டியது தான்! ★

(காவிரிப்பூம்பட்டணத்திலே கழிக்கானற்சோலை; பசுமையில் பனித்துளிகள் பளபளக்கும் வசந்தம்; நெகிழ்ந்து அலையும் முகில்களினிடையே நிலவு பொழிகிறது. சோலையின் ஒரு சித்திர மண்டபத்திலே நெடுமுடிக்கிள்ளியும், பீலிவளையும் பதுமைகளாக அமர்ந்திருக்கிறார்கள். எதிரே தேங்கிக் கிடக்கும் தடாகத்தின் நீல வெள்ளம் அவர்களைப் பிரதிபலிக்கிறது.)

**கிள்ளி :** இரவு துயிலும்போது இந்த மலர்வனம் எத்தனை அழகாயிருக்கிறது! இருளின் அமைதியான இசையிலேதான், அல்லிகள் நிலவைக் கண்டு மலர்கின்றன. மனித குலம் போல்தான் மலர்க்குலமும்! இது அற்புதமாயில்லையா?

மலரலாம்; தாமரை முகங்கள் நிரம்பிய இந்த வாவியிலே சேறும் சகதியும் ததும்பி வழியலாம். ஆனால் தவழ்ந்து வரும் தென்றல் மட்டும் என்றுமே இளமையோடு வாழும்– தருமத்தின் அழியாத சோதிபோல!

**கிள்ளி :** பீலிவளை, எங்கிருந்தோ வந்தாய், என் சிந்தையைக் கவியும் சுகக்கனவாக .....இன்னும் நினைக்கிறேன் அந்த அற்புதத்தை...உன் சித்திர அழகு சோழனை எப்போதோ சிறையிட்டுவிட்டது!

**பீலிவளை :** அரசே, அழகு சிதையலாம்; ஆனால் அறம் சாவதில்லை. இளமை அழியலாம்; இசை மறைவதில்லை. இந்த இன்பம் வெறும் மணல் வீடு - பாவப்புயல் நம்மைச் சூழ்ந்து வீசுகிறது!

# பீலிவளை

இரா. இளஞ்சேரன்

**பீலிவளை :** இந்த நேரத்திலே தீமைகள் பிறப்பதாகச் சொல்லுவார்கள்; நீங்கள் இருளையும் ரசிக்கிறீர்கள்!

**கிள்ளி :** ஆமாம், பீலிவளை! அது உன் நீல்விழிகளின் விளிம்பில், வாசம் கமழும் வாரிமுடித்த கூந்தலில், சின்னஞ்சிறு புருவக்கோட்டில் அந்த இருள்தானே தவமிருக்கிறது! அதன் எழிலும், இனிமையும்...

(காற்று மெதுவாக சலசலக்கிறது.)

**பீலிவளை:** இன்பம், எழில், இனிமை......கூத்தாடும் அவைக்களமான வாழ்க்கையிலே இந்தச் சொற்கள் வெறும் மயக்கத்தையே தருகின்றன. மலர்கள் விரியும் இதே சோலையில், நானா கள்ளிப்பூக்கள்

**கிள்ளி :** இனிமையான வேளையில் இதைத்தானா சிந்திக்கவேண்டும்? நிலவு காய்கிறது. தென்றல் தவழ்கிறது. பசுங்கொடிகள் சாய்கின்றன. அத்தனையும் நமக்காக பீலிவளை...

**பீலிவளை :** (உணர்விழந்த நிலையில்) ஆமாம் அரசே, அத்தனையும் நமக்காக.

**கிள்ளி :** இலவந்திகைப் பள்ளியில் எத்தனையோ பெண்கள் சிரிக்கிறார்கள். அவர்களிடம் என் மனம் கொள்ளும் மயக்கமில்லை. புலவர்கள்கவிதை செய்கிறார்கள். அந்த சுவை எனக்கு எட்டியாகப்படுகிறது. எப்போதுமே என்னைக் கவரும் படைக்கலன்கள் கூட, உன் அழகின் முன்னே பழுதாகி விழுந்துவிட்டன! இங்கே, இந்த சோலையிலே, பீலிவளை என

பெண்மையின் அதிசயம் என்னையே அடிமை கொண்டுவிட்டது!

**பீலிவளை :** அரசே!

**கிள்ளி :** பீலிவளை! உன் மூடிய விழிகளில் கவிதைகள் துயில்கின்றன. மின்னிடும் கன்னங்களில் அந்தியின் செம்மை குழைகிறது. அனிச்சமும் வாடும் உன் மேனியிலே அழியாத இளமையை நான் தரிசிக்கிறேன். பீலிவளை, என்னோடு வந்துவிடு. யாழும் குழலும் உனக்காக இசை பொழியும். பொன்னிழைத்த கன்னி னியர்கள் உன் சேவடியிலே தொய் யில் எழுதக் காத்திருக்கிறார்கள். வந்துவிடு பீலிவளை...தென்றலுக்கு கட்டியமா கூறவேண்டும்? இந்த சோலையிலேயே நான் தவம் கிடப் பதைக் கண்ட பெருநிலக் கிழார்கள் வேந்தன் பித்தனாகிவிட்டதாக நினைக் கிறார்கள்!

**பீலிவளை :** என் மனம் குழம்பு கிறது மன்னவரே. இரவுதோறும் கனவிலே கடலின் அலையோசையை நான் கேட்கிறேன். விழித்திருக்கும் வேளையில்கூட இரு பொற்பாதங்கள் என் நினைவில் பளிச்சிடுகின்றன. கானகத்திலே என் தந்தை பெருவேங்கையின் பற்களை இடித்து எனக்கு மாலையாக்கித் தந்திருக் கிறார்; அப்போதெல்லாம் அஞ்சி நடுங்கியதில்லை நான்...

**கிள்ளி :** (எழுந்து உலவியபடி) கனவைப்பற்றிப் பேசுகிறாய் நீ. இது நனவு; இனிமையான நனவு. நீயும், நானும், இந்த நிலவும், வசந்த மும் கூடவா கனவு?

**பீலிவளை :** அத்தனையும் கனவு; விழித்திருந்து காணும் கனவு!

(சோக மயமான யாழிசை அரங் கிலே மெதுவாக இழைகிறது.)

*(திரை)*

காட்சி இரண்டு

(கழிக்கானற் சோலை. எங்கும் செழுமை வறண்ட தோற்றம். பூவும் தளிரும் பொலிவற்று அசைகின்றன. சோழன் நெடுமுடிக் கிள்ளி ஒளி யிழந்த முகத்தோடு அங்குமிங்கு மாக உலவுகிறான். பின்னணியிலே குரல் கேட்கிறது.)

"விசும்புகூட விளரிக்கிடக்கிறது. தேடாமல் கொள்ளாமல் திருவடி களிலே அர்ப்பணமான பீலிவளையின் பேரழகு வெறும் சொப்பனம்தானோ? வந்த சுவடு தெரியாமல் வசந்தமும் மறைவதோ? என்னென்ன கதை பேசினாய்...எத்தனை எத்தனை கனவு கண்டாய்! சொல்லாமல் போவதோ, அந்த சுவைதந்த இனிமை எல்லாம்!

முகில் அலையும் குழல் அவிழ, முத்தாரம் மார்புரள, மோனத் தவம் அழிய தழுவக் குழைந்ததெல்லாம் இப்படி தவித்திடும் நிலை பெறவோ? முப்பது இரவுகளில் முடிந்திடும் கதையா இது? இரவின் மெல்லணை யில், தாரகைகள் விளக்கம் தாங்க, பொங்கிடும் கடல் இசைபாட, பூவிரித்த சோலை மகரந்தம் தூவ, காவிரிப்பாவை துயில்கிறாள், கனி வோடு.

மணி இழந்த நாகம்போல, மனம் இழந்த நான் மட்டும் இங்கே தன்னந் தனியாகக் காத்திருக்கிறேன். தேடா மல் வந்தவள் இன்று தேடியும் தென் படவில்லை. பீலிவளை, நெய்தல் மலரின் மெல்லிய இதழ்களிலே நீ ஒளிந்துகொண்டாயோ? காற்றின் சலசலப்பில் கவிதையாக உருப் பெற்றாயோ? கடலின் வெண்ணுரை யிலே புன்னகையாகத் தவழ் கிறாயோ? சந்திரிகையின் பாலொளி யிலே அமுதாகி விளையாடுகிறாயோ? எங்கே மறைந்தாய், பீலிவளை, எங்கே மறைந்தாய்?

(யாழின் ஒலியோடு பாடல் கேட் கிறது.)

**இன் துணை நீ நீப்ப,**
**இரவினுள் துணையாகி,**
**தன் துணைப்பிரிந்து அயாஅம்**
**தனிக்குருகு உசாவுமோ**
**ஒண் சுடர் ஞாயிற்று**
**விளக்கத்தான் ஒளி சாம்பும்**
**தண் பகல் மதியம்போல்,**
**நலம் சாய்ந்த அணியாட்கு.**

(மீட்டிய யாழோடு பாணன் பிர வேசிக்கிருன்.)

**பாணன்** : கிள்ளிமன்னரா, இங்கே இந்த நிலையில்... ?

**கிள்ளி** : என்ன பாணரே, ஏன் திகைப்பு ?

**பாணன்** : தேவியர் இல்லாமல் தன்னந் தனியாக வந்திருக்கிறீர்களே ! அதுவும் இந்த சோலை, மதன வேளின் கொலு மண்டபமாயிற்றே ! பெண்களின் சிரிப்பொலிதான் இங்கே பூக்களாக மலர்கின்றன.

**கிள்ளி** : போதும் பாணரே! உமக்கென்ன; இசைப்பறவை! காத்திருக்கும் தலைவியரின் தாபமும், பெருமூச்சும் யாழாக உருவெடுத்துஉமது தோளிலே துயில்கிறது.

**பாணன்** : மன்னர் நீங்கள்;நானோ இசை பாடி வாழும் ஏழை. அரசின் சுமையை மறக்க தங்களுக்குஅந்தப்புரம் இருக்கிறது. போற்றிப் புகழ புலவர்கள் இருக்கிருர்கள். இரவுகளில் என் யாழ் எப்போதுமே துயில்



வதில்லை. எல்லோரும் அயரும் வேளையில், இது விழித்திருக்கும் அரசே!

கிள்ளி: (பழைய உணர்வோடு.)

இந்த சோலையிலேபூத்து மறைந்து போன ஒரு ஒளிமலரைத் தேடிக் கொண்டிருக்கிறேன்.

பாணன்: உணர்வேன், அரசே. வலைவாணன்தேவி வாசமயிலை பெற்றெடுத்த அழகி அவள்; பீலிவளை என்பார்கள்...நீங்கள் இன்னுமா மறக்கவில்லை அவளை? மலர்வனத்திலே பிரிந்த அந்த வல்லியை, நான் மணிபல்லவத்திலே சந்தித்தேன்.

கிள்ளி: (திகைப்போடு)

உண்மையாகவா, பாணரே! இழந்த திருஎழிலைப் பார்த்தீரா? கழிக்கானற்சோலையிலே என்னை விட்டுச் சென்ற கட்டழகைப் பார்த்தீரா? சொல்லும் பாணரே, சொல்லும்!

பாணன்: பார்த்தேன், மன்னு! கதிரொளி போன்ற சின்னஞ்சிறு குழந்தையோடு, அவள் புத்த பீடிகையை வலம் வந்துகொண்டிருந்தாள். மணிமுடிக்குரிய அந்த மழலை, உன் செல்வம் – புதல்வன் வருவான், இங்கே. அவளைப் பெற்றவளை நீங்கள் இழந்து விடவேண்டியது தான்!

கிள்ளி: பற்றற்றுப் பேசுகிறீரே, பாணரே, ஏன்? எதற்காக?

பாணன்: வேட்கை கனிவிக்கும் அந்த வித்தார அழகை, பௌத்தம் பலிகொண்டுவிட்டது! புத்த தருமங்களின் நெருப்பிலே அவள் ஆசா பாசங்களை தகித்துவிட்டாள்! காவிரி நாயக, பீலிவளை இன்று முற்றும் துறந்த யோகினி; சிரித்து மயக்கிய பழைய மோகினியல்ல! வேதாந்த வெளியிலே சிறகடிக்கும் அந்த சிட்டிற்காக, ஆசைவலை விரிப்பதில் பயனில்லை!

கிள்ளி: பாணரே, என் செல்வனை யாவது நான் பார்க்கவேண்டும். மணிபல்லவத்திற்கு இப்போதே வீரர்களை அனுப்புவேன்.

பாணன்: வேண்டாம் வேந்தே! கர்பளச் செட்டி எனும் கடல் வணிகனிடம் பீலிவளை குழந்தையை ஒப்படைத்திருக்கிருள். வணிகனின் கலம் நாளை கதிரொளி மறைவதற்குமுன் புகாரை அடையும். நான் வருகிறேன் மன்னு...இரவு அமைதியை வழங்கட்டும்.

(சோழன் தவிப்போடு நிற்க, பாணன் செல்கிருன்.)

*(திரை)*

### காட்சி மூன்று

கடற்கரை மண்டபம்: சோழன், அறங்கூறுவோர், அமைச்சர், வீரர்கள் ஆகியோர் கூடி நிற்கின்றனர். அரங்கிலே இருளும் ஒளியும் மாறி மாறி நிழலிடுகின்றன. புயல் இரைகிறது. வீரன் ஒருவன் வந்து பணிந்து நிற்கிருன்.

கிள்ளி: (ஆவலோடு.)

சேதி ஏதேனும் உண்டா?

வீரன்: இல்லை பிரபு, அலைகள் பயங்கரமாக ஆர்ப்பரிக்கின்றன. கண்ணுக்கெட்டியவரை கரு நீலப்பரப்பில் நாவாயோ, கலமோ தென்படவேயில்லை.

கிள்ளி: (நடுங்கும் குரலில்)

புயலும் சுழிப்பும் புரளும் பெருங் கடலிலே என் செல்வத்தின் உயிர் ஊசலாடுகிறது. அமைச்சரே, கிழக்கு சிவப்பதற்குள் எப்பாடு பட்டேனும் என் குழந்தையை கொண்டு வாருங்கள்.

அமைச்சர்: அமைதி பெறுங்கள் மன்னவா, வீரர்கள் ஆயிரவர் பாய் மரங்களிலே சென்று தேடியலைகிருர்கள்.

(இடியின் ஓசையும், ஒளியும் சங்கமமாகி அரங்கிலே பளிச்சிடுகின்றன.)

கிள்ளி: வாள் வீச்சுகளான மின்னல்கள் வானத்திலே நெளிகின்றன. புகாரே அழிந்து படும்போலிருக்கிறதே!

**அறங்கூறுபவர்** : ஆமாம்அரசே, இந்திர விழா தடைபட்டு நிற்கிறது. தொடிதோட் செம்பியன் காலத்திலிருந்து இதுவரை இந்த சிறப்பு இடையே துவண்டதில்லை. பூரண கும்பங்களும், பொற்பாலிகைகளும் நிரம்பியிருக்க வேண்டிய புகார் நகரம், பொலிவிழந்து இருளிலே விம்மித் தணிகிறது. சதுக்க பூதத்திற்கு பலியிடாவிட்டால் கேடுகள் விளையும்!

**கிள்ளி** : (குமுறிய குரலோடு)

வேதனை தகிக்கும் இந்த நிலையில் விழா எதற்கு பெரியவரே?

**அறங்கூறுபவர்** : தேவர்கோனின் ஆத்திரம் நம் பழம்பெரும்மூதூரையே தீய்த்துவிடும் மன்னா!

**கிள்ளி** : (எதையும் பொருட்படுத்தாதவனாக)

வணிகனின் கலம் இன்னும் வரவில்லை?

(இடியோசையும், மழையின் சலசலப்பும் ஒருங்கே கேட்கின்றன. வீரன் ஓடி வருகிறான்.)

**வீரன்** : தேடிச் சென்ற வீரர்கள் திரும்பிவிட்டார்கள் அரசே.

**கிள்ளி** : (தணியாத வேட்கையோடு) குழந்தை கிடைத்ததா?

**வீரன்** : இல்லை. கடலிலே குற்றுயிராகக் கிடந்த ஒருவரை அழைத்து வந்திருக்கிறார்கள்.

(வீரர் இருவர் தவித்து களைத்த தோற்றம் கொண்டவரோடு வருகிறார்கள்.)

**கிள்ளி** : யார் நீர்?

**வணிகன்** : கடல் வணிகன் கம்பளச் செட்டி என்பார்கள் என்னை.

**கிள்ளி** : (துடிப்போடு)

குழந்தை எங்கே வணிகரே, பீலிவளை தந்த என் புதல்வன் எங்கே?

**வணிகன்** : (உணர்விழந்த நிலையில்)

புகார் வேந்தனிடமா நான் பேசுகிறேன்! மன்னவரே...

(முகத்தை மூடியபடி விம்முகிறான்)

**கிள்ளி** : (வணிகரை தொட்டு அசைத்து)

என் ஆசையின் திருவாழ்வை கடல் அள்ளிக்கொண்டதா? சொல்லுங்கள், வணிகரே, சொல்லுங்கள்.

**வணிகன்** : (அழுகையும் அச்சமும் நிழலிட)

கோரமான புயல் கப்பலை சிதறடித்துவிட்டது. இந்தக் கொடுமையைச் சொல்ல நான் ஒருவன்மட்டுமே தப்பினேன். மணி பல்லவத்திலே சிரித்த முகத்தோடு என்னிடம் வந்த குழந்தை, சாகரத்தின் ஆழ இருளிலே சேர்ந்துவிட்டது. மன்னா! அலைகளின் மடிப்பிலே நான் பிணமாகியிருக்கக்கூடாதா? பெரும் பழிக்கு ஆளாவதற்கா பிழைத்தேன்?

**கிள்ளி** : மழைத் துளிகளைத்தான் சிப்பிகள் விழுங்கும். என் மழலை மொழிச் செல்வத்தையுமா கடல் பறித்துக்கொள்ள வேண்டும்? இந்தக் கொடுமையை எங்கே புதைப்பது?

(புயலின் வேகத்தில் மண்டபத்தின் தீப்பந்தங்கள் அணைகின்றன. மங்கிய இருளில் புகைச்சுருள்கள் பிறந்து நெளிகின்றன.)

**கிள்ளி** : பீலிவளை, மலர் கொய்வதைக்கூட சகிக்காது உன் உள்ளம். இந்த பொல்லாத சேதி கேட்டால் என்ன பாடு படுவாயோ? அழகு அழிவதுண்டு; ஆற்றல் வீழ்வதுண்டு. அறம் சாய்ந்துவிட்டால் ஆறுதலுக்கு எங்கே போவது, பீலிவளை?

**வணிகன்** : பொருத்தருளுங்கள் மன்னா! பழியின் சுமையே என்னைக் கொன்றுவிடும். பேசிப்பேசி என் நெஞ்சைப் பிளக்காதீர்கள்!

(மனிதர்கள் அமைதியாக நிற்கிறார்கள். வானமும், பெருங்காற்றும் ஆர்ப்பரிக்கின்றன.) ★



அமைதியாக நெளிந்த கடல் அலைகளின்மேல் ஒரு வெண்ணிறப் பறவை பறந்து சென்றது. தொலைவில் மோதிய திரைகளின் மங்கிய நீர் மூட்டத்திற்கு அப்பால், காற்றில் மிதந்து அந்தப் பறவை மறைந்து போயிற்று.

''தியானமா ?'' ஓவென்று பொங்கிய அலைச்சுழிவில் கெண்டை துள்ளியதுபோல, கேலியாக ஒரு வினு !

தியானமா ? நீர்தழுவிய கரையில் அமிழ்ந்த ஈரமாக வாசுகியின் சிரிப்பு பொங்கி எழுந்து மறைந்தது. அலைகள், கேள்விக்குறியாகவும் வியப்புச் சுழியாகவும் கரையில் குலைவு கொண்டன.

''சோமு அண்ணு, இதென்ன மௌனத் தவிப்பு ? நீயா இப்படிக் குமுறுவது ?'' பொங்கிய அலை, சுருண்டு சுருண்டு காலைத்தொட்டு, உரோமங்களில் நுரைகளை வெடிக்க விட்டது.

''வாசுகி, நீ என் தங்கை !''

கடல் நீர்மலை குவித்து, கலகல வென்று நகைத்தது. கண்ணுடிப் பெட்டியில் தேக்கிய நீர் அழுத்தம் போல, தொலைவில் கடல் நீலமாக ஆடியது.

வாசுகி பிரிந்து, ஒரே ஒரு நாள் தானே ஆயிற்று. வாசுகி ஏன் மறைந்துபோனுள் ? வைத்தியநாத பட்டரும், வைதேகிப் பாட்டியும், சூரங்காடு கிராமத்தின் நல்ல பிறவிகளும்-எல்லாருமாக வாசுகியைக் காலத்தோடு வழியனுப்பி வைத்தார்களா ? இதென்ன வெறுமை; சூன்யம்; தனிமை ?

ஊசலாடிய அந்தியை விரட்டிக் கொண்டு அடிவானக் கரையிலிருந்து இரவு கடுமையாக விரிந்தது.

நேற்று காலையிலிருந்து சோமுவுக்கு இருள்தான். வாசுகி மறைந்து போனதிலிருந்து இருள்.

''அண்ணு ! நான் போகிறேன், அண்ணு. நான் தனிமையாகப் போகிறேன் என்று எண்ணுதே. உன் அன்பையும் கொண்டுபோகிறேன். நான் கலக்கப்போகும் சூன்யத்தின் பாதைக்கு நம்பிக்கையாக வருவது, உன் அன்பு மட்டும்தான். நான் போகிறேன் அண்ணு !''

வைதேகிப் பாட்டியும், வைத்தியநாதபட்டரும், கிணற்றடியிலும் ஊர்ச் சந்தியிலும் மூடிமூடிப் பேசிய நல்ல ஜனங்களும் வாசுகிக்கு பலிக்கல்லாக அமைந்தவர்கள். வாசுகி செத்துப்போனுளே !

மேல்துண்டால் முகத்தை அழுத்திக்கொண்டு மூலையில் வந்துநின்று, விக்கிவிழுங்கி அழுத வைத்தியநாத

# சுமை

ஆ. மாதவன்

பட்டரின் கண்ணீரில், வளர்த்த சுமை ஒழிந்ததென்ற அழுத்தம் கலந்திருந்ததா? ''ஐயோ! அடி பொண்ணே, மண்ணைப் போட்டுட்டியேடி - மண்ணைப் போட்டிட்டியே'' என்று பிரலாபித்த வைதேகிப் பாட்டிக்கு இருந்த துக்கத்தின் சுமை?

''ஏ, ஆளு! ஈரத்திலே படுத்திருக்கியே ஐயா, பெண்டாட்டியை பறிகொடுத்திட்டியா? எளுந்திச்சு வூடு போய்ச் சேரு.'' கடல் அலைகளின் கொட்டம் அடங்கிவிட்டது. எதிரில் இருளின் நிழலாக நிமிர்ந்து நின்ற மனிதனின் குரல் மட்டுந்தான் நெஞ்சை அதட்டியது. உடலில் ஒட்டிய ஆடை, தவழ்ந்த காற்றில் இழுத்துக்கொண்டு படபடத்தது. குளிர்!

தள்ளாடி எழுந்து நடந்தான். கால் பின்னுக்கு செல்லச்செல்ல, பின்னால் அலைஓசை சன்னமாகி குறைந்து தொடர்ந்தது. ''சோமு அண்ணா!'' என்ற குரல் தொலைவில் மெலிந்து போயிற்று!

பழையகதை. நாள்கடந்து குனிந்து போன கதை. அந்த நினைவில் சூரங்காடு கிராமம் நீரில் நிழலாக மங்கித் தெரிகிறது. சோமுவிற்கு சூரங்காட்டின் அக்ரகார வரிசையிலே ஜாகை. தெருவின் மத்தியத்தில் ஊர்க்காவல் போல விநாயகர் கோயில். அப்பால் குடை விரித்த பனைகளும், கருவேல மரங்களும் நிழல் வேய்ந்திருக்கும்.

''இதென்ன சாபக்கேடு! அன்னியாள் ஒருத்தனை இங்கே யார் குடியேற்றியது? எல்லாம் அழிந்து போகப் போகிறது. கேட்பதற்கு யார் இருக்கிறார்கள்?'' வைத்தியநாத பட்டரின் பேச்சிற்கு, வீட்டுவாசலில் ஒட்டியிருந்த ராசாங்க முத்திரையின் வெள்ளைக் காகிதம் மௌனத் திரையிட்டது.

அதன் பின்னா, ஊர்க்கோடி கிணற்றடியிலும், வாத்தியார் ரங்கநாதர் வீட்டுத் திண்ணையிலும் விவாதம் நடந்தது. எல்லோர் கண்களும் அவனை, வெறுப்போடு ஓர விழி விழித்துப் பார்த்தன. 'ஒரு கவர் கொடுங்கள்', 'ஒரு கார்டு கொடுங்கள்.' என்று, சிறு பையன்களின் குரல்களும், கைகளும் மட்டுமே அந்த ஜன்னலில் நீண்டன. பெரியவர்கள் 'ஒட்டாத ஜாதி' என்று ஒதுங்கியே போனார்கள். 'முன்னால் இருந்தாரே. நம்மடவாள் சீனுவாசன்'னு, அது எவ்வளவு சௌகர்யமாக இருந்தது' என்று அவன் காதில் விழாமல் பேசினர் - அவன் காதில் விழுவதற்காக! கிணற்றடியிலும் கோயில் வாசலிலும் தெரு ஓரத்திலும் அவனது உயர்ந்த உருவம் நடந்து போகையில், பெண்கள் மேலாடையை மறு தோளுக்கு இழுத்துவிட்டுக் கொண்டு ஒதுங்கி நின்றார்கள். 'இதென்ன ஜன்மா. இப்படி நடந்து தெருவில் மனுஷாள் தலை காட்ட வொட்டாமல் அடிக்கிறானே-விக்னேசுவரா?' என்று கன்னத்தில் அடித்துக்கொண்டாள், ஊருக்குப் பெரியவளான வைதேகிப் பாட்டி.

''வைதேகி அத்தை. நான் எழுதியிருக்கிறேன். வரட்டும். ஒரு ஏற்பாடு செய்யத்தான் வேண்டும்.'' என்று நைவேத்ய மலர்களை நீட்டிய கையில், எட்டி உதிர்த்தவாறு சொன்னார் வைத்தியநாதபட்டர்.

''எதுக்கும் நீ நன்னா பார்த்துக்கோ. எதுத்தாப்'லே வந்து குடியேறியிருக்கான். அந்தப் பொண் வாசுகியை, அங்கே இங்கே லாந்த விடாதே. சொல்லிப்பிட்டேன்.''

''தெரியும். பார்த்துக்கிறேன்.''

இரவில் ஆளொழிந்த சூரங்காடு கிராமத்தின் அக்ரகார தெருவிற்கப் பால், வேலமரக்காட்டில் நரிகளும் உமிட்டான் பறவைகளும் ஊளை யிட்டன. சோமுவிற்கு நாளோட்டத் தில் நிலைமை பழக்கமாகிவிட்டது. வேலை. திரும்பிப்பாராத நடைமுறை. உண்டு - இல்லை என்ற சொல். எல்லாம் அத்துடன் சரி. அவனது நெற்றியின் ஓரத்தில் வளர்ந்த புரு வத்தின்கீழ்,கொடுமைக்கும் நிதானத் திற்கும் நிறையிட்ட கண்களில் வெறித்துப் பார்த்து எதிர்த்து ஒரு கேள்வி கேட்க, வீம்பு பேசிய எந்த ஆத்மாவிற்கும் சக்தியற்றுப் போய்விட்டது.

''சார், உங்களைக் கொண்டு போய் இந்தப் பட்டிக்காட்டில் போட்டிருக் கிறார்களே. நிர்வாகமே வரவர மோச மாயிடுத்து'' மனக்குறையை அவ னுக்கு நல்லவர்களாகப் பேசி, நாய் போல வாலை காலுக்கடியில் வளைத்த னர் சிலர். எல்லாவற்றிற்கும் ஆமோ திப்போ, அலட்சியமோ அற்ற 'உம்' என்ற பதில்!

''மகா அழுத்தக்காரன்.''

அபூர்வமாகவும் பேச வேண்டிய தற்கும் பேசினன். அலட்சியமாக நடந்தான். 'எல்லாவற்றிற்கும் நானே' என்று தனக்குத்தானுக வேலை செய்தான். வம்பு, எதிர் வம் பாக விளையாதபோது-ஊர்க் கோடி யிலும் கிணற்றடியிலும் விக்னேசு வரர் சன்னிதியிலும் பேச்சின் சுவரம் இறங்கியது.

''சாதுதான். ஒட்டாத இனம் என் ருல் சர்க்காருக்குத் தெரியுதோ- போகட்டேன்'' என்று இறங்கி வந்த வர் வைத்தியநாத பட்டர்.

''ஒரு கவர் கொடுங்கோ சார். சில்லறையா ? பரவாயில்லை. எதிர்த் தாப்பிலேதான் இருக்கிறேன். நாளை வாங்கிக்கிறேன்''

''வேண்டாம். சர்க்கார் கணக்கில் அதிகம் இருக்கப்படாது. சில்லறை தருகிறேன்.'' பட்டர், வளித்த முகத் துடன் சில்லறையோடு இறங்கிப் போனுர்.

அந்தப் போக்கைத் தொடர்ந்த பார்வைதான் பழக்கத்தையும் பொல் லாப்பையும் கொண்டு வந்தது.

கிழவியின், வெள்ளை படிந்த கரு விழிபோல அடிவானம் விளறிக்குமை யும் காலையின் அமைதியில், பட்டர் வீட்டின் வாசற் கதவு திறப்பது, அரைத் தூக்கத்தின் பிரமைக் கனவு போல தினமும் சோமுவிற்கு அனு பவப்பட்டது.மெல்லிய குளிர் காற்றின் துணையுடன் ஆற்றுக்குப் போவார் பட்டர். பிறகு, விக்னேசுவரர் ஆல யத்து 'பிராதற்கால' பூஜை, உச்சி வேளை 'நைவேத்யம்' எல்லாம்முடிந்த பின்னர்தான் வீடு திரும்புதல். அது வரையில் அந்த வீட்டின் சாத்திய கதவிற்கு அப்பால் என்ன ? விடியாத விடிவின் உறக்கம் தெளிந்த வெறு மையில் படுக்கையில் இருந்தபோது, அவனுக்கு காரணமாகவோ, அகா ரணமாகவோ அந்த சந்தேகம் நெஞ்சை வளைத்தது.

அதன் ரகசியந்தான் என்ன ?

''சாமி. குருக்கள் ஐயா மவளுங்க. குத்துவிளக்கு மாதிரி. நீங்க பாத் திருக்கமாட்டீங்க. அவுங்க பெரிய வங்க ஆயி எட்டுக்குமேலே பத்து வருசமும் ஆவுமுங்க. நொள்ளையும் நொக்காணுமும் சொல்லிக்கிட்டு குருக்களையா தான், அதை வீட் டிலேயே வச்சிருக்காங்க. விசயம் மூணுவதாளுக்குதெரியவாணுமுங்க. நீங்க எங்கே விடப்போறீங்க. உங் களுக்கு அதா வேலை ?''—பள்ளத் தெருவிலிருந்து வந்த குளுவான் வாய்ப்போக்கில் இந்த விபரத்தைச் சொன்னுலும், அந்த லட்சியமற்ற வாழ்வின் பார்வைக்கு ஒரு 'பொட்டு' அமைந்ததுபோல மனம் தணிந்தது. 'ஓ, இதுவா ரகசியம்!''

பிறகு, பார்க்க வேண்டுமென்ற எண்ணம். அதற்கான வளைவு நெளி வான நடை. வாழ்வு முழுதும் இருட்டை மெழுகி நிமிர்ந்து நடந்தா லும், **கண்ணில்** ஒளி வந்து

மோதுகையில் கூச்சம் இமையை படபடக்க வைக்கிறது.

ஒருநாள். மஞ்சள் மாறாத வெயி லின் மாலை வேளையில், திறந்த ஜன்ன லில் உலகைப் பார்த்துக்கொண் டிருந்தபோது, எதிர்த்த வீட்டின் பாதி திறந்த வாசலிடையே அந்த உருவம் தெரிந்தது! விளக்கின், சிறுமீன் போன்ற சுடரின் அசையாத தவிப்புபோல, களங்கமற்ற-நிறைவு அடைந்த ஒரு பெண்மை! கண் களிலே ஏக்கத்தின் தவம். முகத் திலே மாலை மலரின் குழைவு. நிலை யிலே, அத்தனை சுமையையும் வலிக் காமல் தாங்கி நிற்கும் அழுத்தம்-அலட்சியம். யாருக்காகவோ எதற் காகவோ, கற்பாந்த காலமாக நின்றுகொண்டிருப்பதாக பிரமை - வேதனை!

"வாசுகி-இந்த நேரத்தில் வெளியே என்ன பார்வை! உள்ளே போ. வேலையைப் பார். சாமி பீடத்தில் தீர்த்தமெடுத்து வை. நான் கோவி லுக்குப் போய்விட்டு வருகிறேன்." வைத்தியநாதபட்டர் சொல்லிவிட்டு வெளியே வந்தவர், அவனையும் பார்த்துவிட்டார்.

"சாரவாளா. வெளியே எங்கும் போகவில்லையா?" 'வெளியே போய் தொலைவதுதானே.'என்ற பொருளில் விசாரணை. வழக்கமான "உம்" என்ற பதில் தெருக்கோடி தாண்டு வது வரையில், திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே போனார் பட்டர்.

விக்னேச்வரர் ஆலயத்து மணி, ரீங்காரம் செய்தது! வாசுகி! வாசுகி! என்று ஒவ்வொரு திசையி லும் ரீங்காரம் எதிரொலி கொண் டது! தொலைவில் பனைமரக் குடை களிலும், வேலமரப் பந்தல்களிலும், அப்பால் மலைக்கோட்டிலும், மேகத் திலும், வானத்திலும், வாசுகி மின்ன லாக, காற்றாக- மழைத் துளியாக-சோகமாக, சுமையாக-தளர்வாக-ஏக்கமாக, பாதி திறந்த கதவிற்குப் பின்னால் நின்றுகொண்டு காட்சி யளித்தாள்.

நம்பிக்கையும், ஆசாரமும், பண்பு களும் இல்லாமையும்- எல்லாமாக சேர்ந்து சுவராகவும் கதவாகவும் மாறி, வாசுகியைக் கால காலமாக அங்கே சிறை வைத்திருந்தன. அடைத்து வைக்கப்பட்ட அந்த அழ கின் மீது, விபரம் தெரியாமல் ஒரு அனுதாபம் கொள்ள அவனது இத யம் குனிந்து கொடுத்தது. குனிந்த போதும் அந்த நிமிர்ந்த கம்பீரம் குறையவேயில்லை.

பிறகு ஒரு நாள். நல்ல வெயில் தீபோல வெயில். மேசைமேல் அடுக் கிய காகிதக் கட்டுகளிலிருந்தெல் லாம் ஆவி பறக்கும் பிரமையாக வெளியே வெயில். தெரு சூன்யத்தில் வெளுத்து வெறிச்சிட்டுக் கிடந்தது. வந்த பணத்தை எண்ணிக்கொண்டி ருந்தபோது, அந்த எதிர் வீட்டிலி ருந்து இதயத்தைப் பறித்தெடுத்த ஒரு குரல். தறைத்து நிறுத்தினாற் போல், "அம்மா..."என்ற ஒரு குரல் தான். எண்ணியதையும் எண்ணாத தையும் அப்படியே போட்டுவிட்டு, 'சரக்'கென்று தெருவைத் தாண்டி சாத்திய கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தபோது, உள் சமை யற்கட்டில் அடுப்பில் பொங்கிய கஞ் சியை காலில் கவிழ்த்துக்கொண்டு வாசுகி விழுந்து கிடக்கிறாள். "பாவிப் பொண்ணே, கவிழ்த்துட்டியே என்ன செய்ய...என்ன செய்ய?" என்று தண்ணீர்த் தவலையையும், உப்புப் பாண்டத்தையும் துழாவிக் கை பிசைந்து நின்று தவிக்கிறார் வைத்திய நாத பட்டர்.

நிழல் நுழைந்ததுபோல அவனைக் கண்டதும் பட்டருக்கு என்ன தோன் றிற்றோ,

"பாருங்கள் சார்! ஒன்றிலும் கவன மில்லை. கஞ்சியைக் கவிழ்த்துக் கொண்டாள். என்ன செய்வதென்றே புரியவில்லை!"

"விபூதி இருக்கிறதா?"

"தரேனே"

அவன் குனிந்து அவளருகில் அமர்ந்தபோது, அந்த ஜ்வாலை

பட்டதோ-அவள் புரண்டு ஒருக் கனித்துப் படுத்தாள். காலின் பாதத்தில் கஞ்சிவழிந்த வெப்பத்தின் நடுக்கம் மாறவில்லை. இளவாழையின்உள் தண்டுபோன்ற காலில் விபூதியை அள்ளிப் பொதிந்துவிட்டு, மெல்ல விசிறியால் விசிறியபோது, பனிசுமந்த மலரின் இதழ் நடுக்கம்போல வாசுகியின் கண்இமைகள் திறந்தன. எதிரே அவனைக் கண்டதும் விளறிய முகத்தில் நாணம் சிவந்தது.

''ரொம்ப உபகாரம் சார்; ரொம்ப உபகாரம். வாசுகி, எப்படி இருக்கிறதடீ? நல்லவேளையாக சாரவாள் வந்தார்...''

'ஓ...அந்தப் புதிரா? ஓட்டாதவன் என்று ஒதுக்கிவைத்த அலட்சியமா-ஆபத்திற்கு வீடேரி வந்தது-' சோமுவின் பார்வையில் வாசுகியின் அந்த பாவம் பேசியது!

''வாருங்கள் சார். வெளியே உட்காருவோம். வாசு, மெல்ல ஏந்து போடீ. போய் முகத்தை அலம்பிக் கொள். விழுந்து வச்சுடாதே.''

அன்றிலிருந்து அந்த அலட்சியம் நம்பிக்கையாயிற்று. ''ரொம்ப கஷ்டம் சார், ஜீவியத்தை ஓட்றது. மாசம் பத்தும் பதினைஞ்சும் கோயில் லேருந்து வறது. வெறும் ரசம் சோறுக்குக் காணுது. பத்து வருஷமாச்சு சார்; பெண்ணுக்கு ஒரு வழியை காணவில்லை. தாயா, பிள்ளையா? எல்லாம் நானே பார்க்கணும். விக்னேசுவரன் என்ன நினைச்சிருக்கானோ?''

பட்டர் அடுத்துப் பழகி, வேதனையையும் விரக்தியையும் அவனுக்குச் சொன்னபோது,ஊர் இரண்டுபட்டது.

''என்னடாப்பா வைத்தி, நீயா இப்படி ஆகிவிட்டாய். தொலைச்சுக் கட்டிடுவதான் ஆச்சுண்ணு நின்னியேடா! காலம் கெட்டுப்போச்சு'' என்றாள் வைதேகிப்பாட்டி.

''மனுஷாள்லே ஓட்டினது ஓட்டாதுண்ணு என்ன இருக்கிறது அத்தை! ஆபத்து, சங்கடம் என்று ஒன்று வந்தால் எல்லாரும் ஒன்றுதான்.

அந்த மனுஷனும் அப்படியொன்றும் கடைமுடிஞ்சதா இல்லை. நல்லவன்.''

இவ்வளவாகியும், தெருவில் இன்னும் அவன் ஆகாதவன் தான்!

ஆகாத காலமாகக் கொஞ்சகாலம்–வாசுகி அவனை நிமிர்ந்து பார்ப்பாள். வாசலில் வந்து நின்று, ''அப்பா இல்லையா?'' என்று கேட்டால், ''இல்லை வந்துவிடுவார்; உள்ளே வந்து உட்காருங்களேன்'' என்று சொல்லுவாள். அதற்குமேல் இருபகுதியிலும் பேச்சு ஓய்ந்து போகும். அந்த கம்பீரமும் அந்த வாட்டத்தின் கனவும் மௌனத்தில் மூச்சுக் காற்றை இழையவிட்டு நிற்கும். 'சோமு அண்ணா'' என்ற குரல் கேட்டால் அவனும், 'வாசுகி' என்ற பெயர் கேட்டால் அவளும் அரை உறக்கத்தின் கனவிலிருந்து திடுக்கிட்டு விழித்துக்கொள்வதுபோல, கவனத்தைச் சிலுப்பி நிற்பார்கள். ஆனாலும் அணையை மீறி அந்தப் பெருக்கு வழிந்ததேயில்லை. மகுடிக்குக் கட்டுப்பட்டு தலையுயர்த்தி ஆடாமல் நின்று கவனிக்கும் நாகம்போல அவனும்–அசையாது நின்றெரியும் தீபநாக்குபோல அவளும் ஏதோ ஒன்றிற்காகத் தியானம் செய்துகொண்டிருந்தனர்.

அப்படி நாட்கள் தியானத்தின் தவிப்பாக, தவிப்பின் தியானமாக வளர்ந்து போயின.

அன்று வைத்தியநாத பட்டர் ஆலயத்திற்குப் போகவில்லை. உபசாந்தி குருக்கள் வந்து சாவியை வாங்கிக் கொண்டு போனான். வாசல் கூட்டிப் பெருக்காமல் கோலம் போடாமல் வெறிச்சிட்டுக் கிடந்தது. பொழுது புலர்ந்து கொஞ்ச நேரத்திற்குப் பின்னர், பட்டர் அந்த வாசல் ஏறி வந்தார்.

''சாரவாள்''

''வாருங்கள்''

''இன்று கோவிலுக்குப் போகவில்லை, வாசுகிக்கு உடம்பிற்காகவில்லை. படுத்துவிட்டாள். உப்பிலியாபுரம் போய் பெரிய வைத்தியரைக் கூப்பிடலாமென்று பார்க்கிறேன். அத்தையும் ஊருக்கில்லை; ராமேச்வரம் போனாள். சித்தெ அந்தப் பக்கம் பார்த்துக்கொள்ளுங்கள்''

''உம்...''

''என்ன?''

''நான் பார்க்கலாமா?''

''வாசுகியையா? சாரவாளுக்கு மருத்துவம் தெரியுமென்று சொல்லவேயில்லையே''

''ஏதோ தெரியும். சொல்லவில்லை. வாருங்கள் பார்ப்போம்''

வாசுகி துவண்டு படுத்திருந்தாள். சோமு வந்தமர்ந்து, அந்தக் கையை எடுத்துப் பார்த்தபோது–அவள் கண் திறந்து பார்த்தாள்.

''வாசு, நம்ம சாரவாள்டி. எப்பிடி இருக்கிறதுன்னுட்டு சொல்லு!''

வாசுகி பேசவில்லை. கண்கள் மட்டும் அவனையே பார்த்தன. வெறும் பார்வை. குறிப்பில்லாத பார்வை.

''ஒன்றும் பயப்படும்படியாக இல்லை. ஓய்வு மட்டும் நிறையவேண்டும். நான் பார்த்துக்கொள்கிறேன்.''

''அவ்வளவு போதும் சார்; அவ்வளவு போதும்! இது ஒரு பெரிய சுமை சார். நான் என்ன செய்ய? யார் கையிலாவது பிடித்துக் கொடுத்துவிட வேண்டுமே!''

வாசுகி படுக்கையிலேயே கிடந்தாள். எந்த நோயும் இல்லாத தளர்வு. காரணமற்ற மௌனம். யார் எது கேட்டாலும் வெறுப்பு. அவனது உயர்ந்த உருவம் அந்த கம்பீரத்துடன் அருகில் வரும்போது மட்டும் இனம்புரியாத ஒரு கலவரம். அவன் மருந்தெடுத்துக் கொடுத்தால், ''சோமு அண்ணா, எனக்கெதற்கு மருந்து...? எனக்கு நோயொன்றுமில்லையே'' என்பாள். அதற்கு அவனிடமிருந்தும் கண்டிப்போ, எதிர்ப்போ எவ்விதப் பதிலும் வராது. எல்லாம் தெரிந்த அடக்கம்.

''வாசுகி.''

''சோமு அண்ணா.''

"மருந்தைச் சாப்பிடேன்."

"வேண்டாம்."

பிறகு, மௌனம். அவன் வெகு நேரம் அவள் அருகிலேயே அமர்ந்திருப்பான் புரியாத பாடமும், தெளியாத ஓவியமும்!

"என்னடா வைத்தி! பிறத்தியான் ஒருத்தன் இப்படி நாளெல்லாம் வாசல் ஏறி இறங்குகிறானே. நீயும் சேர்ந்துதான் இந்தக் கூத்து நடக்கிறதோ?"—'தீர்த்தாடனம்' கழிந்து வந்த வைதேகிப்பாட்டி ஊரோடொத்து வசை பாடினாள்.

வைத்தியநாதபட்டருக்கு, பதிலற்றுப்போய் எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன. பெரிய மருத்துவன்கூட வந்து பார்த்துவிட்டு நோயொன்றுமில்லையென்று போய் விட்டான். வாசுகி, எப்பொழுதும் சோமுவைத் தேடினாள். "சோமு அண்ணா. ஏன் வர இவ்வளவு நேரமாயிற்று? சோமு அண்ணா நீ என் அருகிலேயே இரேன். சோமு அண்ணா, நான் செத்துப்போனால் நீ அழுவாயா? சோமு அண்ணா, நீ யாரோ நான் யாரோ!" வாசுகி மெலிந்து மெலிந்து போனாள். சோமு ஒழிந்த நேரமெல்லாம் அவள் அருகிலேயே இருந்தான். மகளின் தீராத நோயும், ஊரின் வேண்டாத பேச்சும் வைத்தியநாதபட்டரை மௌனியாக்கிவிட்டிருந்தன. தாங்கமாட்டாத, பெரிய சுமையைச் சுமந்துகொண்டு நிமிர முடியாது நடக்கும் பாவம்!

அன்று வாசுகி ஓயாது பிதற்றிக்கொண்டேயிருந்தாள். சோமுவும் வேலையைக்கூட மறந்து அவள் அருகிலேயே இருந்தான். பட்டர் வெளியே போயிருந்தார். திடீரென்று வாசுகி எதை நினைத்துக்கொண்டாளோ,

"சோமு அண்ணா, நான் ஒன்று கேட்கிறேன் தருவாயா?" என்று கேட்டாள்.

"என்ன?"

"என் கடைசி ஆசை..." என்று உதட்டைக் குவித்தாள். சோமுவிற்கு என்ன தோன்றியதோ மெதுவாகக் குனிந்து, அவளது நெற்றியில் முத்தமிட்டான்.

"வாசுகி, நீ என் தங்கை!" என்றான்.

வாசுகி செத்துப் போனாள்.

"அண்ணா. நான் போகிறேன், அண்ணா நான் தனிமையாகப் போகிறேன் என்றெண்ணாதே. உன் அன்பையும் கொண்டு போகிறேன். நான் கலக்கப் போகும் சூன்யத்தின் பாதைக்கு நம்பிக்கையாக வருவது உன் அன்புமட்டுந்தான். நான் போகிறேன், அண்ணா"

வாசுகி மறைந்துபோனாள். பார்த்து பழகாமல் இதயங்களில் அன்பை வளரவிட்டு, ஏக்கமும் ஏக்கமுமாகி கலந்த வாசுகி மறைந்து போனாள். அவன் வாழ்வில் இருள் சூழ்ந்தது போலாயிற்று.

கடல் அலைகளின் ஓசை மறைந்து போயிற்று. அவன் இருளில் நடந்துகொண்டிருந்தான். ★



ராஜஸ்தானிலுள்ள கோட்டா பொருட்காட்சிச்சாலை முக்கியமாக பிராந்திய ரீதியான கலாசாரக் காட்சிச்சாலையாகும். ஹடோட்டி கலாசாரத்தில் அக்கரையுள்ளவர்களுக்கு அது தனி முக்கியத்துவமுள்ளதாகும்.

இந்தக் காட்சிச்சாலை அதன் முந்திய இருப்பிடமான பிரஜ் பிலாஸ் தோட்டத்திலிருந்து தற்போதிருக்கும் ஹவா மகாலுக்கு 1951-ல்

வரப்பட்டது. முந்திய ஸ்தலத்திருக்கையில் அங்கே முக்கியமாகச் சிற்பங்கள் மாத்திரமே இருந்தன. இங்கு சமீபத்தில், கையெழுத்துப் பிரதிகள் ஓவியங்கள், போர்க் கருவிகள், ஆடை வகைகள் முதலியவையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்தக் காட்சிச்சாலை பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பிரிவில் தொல்பொருள்கள், சிற்பங்கள், சிலாசாசனங்கள், நாணயங்கள் ஆகியவைகளும், இன்னொரு பகுதியில் சித்திரங்கள் நிறைந்த அல்லது சித்திரங்கள் இல்லாத கையெழுத்துப் பிரதிகளும், மூன்ருவது ஒரு பிரிவில் ராஜஸ்தான் ஓவிய வகைகளைச் சேர்ந்த ஹடோட்டி, ஜெய்ப்பூர், உதயப்பூர் ஓவியங்களும் இருக்கின்றன. மீதியுள்ள இரண்டு பகுதிகளிலும் கோட்டாவின் முன் கால மன்னர்களின் ஆடை வகைகளும், போர்க் கருவிகளும், இலச்சினைகளும் இதர பலவிதமான பொருள்களும் வைக்கப்பட்டிருக்கின்றன.

அக்கட்டடத்தின் முதல் மாடியில் புராதன காலப் பொருள்கள்—முக்கியமாகச் சிற்பங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. பக்கத்திலுள்ள சிறிய அறையொன்றில் நாணயங்களும், சிலாசாசனங்களும் இருக்கின்றன. இன்னொரு பெரிய அறையில் ஓவியங்கள், ஆடை வகைகள், போர்க் கருவிகள் இன்னும் இதர பொருள்கள் முதலியவை உள்ளன.

இரண்டாவது மாடியில் முக்கியமாகக் கையெழுத்துப் பிரதிகளே இருக்கின்றன.

இப் பொருட்காட்சிச் சாலையின் தொல்பொருள் பிரிவில். படோலியில் கிடைத்த சேஷசாயி விஷ்ணு சிலை, பத்வானிலுள்ள நான்கு யக்ஞ ஸ்தம்பங்கள், சூரியன், விஷ்ணு இன்னும் இதர உருவங்கள் ஆகியவை இருக்கின்றன. அங்கு காணப்படும் சிற்பங்கள் பெரும்பாலும் கி. பி. 8, 10-ம் நூற்றுண்டுகளைச் சேர்ந்தவையாகும்.

### ஓவியங்களும் கையெழுத்துப் பிரதிகளும்

இந்தக் காட்சிச்சாலையிலுள்ள ஓவியக்கூடத்தில் உதயப்பூர், ஹடோட்டி பிரிவுச் சித்திரங்கள் வைக்கப்பட்டுள்ளன. இவைகளைத் தவிர, கோட்டா, ஜயப்பூர் பிரிவுச் சித்திரங்களும் உள்ளன.

இங்குள்ள போர்க் கருவிகள் பகுதியில் அந்தக் காலத்துப் படை வீரர்களால் உபயோகிக்கப்பட்ட வாள், விசித்திரமான துப்பாக்கிகள், கவசங்கள் முதலியவைகள் இருக்கின்றன.

கோட்டா காட்சிச்சாலையில் பல்லாயிரக்கணக்கான கையெழுத்துப் பிரதிகள் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. ஹிந்தியிலும், சமஸ்கிருதத்திலும் உள்ள இச்சுவடிகள் வெகு நுட்பமான எழுத்துக்களில் எழுதப்பட்டு, அழகான சித்திரங்களும் உள்ளவையாக இருக்கின்றன. சங்கீத சாத்திரத்திலிருந்து சமய சம்பந்தமான சேதிகள் வரை அப் பிரதிகளில் விளக்கப்பட்டிருக்கின்றன. வான சாஸ்திரமும் ''யந்திரங்களும்'' பற்றிய பல சுவடிகள் உள்ளன. பாகவதத்தின் இரண்டு பதிப்புகள் முக்கிய கவனத்துக்குரியவை. அவற்றில் ஒரு பதிப்பில், எல்லா பக்கங்களிலும் அழகான வர்ணப் படங்களும், இன்னொன்றில் தங்க வேலைப்பாடுகளும் நிறைந்திருக்கின்றன. அதிலுள்ள எழுத்துக்கள் மிக நுட்பமாக எழுதப்பட்டிருக்கின்றன.

''கான்ஸ் – நந்தா – சம்மேளனை''ச் சித்தரிக்கும் அபூர்வ ஓவியமொன்றைப் படத்தில் காணலாம். இது உதயப்பூர் பாணியில் வரையப்பட்டிருப்பதாகும். ★

# விண்மீன்கள்

மனிதன் தோன்றிய நாள் தொட்டு, வானத்திலே தூங்கா ஒளிவிளக்குகளாய்த் தென்படும் விண்மீன்களைப் பார்த்திருப்பான். அவனது அன்றைய அறிவுக்கு ஏற்றபடி அவைகளைப் பற்றிச் சிந்தித்திருப்பான். எல்லையற்ற நீலப் பெருவெளியினுள் நுழைய ஆசைப்பட்டிருப்பான். அங்கேயும் நம்மைப் போன்ற மனிதர்கள், உயிர்கள், தாவரங்கள் இருக்குமோவென்று ஐயமும் பட்டிருப்பான். அவனது இடைவிடாத சிந்தனையின் விளைவுதான், ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்பு, இன்று 'செயற்கை நிலா'க்கள் உலகை வலம் வருகின்றன.

இரவில் நாம் தலைதூக்கிப் பார்த்தால் தெரியும் கோடானு கோடி விண்மீன்கள் நமக்கு மலைப்பையே ஏற்படுத்தும். இதை மனிதனால் எட்டிப்பிடிக்க முடியுமா என்றும் நினைக்கிறோம். நாம் காணும் ஒவ்வொரு விண்மீனும் கதிரவனைப் போன்றது தான். இவைகளின் தன்மை பற்றி இன்னும் சரியாக அறியக் கூடவில்லை. கதிரவனையே எடுத்துக்கொள்ளுவோம். அது, தன்னைத் தானே எரித்துக்கொண்டு, ஒளியையும், வெப்பத்தையும் கக்கும் தீக்கோளமாக இருக்கிறது. ஒவ்வொரு நிமிடத்திலும் கதிரவன் தன் எடையில் 250 மில்லியன் டன் எடையை எரித்துக் கொள்ளுகிறது. நாம் சாதாரணமாக வெப்பத்தை அளக்க உபயோகப்படுத்தும் பாதரச இழையை (Mercury Thread) இந்தக் கதிரவனது வெப்பத்தை அளக்க உபயோகப்படுத்தினோமானால் 25 மைல் உயரமுள்ள பாதரசமானி தேவைப்படும். இது எவரெஸ்ட் சிகரத்தின் உயரத்தைப் போன்று ஐந்து மடங்காகும்.

இந்த வெப்பநிலை மிகச் சக்தியுள்ள அணுகுண்டு வெடிக்கும் போது ஏற்படலாம். இப்படி வெளியாகும் சக்தியையும், எரிந்து வீணாகும் பொருளையும், கதிரவனுடைய முழு உருவத்தோடு ஒப்பிடும்போது, அது மிக மிகக் குறைவானதாகும். இந்த எரிநிலை ஆயிரமாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து நடந்து வருகிறது. ஆனால் நாம் நாளும் காணும் கதிரவனில் இந்தச்செயல்நடைபெறுகிறதென்று எத்தனைபேருக்குத் தெரியும்!

விஞ்ஞானம் நமக்களித்த உண்மைகள் நாம் காணும் விண்மீன்கள் அத்தனையும் ஒளிதரும் கதிரவனைப்போன்றவை என்பதே. மிக மிகப் பெரிய விண்மீனானது (Super Giant Alpha) இத்தகைய கணக்கற்ற கதிரவன்களைத் தன்னுள் அடக்கிக் கொள்ளக்கூடியதாய் இருக்கிறது. வானியல் வல்லுனர்கள் இத்தகைய விண்மீன்களைப் 'பல கதிரவன்களைக் கொண்ட ஒரு விண்மீன்' என்றே குறிக்கின்றனர். ஆனால் ஒரு பெரிய விண்மீனைக் கனமுடையதாகக் கொள்ள முடியாது.

பெட்டல்கீயூஸ் (Betelgeuse) என்ற விண்மீன் கதிரவனை விடப் பல மடங்கு உருவத்தில் பெரிது. ஆனால் அது கதிரவனை விட 40 மடங்கு கனம்தான் அதிகமுள்ளது. இந்த பிரமாண்ட விண்மீன்கள், கனமான பொருட்களை விட நாம் சுவாசிக்கும்

காற்று போன்ற மெல்லிய பொருட்களாலேயே அமையப் பெற்றவை. ஆனால் சில இதற்கு நேர்மாருக இருப்பதும் உண்டு. சிரியஸ் பி (Sirius B) உலகத்தை விட மும்மடங்கு பெரிது. கதிரவனை விட 50 ஆயிரம் மடங்கு சிறியது. ஆனால் கதிரவனைவிட மிகக் கனமானதாகும். ஒவ்வொருகன அங்குலப் பொருளும் (cubic inch mass) ஒரு டன்னை விட அதிக எடையுள்ளது. இத்தகைய அடர்வுதிறனை (density) நாம் கேள்விப்பட்டதேயில்லை.

செப்ஹெய்டு வேரியபில்ஸ் (Cepheid variables) என்ற வகைப்பட்ட விண்மீன்கள் ஒரு ஒழுங்கான இடைக்காலம் விட்டு ஒளி குன்றியும், ஒளி மிகுந்தும் காணப்படுகின்றன. ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட இடைக் காலத்திற்குப் பின்னர் மீண்டும் தங்களது பழைய ஒளியை அடைகின்றன. இந்த முடிவில்லாத சுழற்சியின் தன்மையை அறிய முடியவில்லை.

நோவா (Novae) வகைப்பட்ட விண்மீன்கள் சில சமயம் ஆயிரக்கணக்கான ஹைடிரஜன் குண்டுகள் வெடித்தமாதிரி மிகப் பயங்கரமாகச் சிதறும். ஒரு தடவை வெடித்த "நோவா"வானது மிகப் பிரமாண்டமாக முன்னிலும் மிக்க ஒளியோடு துலங்கிப் பின்னர் படிப்படியாக ஒளி குன்றிக் கடைசியில் ஒன்றுமேயில்லாது போய்விடும்.

அநேக விண்மீன்களடங்கிய பெரிய விண்மீன் குடும்பங்கள் தனித்தனியாகச் சஞ்சரிப்பதாக வும இருக்கின்றன. இவை 'மின்னெளிக்கூட்டங்கள்' (Galaxy) எனப்படும என்று வானியல் வல்லுனர்கள் அறிவிக்கின்றனர்.

கதிரவனும் இப்படிப்பட்ட ஒரு கூட்டத்தைச் சேர்ந்த 40 மில்லியன் விண்மீன்களில் ஒன்று. அவை யாவும் மிகத் தொலைவில் அமைந்திருக்கின்றன. எல்லா விண்மீன்களும் சேர்ந்து ஒரு சக்கரவடிவமாக அமைந்துள்ளன. இவைகளும் சக்கரத்தைப் போலவே சுற்றுகின்றன. இந்தப் பிரமாண்ட சக்கரத்தின் குறுக்களவு ஒரு லட்சம் ஒளி ஆண்டுகள். (ஒரு ஒளிக்கதிர் ஒரு ஆண்டில் செல்லும் தூரமே ஒரு ஒளி ஆண்டு ஆகும். ஒளியின் வேகம் விநாடிக்கு 1,86,000 மைல்கள்.)

கதிரவன் இந்தச் சக்கரத்தினுள் இருசுக்கும்; வெளிப்பட்டாவிற்கும் நடுவில் அமைந்துள்ளது. கதிரவன் தன் குடும்பத்துடன் இருசைச் சுற்றிக்கொண்டு ஒரு நாளைக்கு ஒரு கோடியே முப்பது லட்சம் (1,30,00,000) மைல்கள் வேகத்தில் சுற்றுகின்றது. இந்த வேகத்தில்சென்ருலும் கூட ஒரு முழுச் சுற்று வர இரு மில்லியன் நூற்ருண்டுகள் தேவைப்படுகின்றன.

மிததியுள்ள பெருவெளியிலும் இதே போன்று பல 'மின்னெளிக் கூட்டங்கள் ஒன்றுக்கொன்று மிகத் தொலைவில் சக்கரவடிவாய்ச் சுழன்றுகொண்டிருக்கின்றன. இத்தொலைதூர 'மின்னெளிக் கூட்டங்களை' நாம் தொலைநோக்கியால் (Telescope) பார்த்தால் அவற்றின ஒளி நமக்கு வந்து சேர ஏழுலட்சத்து ஐம்பதாயிரம் ஒளி ஆண்டுகள் தேவைப்படலாம். சுழற்சியும், வேகமும் இல்லாதவை எங்குமே கிடையாது என ஆராய்ந்திருக்கின்றனர்.

—பா. இராசேந்திரன்.

# நெருப்பாறு

**கா. அப்பாதுரையார்**

**நா**ம் உலகாண்ட இனம் என்பதையே இன்று தமிழர் முற்றிலும் மறந்து சிறு வாழ்வு வாழ்கின்றனர். ஆனால் தமிழர் உலகாண்ட பெரு வாழ்வுக் காலங்களிலும் இன்றைய தமிழரைப்போலவே தாம் உலகாண்ட பேரினம் என்பதை முற்றிலும் மறந்து வாழ்ந்தமற்றொரு மரபு உண்டு. அதுவே தொல்பழந் தமிழினத்தின் ஒரு பழம் பெருங் கிளையாகிய மலாய்ப் பழங் குடியினம்.

தமிழகத்தில் பண்டைப் புது வாழ்வின் புது மலர்ச்சிகளின் தூண்டுதலால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய்ச் சோழ பாண்டிய அரசுகளின் தமிழ்க் குடிமக்கள் மலாயாவிலும் தென் கிழக்காசியாவிலும் கடலோரப் பகுதிகளில் சென்று குடியேறி வாணிகக் களங்களும் நாடு நகர் குடியரசுகளும் அமைத்து முன்னேறி வந்தனர். மலாய் மக்களில் பலர் இத் தமிழருடன் தமிழராகக் கலந்து வாழ்ந்தாலும், தனி வாழ்விலும் தன்னுண்மையிலும் தருக்கிய பழங்குடி மரபினர் பலர், மக்கள் புக முடியாத காடுகளிலும் மலம்பாறைகளிலும், ஆழ்கடலும் கொடும் பாறைகளும் ஒருங்கே கூடி அச்சந் தரும் கம்பலை விளைத்த கடற்கரைப் பகுதிகளிலும் திரிந்து வாழ முற்பட்டனர்.

மலம் பாம்புகளுடன் மலம் பாம்புகளாக, முதலைகளுடன் முதலைகளாக, சிறுத்தைகளுடன் சிறுத்தைகளாகப் பழகிவிட்ட அவர்களை அணுக மற்ற நாடு வாழ் குடிகள் அஞ்சினர். அவர்கள் தம் பழங்குடி இனத்தவரே என்பதைக்கூடத் தமிழரும் மற்ற மலாய் இன மக்களும் மறக்கத் தலைப்பட்டனர். ஏனெனில் நாகர் என்ற புதுப் பெயரால் தமிழ் உலகெங்கும் அவர்கள் புது வகையில் அறிமுகமாகத் தொடங்கினர்.

சங்க கால மூவரசர் புகழ் கடந்து முன்னேறி பல்லவப் பேரரசரின் ஆட்சிக்குட்பட்ட தமிழ்க் குடிகள் புதுப் புகழ் நாட்ட வெதிர் விதிர்த்து வந்த காலம் அது. வடதிசைப் பேரரசை முறியடித்த சாளுக்கியப் பெரும் பேரரசையே தடமழியச் செய்த பெருமை, பல்லவ இளைஞர் குருதிகளில் அன்று தலைதெறித்தோடிற்று. இது கடல் கடந்த நாடுகளிலும் செயலாற்றத் தொடங்கிற்று. பிற தமிழர்

**கி. பி. 826 முதல் 850 வரை ஆண்ட தெள்ளாறெறிந்த மூன்றாம் நந்திவர்ம பல்லவன் காலத் தமிழகத்தையும், மலாயாத் தமிழர் வாழ்வையும் பின்னணியாகக் கொண்ட, துணுக்குறும் காதற் கற்பனைச் சித்திரம் இது.**

**சுந்தரமூர்த்தி நாயனார் காலத்தவன் இப் பல்லவன். அவரால் அறுபத்துமூவரில் ஒருவராகக் கழற்சிங்க நாயனார் என்ற பெயரில் பாடப்பட்டவன் இவனே என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.**

எவரும் இதுவரை புகாத நாகர் வாழ் பகுதிகளில் புகுந்து, புது வழி புது நிலங் காணவும், அப்புது நிலங்களில் பல்லவ அரசரின் சிங்கக் கொடி நாட்டவும் பல்லவ வீர இளைஞர் புத்தார்வங் கொண்டனர். அப்புத்தார்வ இளைஞருக்கும் ஒரு புதிராய் அமைந்த வீர இளங்காளையே **முத்தரசன்.**

மலையருவிகளிலும் ஆழ்கசங்களிலும், காடுகளிலும் கடலலைகளிலும் கொடும்பாறைகளிலும் அவன் ஒருங்கே அச்சமின்றி ஓயாது அலைந்து திரிந்தான். அத்துடன் அவன் வீரன்மட்டுமல்ல; வீர கவிதையுணர்வும் உடையவன். இயற்கையின் எழிலார்ந்த வீறு மிக்க தோற்றங்களிலே அவன் இடையருக் காதலுடையவன். கமுகின் குலைகளிலும் தெங்கின் பாளைகளிலும், வாழை இளங்குருத்துக்களிலும் பிறர் காணும் அதே அழகை அவன் அவற்றில் மட்டுமன்றி மலம்பாம்புகளின் ஒய்யார வண்ண வளைவுகளிலும்,சிறுத்தைகளின் ஓயிலார்ந்த வீறுநடைகளிலும் காணமுடிந்தது. அத்துடன் புதுநிலமும் புதுவழியும் காணும் துடிப்பில் அவன் என்றும் தளராத புத்திளமையும் புதுமுறுக்கும் எய்தினான். எனவே மற்றத் தமிழரும் மலாய் மக்களும் ஒருங்கே அணுக அஞ்சும் நாகர்வாழ் காட்டகங்களைத் துளைத்தரிக்க அவன் தயங்கவில்லை.

மலாய்க்காடுகளில் அவன் காணாத காட்சியில்லை. துணிந்து மேற்கொள்ளாத இடையூறுகள், இடர்ப்பொறிகள் இல்லை. ஆயினும் கண்ட கண்ட காட்சிகளிலேயே மேலும் மேலும் புதுமை காணும் அகஆர்வம் கொண்டவனாய் அவன் அலைந்தான். ஆனால் திடீரென ஒருநாள் அவன் புதுமை வாழ்விலும் ஒரு புது மாறுதல், ஒரு புதுப்புரட்சி ஏற்பட்டது. காணாதது கண்ட, கனவிலும் கருதாததை நனவில் எய்தப் பெற்ற புத்தம்புதிய ஆர்வத்துக்கு அவன் ஆளானான். மலாய்க் காடுகளில்கூடக் காணமுடியும் என்று அவன் எதிர்பாராத பேரழகு, தமிழகத்தின் செல்வம் முழுவதும் திரண்டு முன்னின்றால்கூட ஏற்படாத பெருமகிழ்வை அளிக்கும் ஒரு மாய உரு,அவன் கண்முன்னே நின்றது! அவன் அதையே அவா ஆர்வ[illegible] தெறிக்கும் விழிகளுடன் வெறித்துநோக்கிக்கொண்டு நெடுநேரம் நின்றான்.

ஆம், காடும் நாடும், வானும்கடலும் காணாத மின்னலழகி அவள்! அவன் கண்ட, காண எண்ணிய எந்தப் பெண்ணுருவிலும் அந்தக் கடவுட் பேரழகை அவன் எதிர் பார்த்ததில்லை. பாம்பின் சட்டைகளும் மூங்கில்தாள்களும் கொண்டு புனையப்பட்ட அவளது ஆடை, அவளது உடலழகை ஒரு சிறிதும் மறைக்காமல் எழுதிக்காட்டிற்று. ஆனால் அந்த அழகு அவன் கண்ணையும் கருத்தையும் திறை கொண்டு அவனது ஆவியையே பறிப்பதாக இருந்தது. முற்றிலும் பூங்கொடி போன்ற உடல், வாழைக்குருத்துப்போல மெல்லிய, ஆனால் வெண்பளிங்குபோலப் பளபளப்பான மேனி, வானீலமோ கடல் நீலமோ எனும்படி நீலப் புகைப்படலம்போல, நீல அருவிகள்போல அவள் ஆக முழுவதின் பின்னணியாகப் புரண்டு தவழ்ந்த அவள் தலைமுடி காடாகப் படர்ந்து கிடந்தது. வானிடையே வெட்டி வெட்டி மின்னும் மின்னற்கொடியோ, கடலிடையே முத்தொளியுடன் படர்ந்த புத்தம் பவழக் கொடியோ என மயக்கத்தை இத் தலைமுடியும் மேனியழகும் அவளுக்கு அளித்திருந்தன. கண்ணாடி போன்ற விழிவழித் தோன்றும் இந்தப் பின்னணிச் சாயலின் ஒரு பகுதியோ என்னும்படி அமுத நிறம் படைத்த அவள் கண்ணின் மைய மணிகளைச் சுற்றிலும் சாதிபத்திரியின் நரம்புகள்போலப் படர்ந்த செவ்வரிகளும், செவ்வலரி

கள் போன்ற இதழ்களும் உள்ளங்கை, உள்ளங்கால் போன்ற பிற் பகுதிகளும் அவ்வுடலின் கண்கொள்ளா அழகுக்கு ஒரு மூன்ரும் வண்ணமாக, அதன் வெண்பளிங்கொளியையும் நீலப்பின்னணியையும் எடுத்துக்காட்டும் புதிய குருதிச் செவ்வண்ணமாக அமைந்தன. வெண்பளிங்கு நிறமும் நீலமும் செவ்வரக்கு வண்ணமும் கலந்த இத்தகைய அழகை முத்தரசன் மனித உலகிலோ, மனிதர் தீட்டும் உலகிலோகூடக் காண எண்ணியதில்லை. அது இயற்கையே எழுதிக் காட்டிய ஒரு மாயஓவியமாக அவனுக்குப் புலப்பட்டது.

அது உயிருடைய வடிவம்தாஞ, மாயநிழல் உருவமா; மனித மொழி பேசும் உருவா, வேறு தெய்வ உருவா என்று அவன் மயங்கித் தயங்கினன்.

அது உயிருடைய வடிவம்தான் என்பதை அதன் முகஒளி காட்டிற்று. அதன் உயிர்க்கவர்ச்சியை, பெண்மையை அதன் செவ்வலரி இதழ்களில் பரந்த புன்னகை எடுத்துக்காட்டி, அவனுக்குத் தேறுதலளித்தது. ஆஞல் அது வாய் திறந்து மழலைத் தமிழ்மொழியே பேசியபோது அவன் உள்ளம் மனித பாசங்களின் எல்லையில் வந்து நின்று துடித்தாடிற்று!

'நான் பேயல்ல, மனிதருடன் பிறந்த பெண்தான். என்னைக் கண்டு ஏன் இந்த அச்சம்?' என்ருள் அவள்.

'நீ பேயாய் இருந்தால்கூட இவ்வளவு அழகிய பேயைக் கண்டு நான் அச்சப்படமாட்டேன். நீ உயிருடைய உருவம்தாஞ என்றுதான் தயங்கி நின்றேன்!' என்ருன் அவன்.

அவள் கலகலவென்று சிரித்தாள். அச்சிரிப்பொலி கூழாங்கல்லிடையே விழும் மெல்லிய கானருவியோடையை அவனுக்கு நினைப்பூட்டிற்று. அதன் தோற்றமோ பூங்கொடி திடுமென முத்துமலர்க் கொத்துக்களைச் சிந்திச் சிதறியது போலிருந்தது.

அவளுடன் பேசிக்கொண்டிருந்த போது, அவன் உள்ளம் தன்னையே மறந்து இன்பஅலை தவழ்ந்து அதிலே ஊஞ்சலாடிற்று. அதனிடையே அவன், வந்த காரியத்தை மறந்தான். அவளும்தான் அவ்விடத்திலேயே முளைத்தவள்போலத் தன்னிலை மறந்துவிட்டதாகவே அவனுக்குத் தோன்றிற்று. ஆயினும் முதல் முதல் அறிவுத் தெளிவு பெற்றவள் அவளே. அவன் வந்த காரியமென்னவோ என்று கேட்டு, அவள் அவனை நிலவின் உலகிலிருந்து நிலவுலகுக்குக் கொண்டு வந்தாள்.

அவள் நின்ற பாறையருகே காஞறு கல்லைப் பீறிக்கொண்டு சுழித்தோடிற்று. அதன் ஒதுங்கிய பகுதியில் பாறையுடன் ஒரு படகு கட்டுண்டுகிடந்தது. அவன் அதைச் சுட்டிக்காட்டினன். 'அது உன் படகென்று நினைக்கிறேன்; அதில் என்னை வைத்து ஆறு கடத்திவிடுவாயா?' என்று அவன் கேட்டான்.

'ஆம்' என்ற பதிலை ஆவலுடன் எதிர்பார்த்து அவன் உள்ளம் துடித்தது. அந்த எழிலணங்குடன் ஒரே படகிலமர்ந்து ஆறு கடக்கும் ஆவல் சித்திரம் கற்பனை வடிவில் அவன் உள்ளத்தில் மிதந்தாடிற்று. ஆஞல் அவள் பதில் இந்த ஆர்வத்தில் நீர் கொட்டிற்று.

'படகு ஓட்டுபவள் நானல்ல; **மாந்தைப் பயல்.** சிறிது பொறுத்திருங்கள்; அவன் வந்துவிடுவான். அவனிடம் அதை ஒப்படைத்துவிட்டுச் செல்லவே நானும் காத்திருக்கிறேன்' என்ருள் அவள்.

அவன் உடம்பில் மீட்டும் உயிர் வந்தது. அதே சமயம் மாந்தைப் பயல்—அவன் யாராயிருந்தாலும் கேடில்லை—எவ்வளவு முடியுமோ அவ்வளவு நீண்ட நேரம் அவன் வராமல் இருக்கட்டும்என்று அவன் முத்தமிழ் அன்னையை நேர்ந்து கொண்டான். அவன் வந்துவிட்

டால் தன் இனிய கனவை நீட்டிக்க முடியாது போய்விடுமே என்று அவன் உள்ளூரக் கவலைகொண் டான்.

மாந்தைப்பயல் வர உண்மையி லேயே நெடுநேரமாயிற்று. முத்தமி ழனையை அவன் வேண்டிக் கொண்டது வீண் போகவில்லை. அவர்கள் பேச்சு இதனால் நீடித்தது. பேச்சு நீடிக்க நீடிக்க, ஒருவர் கருத் தில் ஒருவர் புகவும், ஒருவர் வாழ்வை ஒருவர் பேரளவு அறிய வும் வாய்ப்பு ஏற்பட்டது.

அவள் பெயர் **உருப்பளிங்கு.** அவள் தாய் யார்? தந்தை யார்? என்பது அவளுக்குத் தெரியாது. அவளை வளர்த்து வந்த தாய்ப்பாட் டனைமட்டும் அவள்நினைவில் வைத் திருந்தாள். அவள் தென்கடல் முழு வதும் ஆண்ட பேரரச மரபினள். அவள் முன்னோர் கலங்கள் சீனக் கடல்களிலும் தமிழக யவனக் கடல் களிலும் தங்கு தடையின்றித் திரிந்து வந்தன. ஆனால் தமிழகப் பேரரசனொருவனுடன் அம்முன் னோன் கொண்ட போட்டி, அவன் பேரரசுக்கும் அவன் வாழ்வுக்கும் கேடாய் முடிந்தது. அவள் தன் அக நாடும் நகரும் இழந்து தென்கடல் தீவுகளிலும் காடுகளிலும சுற்றிய லைந்தாள். உருப்பளிங்கின் பாட்டன் தென்கடல் தீவுகளிலுள்ள காட்டு மரங்களை வீழ்த்தி விசைப்படகுகள் அமைத்து அவற்றின்மூலம் தன் பேர்த்தியுடனும், மாந்தை என்ற பெயரனுடனும் மலாய்க்கரை வந்து சேர்ந்தான். அவனுக்குப்பின் உருப் பளிங்கும் மாந்தையும் நாகர்களு டன் பழகினர். நாகர்களுடன் நாகர் களாக மலாய்க் காடுகளில் அவர் கள் சுற்றித் திரிந்தனர்.

முத்தரசன் அவளுக்குத் தன்னைப் பற்றியும் யாவும் எடுத்துரைத்தான். அவள் அவன் கதையைப் புத்தார் வத்துடன் கேட்டாள். 'ஆ, நீங்கள் வேற்று நிலத்தவரானாலும் நாகர் தாம். தமிழர் என்று நீங்கள் உங் கள் இனத்தைக் குறிக்கிறீர்கள். ஆனால் அது அயலினமாய் இருக்க முடியாது; ஏனென்றால் முன்னோர் வழியாக நான் பேசும்மொழியையே நீங்களும் கிட்டத்தட்டப் பேசுகிறீர் கள். நீங்களும் ஒரு தமிழ்நாகராய்த் தான் இருக்க வேண்டும். அது எப் படியாவது போகட்டும். உங்களைக் காண்பதில், உங்களுடன் பேசுவ தில் எனக்கு என்றுமில்லா மகிழ்ச்சி ஏற்படுகிறது. அடிக்கடி உங்களைச் சந்திக்க முடியும் என்றே நான் நம்புகிறேன்' என்று அவள் தன் கள்ளமில்லா வெள்ளையுள்ளத்தை அவனுக்குத் திறந்து காட்டினாள்.

அவள் தெய்வ அழகு இப்போது அவனுக்கு மனித அழகாக வளர்ந் தது. அதன் கவர்ச்சிகுறையவில்லை. மனித பாசத்துடன் அது புதுப்புது வடிவு மேற்கொண்டு அவன் உள் ளத்தில் இழையாடிற்று. அவள் கருத்திலும் தனக்கு இடம் ஏற்பட்ட தறிந்து அவன் உணர்ச்சி வசப் பட்டு அவள் கையைப்பற்றிப் பட கருகே இட்டுச் சென்றான்.

அவள் அவனைத் தடுக்கவில்லை. காட்டு மலர்போல வளர்ந்த அவ ளுக்கு நாணிக் கோணும் இயல்பு கிடையாது என்பதை அவன் உணர்ந்தான். ஆனால் இதுவும் அவள் கவர்ச்சியை மிகைப்படுத்திற் றேயன்றிக் குறைக்கவில்லை, ஏனெ னில் இயல்பான பெண்மை யுணர்வை இது மறைக்கவில்லை.

"மாந்தைப்பயல் இன்றிரவு வர மாட்டான் என்றே தோற்றுகிறது. வரட்டும்; அவனைக் கண்டிக்கிறேன். எங்காவதுபுலிக்குட்டிகளைவேட்டை யாடிக்கொண்டிருப்பான். அது கிடக் கட்டும். உங்களை நானே இன்று படகில் ஏற்றிச் செல்கிறேன்" என் றாள் அவள்.

அவன் உடல் புல்லரித்தது. உள் ளம் உயிர்த் துடிப்புத் துடித்தது.

பகலின் வெப்புக்கு நேர்மாறாக

இரவின் குளிர் அவர்களை நடுக்கிற்று. ஆனால் அவன் அரவணையில் அவள் குளிரை மறந்தாள். படகை அவள் ஓட்டும்படி அவன் விடவில்லை. அதைத் தானே ஒரு கையால் ஓட்டினான். ஒரு கை அவளை அணைத்திருந்தபடியால்ஒருகையால் படகின் இருபுறமும் மாறி மாறித் துழாவி அதைச் செலுத்தினான். இதையும் அவள் ஏன் என்றுகேட்கவில்லை. ஒரு கை தன்னை அணைத்துக்கொண்டதும் படகோட்டும் செயலுக்கு இயல்பானதே என்று எ ண் ணி ய வ ள் போ ல அவள் அமைந்து அவனுடன் ஒட்டியிருந்தாள்.

படகு ஆற்றைக்கடக்கவேயில்லை. அவர்கள் பயணம் கரையிலாக் காதல் கடலிலே செல்வதுபோலத் தோற்றிற்று. இரவு கழிந்ததும் புறப்பட்ட கரைக்கே அவன் படகைக் கொண்டு வந்து சேர்த்தான். இது கண்டுகூட அவள் வியப்படையவில்லை. ஏனெனில் அவளும் அவனைப்போலத் தன் தனி வாழ்வை மறந்தாள். புதிய இணை வாழ்வைத் தடை கூறுமல் ஏற்று மகிழ்ந்தாள்.

கானும் புயலும்போல அவர்கள் மலாய்க் காடுகளிலும் கடற்கரைகளிலும் சுற்றி உலவினர். தங்கள் உலாவுக்குப் படகு வேண்டி வந்தபோது, அவர்கள் மாந்தைப்பயலை வேறு வேலை ஏவி அனுப்பினர். ஆனால் படகு வேண்டாதபோது, படகுடன் அவனைப் போராடவிட்டு அவர்கள் வேறு திசையில் இன்ப உலா நடத்தினர். இங்ஙனம் கனவோ, நனவோ என்னும்படி முத்தரசன் புது வாழ்வு, ஒரு விழாப் போல நீடித்தது.

கனவுக் காதல்கூடக் கரையிலாக் காதலாய் நிகழ்வதில்லை. கனவு போன்ற அவர்கள் நனவுக் காதலும் இதற்கு விலக்காகச் செல்லவில்லை. அவர்களைச் சூழ அவர்களறியாத மாயப் புயல்கள் மூண்டன.

மாந்தைப்பயலை உருப்பளிங்கு



பயல் என்று கூறிப் பயலாகவே நடத்திஞலும், அவன் அவளுக்கு ஒரு சில நாட்களே இளையவன். தவிர, அவன் அவள் பாட்டனின் பேரனுதலால், அவள் அவனை உரிமையுடன் உடன்பிறந்தவன் போல நடத்திஞள். ஆயினும் பாட்டனுக்கு அவள் மகள் பிள்ளை. அவனே மகன் பிள்ளை. ஆகவே அவன் உள்ளூர அவளைத் தன் அத்தைமகளாகவே எண்ணிஞன். தன்னைவிட அறிவில், வீரத்தில், தன்னுண்மையில் அவள் எவ்வளவு மேம்பட்டவளானுலும், மற்ற நாகர்களைவிடத் தானே அவளுக்கு அணிமையுரிமையுடையவன் என்று அவன் கருதிஞன். உரிய பருவத்தில் அவளைத் தானே தன் துணைவியாக எப்படியும் பெற்றுவிட முடியும் என்றும் அவன் மனப்பால் குடித்திருந்தான்.

உருப்பளிங்கும் புது வரவினனை முத்தரசனும் கொண்ட புது நட்பின் போக்கை அவன் அறிய நெடுநாளாகவில்லை. அவனுக்கு வந்த முதற் கோபத்தில் படகில் சிறு துளையிட்டு அவர்கள் இருவரையும் காஞற்றில் அமிழச் செய்யலாமா என்று எண்ணிஞன். ஆனுல் முத்தரசனை ஒழிக்க அவன் விரும்பிஞனேயன்றி, உருப்பளிங்கை இழந்துவிட ஒருப்படவில்லை. ஆகவே சித்துக்களில் வல்ல நாகர்களாகிய மலையரசர்கள் உதவியை அவன் நாடிஞன்.

மாயமருந்துகளால் மலையரசர்கள் முத்தரசனையும் உருப்பளிங்கையும் ஒருவரை ஒருவர் வெறுக்கும்படி செய்ய அருப்பாடுபட்டனர். ஆனுல் எப்படியும் தம் சித்து இந்த அயலானிடம் பலிக்காதது கண்டு, அவர்கள் அவர்கள்மீது நேரடியாகவே கோபம் கொண்டனர். மாந்தைக்காகத் தொடங்கிய வேலையை, அதுமுதல் தாமே தமக்காகச் செய்ய முனைந்து அதற்கான சூழ்ச்சிகளில் ஈடுபட்டனர். அப்படியும் இணைபிரியாத அவ்விருவரையும் தனித்தனி சிறிதுநேரம் பிரிப்பதுகூட அவர்களுக்கு அருஞ்செயலாயிருந்தது. ஒரு நாகநங்கை இவ்வாறு நாகர்களைத் துச்சமெனக் கருதி ஓர் அயலானிடம் இப்படி அடிமைப்படுவது கண்டு அவர்கள் புழுக்கமுற்றனர். அவர்கள் தம் சூழ்ச்சிகளில் மாந்தையைஇன்னும் மும்முரமாக ஈடுபடுத்தினர்.

மலையரசர்களில் சிலர் முத்தரசனிடம் போலி நட்புக்கொண்டனர். அவன் வீரத்தையும் பெருந்தன்மையையும் அவர்கள் கூர்ந்து கவனித்தார்கள். அந்நற்குணங்களையே அவர்கள் தம் சூழ்ச்சிகளுக்குரிய மூலதனமாகக் கொண்டு பயன்படுத்த எண்ணினர். திடுமென நாகர்குப்பங்களில் ஒன்றில் புலி புகுந்துவிட்டதாகக் கூறி அவர்கள் முன்னிரவில் அவன் உதவியை நாடினர். இத்தகு தறுவாய்களில் அவன் உருப்பளிங்கை விட்டுப் பிரிந்துசெல்ல எண்ணியது இயல்பே. உண்மையில் வீரவாழ்வு அவளுக்குப் புதிதன்ருயினும், அவளையும் அவன் அவ்விடரில் உடன்கொண்டு செல்ல விரும்பாததால் அச்சமயம் உறங்கியிருந்த அவளை எழுப்பிச் செய்தி கூருமலே வெளியேறிஞன். குப்பத்திற்கு வழி காட்டுவதாக அவனை அழைத்துச் சென்ற நாகநங்கை, அவனை வேண்டுமென்றே காடுமேடாக நெடுந்தொலை சுற்றி அலைந்தாள். இறுதியில் முத்தரசன் கள்ளமற்ற உள்ளத்திலும் தன் முயற்சியில் ஐயுறவு ஏற்பட்டது. அவன் கடுஞ்சீற்றத்துடன் நங்கையைத் தடுத்து நிறுத்தி உருவிய கத்திகாட்டி அச்சுறுத்திய வண்ணம் உண்மை கூறும்படி உலுக்கிஞன். அந்நிலையில் அவள் மலையரசரின் சூழ்ச்சிகள் யாவற்றையும் வெளியிட்டாள்.

முத்தரசன் போனதே மாந்தை உறங்கிக் கொண்டிருந்த உருப்பளிங்கை அணுகிஞன். பெண்புலிபோன்ற அவளை, அவன் இயல்பாக எதிர்க்கத் துணியாதவன்.

ஆனால் மலையரசர்கள் அவனுக்குச் சில மயக்க மருந்துகளை அளித்திருந் தனர். அவற்றின் உதவியால் அவன் உறங்குகின்ற நங்கையை அரையுணர்வுடையவளாக்கினான். அதன்பின் அவளை அச்சுறுத்தி வலுக்கட்டாயமாகப் பிடித்து தன் வசப்படுத்த முயன்றான். அரையுணர்விலும் கடுஞ்சீற்றத்தால் துடித்த நங்கை அவன் உடலில் நகங்களால் கீறினாள். அவன் முகமெங்கும் கைமுட்டியால் குத்தினாள். ஆனால் மயக்க மருந்தின் செயலால் அவள்நரம்புகள்எளிதாக தளர்ச்சியடைந்துவிட்டன. அந்நிலையறிந்து அவன் அவளை அழுத்திப் பிடித்துத் துன்புறுத்தலானான். ‘முத்தா, முத்தா! என்னைக் கொலைகாரப்பாவி கொல்கிறானே! எங்கே போய்விட்டாய்!’ என்று அவள் கத்தினாள். ஆனால் அவள் வாயைப் பொத்தியவண்ணம் அக்கொடியோன் அவளை மிதித்துத் துவைக்கலானான்.

தன் ஏமாற்றமறிந்த முத்தரசனுக்கு இப்போது தன்மீதே அளவற்ற கோபம் ஏற்பட்டது. துடிதுடிக்கும் உள்ளத்துடன் அவன் உருப்பளிங்கின் குடிசைக்கு மீள விரைந்தான். ஆனால் சுற்றிச் சுற்றி இட்டுச்செல்லப்பட்ட காரணத்தால் வழியறிந்து மீளமுடியவில்லை. திசையறிந்து மட்டுமே ஒருவகையில் திரும்ப நேர்ந்தது. எனவே அவன் வருவதற்குள் நள்ளிரவு கடந்துவிட்டது. ஆனால் அப்படியும் உருப்பளிங்கு ‘முத்தா முத்தா’ என்று கதறியபின் குரலடைத்துப் போனதை அவன் தொலைவிலிருந்து கேட்டுவிட்டான். அவன் குடிசையண்டை வந்தபோது விளக்குகள் யாவும் அவிக்கப்பட்டிருந்தன. கருக்கிருட்டில் கதவறிந்து தட்டியபோது உள்ளே அரவம் எதுவும் கேட்கவில்லை, அவன் ஆத்திரத்தில் கதவைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டு உள்ளே நுழைந்தான். உருப்பளிங்கின் சோர்ந்த நிலையும், அவளை உருட்டிப்புரட்டி மாந்தை துன்புறுத்துவதும் அவன் கண்களில் பட்டன. அதே சமயம் அவன் கதவு தட்டியதையும் கதவை உடைத்ததையும்கூட மாந்தை செவிக்கொண்டதாகத் தெரியவில்லை. கோழையாகிய அவன் உருப்பளிங்கு தனியேதுணையில்லா நிலையில் இருப்பதாகக் கருதித் தன் காரியத்திலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தான். வெஞ்சீற்றத்தின் வெறிகொண்டு முத்தரசன் அவனை உதைத்துச் சுவர்மீது கொண்டு மோதிய பின்பே, அவன் தன் கை தாழ்ந்ததை உணர்ந்து ஓட்டமும் நடையுமாக வெளியேறினான்.

உருப்பளிங்கின் உடலெல்லாம் அடி உதைகளால் வீங்கியும், காயங்கள் பலவற்றால் குருதி சோர்ந்தும் கிடந்தது. அவளுக்கு முழு உணர்வு வருவிக்க உடலின் காயங்களை ஆற்றி உள்ளத்தின் வேதனையை மாற்றி ஆறுதலளிக்க முத்தரசனுக்கு இரண்டு முழு நாள் பிடித்தது. தன்னை உறக்கத்தில் கூருதுவிட்டுச் சென்றதற்காக முதலில் அவள் முத்தரசன்மீதே கடுஞ் சீற்றங் கொண்டாள். பின் சூழ்ச்சியின் முழு அளவும் படிப்படியாக அறிந்ததும், அவளுக்கு முத்தரசன் உயிர் பற்றியே அச்சம் ஏற்பட்டது. இப்படி தன்னை ஏய்க்க எண்ணியவர்கள் ஒன்றுபட்டு அவனைத் தாக்க முற்பட்டுவிடக்கூடுமேஎன்றுஅவள் கலங்கினாள். அதைக் கேட்டு முத்தரசன் தன்னை மறந்து சிரித்தான்.

‘உருப்பளிங்கு! அந்தக் கோழைகள் மயக்க மருந்தின் உதவியில்லாவிட்டால் உன்னை எதிர்த்து நிற்க முடியாதே! அவர்களா என்னை எதிர்க்க முற்படுவார்கள்? எதிர்த்தால் உன்னைக் காக்க எனக்கு ஒரு கையும் அவர்களைத் தாக்கி அழிக்கமற்றொருகையும் இல்லையா? ஏன் வீண் கலவரப்படுகிறாய்?’ என்று அவன் தன் வீர ஆண்மையுரைகளால் அவள் கலக்கம்அகற்ற முயன்றான்.

அச்சமயம் யாரோ 'திடுதிடு' வென்று குடிசையின் அருகே வரும் சாயல் கேட்டது. அது முதலில் அவனைத் தவருன வழியில் இட்டுச் சென்ற நாக நங்கையே. அவள் கதவு உடைக்கப்பட்டதறியாது அதன்மீதே தடுக்கி விழுந்தாள். முத்தரசன் அவளை எடுத்துவிழுந்த அதிர்ச்சி நீக்க முயன்ருன். ஆனுல் அவள் அதற்குக் காத்திருக்கவில்லை. அவள் உடம்பெல்லாம் ஏற்கனவே கத்திக் குத்துக்களால் காயமடைந்திருந்தது. அவள் உடல் படபடத்தது. அவசரமாக அவள் பேசினுள்.

'ஐயனே! எதுவும் பேச நேரமில்லை. அவர்கள் பொல்லாத அழிவுக் கருவிகளுடன் உங்கள்மீது படையெடுத்து வருகிருர்கள். உங்களிடம் உண்மை சொன்னதற்காக எனக்குக் கிடைத்த பரிசுகள்தான் இந்தக் காயங்கள். ஆனுல்அவற்றை நான் பொருட்படுத்தவில்லை. இறந்தாலும் உங்களைக் காக்கத் துணிந்துவிட்டேன். ஓடுங்கள்; தப்பி ஓடிப் பிழையுங்கள். அவர்கள் கைப்பட்டால் உங்கள் அழிவு உறுதி, உறுதி!' என்று படபடத்தாள்.

அவள் குரலில் ஏதோ ஒன்று கலங்காத முத்தரசன் உள்ளத்திலும் கலக்கமூட்டிற்று. எதிர்த்தவரைத் தாக்க அவன் அஞ்சவில்லை. ஆனுல் இங்கே இன்னதென்று அறியமுடியாதசதிகள் உருவாகியுள்ளன. அவற்றிடையே உருப்பளிங்குடன் ஒரு கணமும் தங்கியிருக்க அவன் துணியவில்லை. ஆனுல் அத்தருவாயிலும் நாக நங்கையை அப்பொல்லாத பேய்களுக்கு இரையாக விட்டுவிட அவன் விரும்பவில்லை. இன்னும் முழுதும் நலமடையாத உருப்பளிங்கை ஒரு தோளிலும் அவளை மற்றொரு தோளிலும் தூக்கியபடியே வெளியேற முயன்ருன்.



வெளியேறுவதற்குள் அப்பேய்க் கூட்டம் குடிசைக்கு ஒரு கூப்பிடு தொலைவில் பதுங்கிப் பதுங்கி வருவதை அவன் கண்டான். நாக நங்கை அச்சமயம் தன் கையிலிருந்த கத்தியால் தன்னையே குத்திக்கொண்டு கீழே விழுந்தாள்.

'ஐயனே! என்னைக் காக்க முற்பட்டால், உங்கள் உயிரை நீங்கள் காத்துக்கொள்ளமாட்டீர்கள். இதோ, என் உயிர் ஒரு கணத்தில் போய்விடும். என்னைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஓடுங்கள். நேரமில்லை. சிந்திக்க வேண்டாம். விரையுங்கள், விரையுங்கள்' என்று கூறி அவள் கண்ணை மூடினுள்.

தியாகத்தின் அன்புருவான அந்த நங்கையின் அடியை அவன் தொட்டு முத்தமிட்டான். அவள் தலை முடியின் ஒரு இழையை அந்த நேரத்திலும் அவள் தியாக நினைவூட்டாகக் கத்தரித்தெடுத்துக்கொண்டு உருப்பளிங்கைச் சுமந்தபடி வெளியேறினுன். மலையரசர் வந்த திசையின் எதிர் திசை வழி இருட்டில்பதுங்கிப் பதுங்கிச் சென்ருன்.

வீட்டினுள் முத்தரசனையும் உருப்பளிங்கையும் காணுததே மலையரசர் பேய்க்குரலிட்டுக் கூவியவண்ணம் அவர்களைத் தேடமுற்பட்டனர். நாக நங்கையின் குத்துண்ட உடலைக் கண்டபோது அக்காட்சியை அவர்கள் தவருகப் புரிந்துகொண்டனர். காதலர்களைத் தடுத்துநிறுத்த அவள் முயன்றதாகவும், முத்தரசன்



அவளைக் கொன்றுவிட்டு ஓடியதாக வுமே எண்ணினர். அவர்கள் சீற்றம் இப்போது பன்மடங்காயிற்று. முத்தரசனும் உருப்பளிங்கும் சென்ற திசையைக் காலடிகளால் அறிந்து தீப்பந்தத்துடனும், ஈட்டி, குந்தம், வாள் ஆகிய பலவகைக் கருவிகளுடனும் அவர்களைப் பின்பற்றலாயினர்.

உருப்பளிங்கு சூழ்நிலையை ஒருவாறு ஊகித்துணர்ந்து மனம் கொதித்தாள். ஆனால் முத்தரனுக்கு ஒரு சுமையாக மட்டுமேதான் இருப்பதறிந்து அவள் வருந்தினாள். நாக நங்கையைப்போலத் தானும் தன் சுமை நீக்கி அவனையேனும் தப்புவிக்க உதவலாமா என்று அவள் ஒரு கணம் நினைத்தாள். ஆனால் அடுத்தகணம் அவள் அறிவு செயலாற்றிற்று. தானில்லாமல் அவன் வாழவே உருப்படமாட்டான் என்பது அவளுக்குத் தெரியும். அத்துடன் மலையரசர் மாயங்களிலிருந்து தப்ப அவ்வப்போது தன் உதவியும் இன்றியமையாது தேவைப்படும் என்று அவள் கண்டாள். இந்நிலையில் வேண்டா வெறுப்புடன் அவள் தன் செயலற்ற உடலை அவன் தோள்மீது துவளவிட்டு, பின்னே நடப்பவற்றில்மட்டும் கருத்துச் செலுத்தினாள்.

காடு மேடுகளில் நள்ளிரவிலும் பாம்புபோல பதுங்கியும், புலிகள் போல் பாய்ந்தும் சென்று பழக்கமுடையவர்கள் நாகர்கள். ஆனால் அவர்கள் எதிர்பார்த்தபடி முத்தரசன் இதில் அவர்களுக்கு இளைத்தவனாயில்லை. அவர்கள் பலர். பல

திசைகளில் பிரிந்து அவனைக் கைப் பற்ற முயன்றனர். ஆனால் அவர்கள் எவ்வளவு விரைந்தும் அவனை அவர்கள் கைப்பற்ற முடியவில்லை. ஒரு சில சமயங்களில் அவன் பாதைகளின் போக்கைக் கவனியாமல் அவர்கள் இடுக்குப்பிடிக்கு உள்ளாடும் நிலைமை அடைந்ததுண்டு. ஆனால் உடல் முற்றிலும் துவண்டாலும் உளம் விழிப்பாய் இருந்த உருப்பளிங்கு, தக்க தக்க சமயங்களில் அவர்கள் போக்கறிந்து முத்தரசனுக்கு எச்சரிக்கை தந்தாள்.

கல்லும் கட்டியும் வேலும் குந்தமும் அடிக்கடி அவர்கள்மீது இலக்கு வைத்து எறியப்பட்டன. இங்கும்பின்னேக்கி விழித்த கண்ணுடன் கிடந்த உருப்பளிங்கின் முன் எச்சரிக்கை பல தடவை இடர் காத்தது. சீறிவரும் எறி படைகள் வந்தெட்டு முன்னர் அவன் தோளை அழுத்தி எச்சரிக்கை தந்தாள். அவன் சட்டெனக் குனிந்து விலகி அவற்றிலிருந்து தன்னையும் தன் ஆருயிரணங்கையும் காத்துக்கொண்டான்.

நாகர்கள் எதிரிகள் செல்லும் வழியை இருட்டில்கூட மோப்பத்தாலும் நில நடுக்க நுட்ப அதிர்வுகளாலும் காணவல்லவர்கள். இதை அறிந்த உருப்பளிங்கு எப்படியாவது ஆறு, ஏரி, கடல் முதலிய நீர் நிலைகள் வழியே தப்பியோட வேண்டுமென்று திட்டமிட்டாள். இத்துடன் முத்தரசனைத் தான் முதன் முதல் சந்தித்த காஞற்றுத்துறை அருகில் தாம்வந்துவிட்டதைஅவள் உணர்ந்தாள். மாந்தையின் படகு அச்சமயம் அங்கேயே கட்டப்பட்டிருக்குமென்பதும் அவளுக்குத் தெரியும். உடனடியாக வேறு படகு கிட்டும்வரை ஆற்றில் அவர்கள் தம்மைப் பின்பற்றமுடியாது என்றும் அவள் கண்டாள். இவற்றை அவள் ஒரு நொடியில் முத்தரசன்காதுடன் காதாகக் கூறினாள். அத்துடன் அவள் உடலும் இச்சமயம் சிறிது தெம்படைந்ததால், அவனுக்கு முற்றிலும் சுமையாய்த் தோளில் துவளாமல் மெல்ல இறங்கி அவனைப் பிடித்துக்கொண்டு நடக்கலானாள்.

காஞற்றுத்துறை அணுகியதும் அவள் தானே தன் கையிலிருந்த கத்தியால் படகின் கயிற்றை அறுத்தாள். இருவரும் படகை நீரில் தள்ளி அதில் ஏறுவதற்கும் மலையரசன் கரையை அணுகுவதற்கும் சரியாய் இருந்தது. ஆனால் இப்போது நம்பியுடன் நங்கையும் கை கொடுத்துத் தண்டு வலித்ததால், மலையரசர்கள் நீர்வாய்களுக்குமுன் அவர்கள் கிட்டத்தட்ட ஆற்றின் நடு நீரோட்டத்திற்குச் சென்றுவிட்டனர். அதன் பின் அவர்கள் வேலை எளிதாயிற்று. ஏனெனில் நீரோட்டமே அவர்களை விரைந்து கடலை நோக்கிட்டுச் சென்றது. எதிரிகளுக்கு உடனடியாகப் படகு கிட்டாததால் கரைவழி அவர்களைப் பின்பற்றி ஓடவேண்டியதாயிற்று. அத்துடன் ஆறு மிகச் சலமானதாயிருந்தது. எனவே, கரையிலிருந்து எறிந்த கல்லும் கவணும் ஈட்டியும் அவர்களை அணுகாமலோ குறி தவறியோ சென்றன. ஆயினும் அவர்கள் எதிர்க்கரையில் கரையேறி விடாமல் தடுக்க, ஒற்றைப்பாலம் ஒன்று குறுக்கிடும் இடந்தேடி, மலையரசரில் ஒரு பாதிப் பேர் மறுகரை சென்று அவர்களைத் தொடர்ந்தனர் பாலத்திலும் படகை மறிக்க அவர்கள் முயன்றனர். ஆனால் ஒற்றைப் பாலமாதலால் ஒன்றிரண்டு பேருக்குமேல் படகைத் தடைசெய்ய முன்வர முடியவில்லை. முத்தரசன் படகின் கைத் தண்டு அவர்களை நொடியில் கூற்றுவனுக்கே பலியிட்டு ஓடு நீரில் தள்ளிற்று.

கடற்கரை அணுகிவிட்டால் அவர்கள் எதிர் திசையிலுள்ள தீவக் கூட்டங்களில் சென்று ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவி நெடுந் தொலை சென்றுவிடமுடியும். அயல் நாட்டுக் கப்பல்களில் இடம்பெற்றுவிட்டால் நாகர்களுக்கே நிலையாக விடை கொடுத்துவிடவும் முடியும்.

ஆனல் கடலணுகுமுன் அவர்கள் ஆற்றின் கழிமுகத்தைக் கடக்க வேண்டியிருந்தது. அங்கே நீர் ஆழ மானதாயினும் ஒட்டமற்றது. இரவு கழிந்துகொண்டிருந்த நிலையில் காலேயின் வேலி ஏற்றத்தால் கடல் நீர்தான் எதிர்த்து மேலேறுமாத லால், அவர் ஏரிபோன்ற அக்கழி முகத்தில் விரைவுபடமுடியாது. இவற்றை முத்தரசனுக்கு அவள் எடுத்துரைத்தபோது அவன் மீண் டும் சிரித்தான்.

'இடையூற்றின் செம்பாதி கழிந் தாய்விட்டது.இப்போதுஒருமைக்கு இரு கையாகிவிட்டோம். கழிமுகத் தில் வேகம் குறைந்தாலென்ன, சற்று நீட்டித்தேனும் கடல் சென்று விடலாம். இனித் திடமனதுடனிரு' என்ருன் அவன்.

அவன் ஆறுதலுரை அவளை ஏனே ஆற்றவில்லை. கழிமுகத்தை அணுகியதே அவள் முகத்தில் கவலையின் கோடுகள் மிகுந்தன. அதைக்கண்டு அவன் புன்முறு வலித்தான். 'உருப்பளிங்கு ஆறு நாகர்களின் – அறுபது ஆடவரின் வீரமுடையவள்தான்; ஆயினும் பெண்தானே!' என்று அவன் தனக்குள் கூறிக்கொண்டான். ஆர அமர அவன் கைகள் தண்டுகளை வலித்துக்கொண்டிருந்தன.

அவன் உறுதியைவிட அவள் அச்சமே அன்று மெய்ந்நிலை அறி வுடையதாய் இருந்தது. கடலை அணுகுமுன் மலையரசர் தம் முழுக் கையிருப்பையும் கடைசித் துருப்பு வரை காட்டாமலிருக்கமாட்டார்கள் என்பதை அவள் அறிந்தாள். அவற் றின்முன் முத்தரசன் வீரமோ தன் வீரமோ ஒரு சிறிதும் போதமாட்டா என்பதிலும் அவளுக்கு ஐயமில்லை. ஓயா விழிப்பும் சமயத்துக்கேற்ற விரையுணர்வும் விரைசெயலுமே எதிர்பாராத அவர்கள் மாயங்களி லிருந்து தம்மைக் காக்கமுடியும் என்று அவள் கருதினள். ஆகவே அவள் அச்சம் முத்தரசன் எண் ணியபடி பெண்மையின் அச்சமோ, காதலின் கலக்கமோ மட்டுமல்ல; அது ஓயா விழிப்பாகவும் இடை விடாச் சிந்தனையாகவும் செயலாற் றிற்று.

அவள் விழிப்புப் பயன்தந்தது. அவன் எதையும் ஐயுறுமுன் வர விருந்த இடரின் இயல்பை அவளே முன்னறிந்து சிந்தித்துத் திட்ட மிட்டாள்.

கழிமுகத்தில் ஒரு மூலையில் கடலின் திசையிலேயே ஒரு சிறிய ஒளி தெரிந்தது. அது வரவரப் பெரிதாகிக் கொண்டுவந்தது.

உருப்பளிங்கு கவலை தோய்ந்த உள்ளத்துடன் அதைச் சுட்டிக் காட்டினள்.

'அன்பரே! அதோ அந்த ஒளி என்ன தெரியுமா? நம்மை விழுங்க வரும் தீ, அது. அவர்கள் ஏவிவிட் டிருக்கிருர்கள் அதை. அதை விட்டுத் தப்ப நாம் திட்டமிட்டாக வேண்டும்;விரைந்து திட்டமிட்டாக வேண்டும்' என்ருள் அவள்.

அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

'நீர் நடுவில் தீ எப்படி நம்மை விழுங்கும்! விளங்கக் கூறு.' என்ருன், அவன்.

'முழுதும் கூற நேரமில்லை. கடற் புறமிருந்து வருகிற நீரோட்டத் துக்கே தீ வைத்துவிட்டார்கள் அவர்கள். இன்னும் சிறிதுநேரத்தில் நீர்ப்பரப்பெல்லாம் தீப்பற்றிக் கொள்ளும்.படகும் நாமும் அதில்...'

அவன் செவிகளில் அவள் சொற் கள் பொருளற்ற சொற்களாகவே இருந்தன. ஆனல் அதன் பொருள் காண, ஆராய அவர்களுக்கு நேர மில்லை. அவள் பேசும்பொழுதே தொலைவில் கண்ட ஒளி நாற்புற மும் சூழ்ந்தது. ஆம்! என்ன வியப்பு? அவள் கூறியதுபோல நீர்ப்பரப்பு முழுவதுமே, கடலே தீப்பற்றிக் கொண்டதாகத் தோற் றிற்று. கரையறியா அக்கடற் பரப்பு கரை தெரியா அனற்பரப்பாய் ஒளி விட்டுப் புகையலாயிற்று.

அவன்ஒன்றும் தோன்ருது விழித் தான்.

தன் வாழ்விலே முதல் தடவையாக அவன் செயலிழந்து, அறிவிழந்து கல்லாய்ச் சமைந்து நின்றான்.

அவளும் அசையவில்லை. ஆனால் அவள் முகம் சிந்தனையின் ஒரு பாறைபோல் நிமிர்ந்திருந்தது.

தன் கண்களை அவன் நம்பமுடியவில்லை. அது நனவா, கனவுதானா என்று அவன் மலைத்தான். நீர்பற்றி எரிந்தது. நீரின் அலைகள் நெருப்பலைகளாயின. ஆறு நெருப்பாறாயிற்று. நீரில் மிதந்து வரும் முகில் படலம்போல, அந்த நெருப்புப்படலம் படகையே அணுகி வந்தது. இது என்ன மாயமோ, முன்பின் கண்டு கேட்டறியாத இந்நிகழ்ச்சியை என்னவென்று புரிந்து கொள்ளமுடியவில்லையே, என்று அவன் திகைத்தான்.

ஒரு கணம் போதும், படகு தீக்கு இரையாகிவிடுவது உறுதி என்ற நிலை ஏற்பட்டது. கொந்தளிக்கும் நெருப்பின் கொழுந்துகள் நாற்புறமும் பொறி பறக்க, நெறு நெறு என அரவமிட்டவண்ணம் படகை நோக்கி விரைந்தன. ஒரு நீண்ட அனற்பிழம்பின் நாக்கு படகின் முன்புறத்தில் தாவி முத்தமிட்டது. அதன் வெப்பு முத்தரசன் மீதும் உருப்பளிங்கு மீதும் கொல்லுலைக் கூடத்தின் தணல்போல் வீசிற்று.

அவள் அசையவில்லை. அமைதியே உருவாக அவள் நின்றாள். ஆனால் அவள் உதடுகள் அசைந்தன. வாய் பேசிற்று.

அவள் திடுமென படகிலுள்ள கயிற்றை எடுத்தாள். கயிற்றை என்ன செய்தாள் என்று அவன் அறியவில்லை. ஒருகணத்தில் ஒரு பெருங் காரியம் முடிந்துவிட்டு அடுத்த பெருங் காரியத்திற்கு கச்சைகட்டி நிற்பவள்போல் அவள் நின்றாள்.

'அன்பரே, நம் இருவர் உயிரும் இனி என் கையில்தான் இருக்கிறது. நான் கூறியபடிமட்டும் செய்யுங்கள். உங்கள் துடுப்பைமட்டும் கையில் எடுத்துக்கொள்ளுங்கள். அதுதான் இப்போது நம் உயிர்க் கருவி !' என்றாள்.

ஒரு துடுப்பை அவன் எடுத்தான். மற்றதை அவள் எடுத்துக்கொண்டாள். அடுத்த கணம் நடந்தது அவன் எதிர்பாராதது. அவள் அவனைப் பிடித்துத் தலைகுப்புற நீரில் தள்ளினாள். அவளும் அவன் அருகிலேயே அதுபோலக் குதித்துவிட்டாள். நீரிலும் அவனருகே வந்து அவன் கைப்பிடித்தவண்ணம் நின்றாள். அவன் காதுகளில்அவள் குரல் கேட்டது.

'தீ நீர்ப் பரப்பில்தான் தாவி வருகிறது. வருமுன் நீரில் மூழ்கிவிடுங்கள். என் கையையும் விடாது பிடித்துக்கொண்டு கடல் நோக்கி நீருக்குள்ளாகவே விரைந்து செல்



லுங்கள். மூச்சுமுட்டும் சமயம்மட்டும் என் கையை அழுத்திக் கொண்டு பரப்பில் தலை தூக்கலாம். ஆனால் தூக்குமுன் இருவர் துடுப்புகளும் நீரை நாற்புறமும் துழாவ வேண்டும். துடுப்புகளின் வீச்சின் முன், நெருப்பு பாசிபோல் சிறிது விலகிக் கொடுக்கும்' என்றாள்.

காட்சியின் கறை மயக்கமும் வியப்பின் அதிர்ச்சியும் அவனை விட்டு இன்னும் நீங்கவில்லை. ஆனால் அவ்வுயிர் நெருக்கடியில் காதலியின் அன்புக் கட்டளைக்கு மேல் அவனுக்கு எதுவும் தேவைப் படவில்லை. அவன் அவள் கையைப் பற்றிக்கொண்டு நீரில் மூழ்கினான். மூழ்கும்போதே உச்சியில் நெருப்பின் சூடு தட்டுப்படுவதையும் அதன் கொழுந்துகள் தலைமீதே அலறுவதையும் அவர்கள் கேட்டனர்.

இன்பத்தில் மிதந்த இரு காதல் உள்ளங்களும் அந்த உயிர்த்துன்ப வாதை நேரத்திலும் கைபிடித்துக் கொந்தளிக்கும் அனற்கூடாரத்தினுள்ளே குளிர்ந்த கடல்நீரின் ஓட்டத்தை எதிர்த்துக் கடல்நோக்கி விரைந்தன. இருவரில் ஒருவருக்கு மூச்சுத் திணறினாலும், இரு உடல்களும் ஒன்றுபட்டு மேலெழுந்தன. இரு கைகள் இரு தண்டுகளை வான்போல நீரின் பரப்பு நோக்கி நாலாபக்கமும் சுழற்றின. அச் சுழற்சியே ஒருகணம் அவர்களை நெருப்பாற்றின் அழிவிலிருந்து காத்தது. ஏனெனில் அந்த ஒரு கணப்பொழுதிலேதான் தண்டுகளின் வீச்சால் அனற்பிளம்புகள் சற்று விலகின. நீர்ப்பரப்பு அந்நிலையிலும் கொதிக்கும் வெந்நீராகவே இருந்தது. சிறிது மூச்சு வாங்கிய பின், இருவரும் ஒருவராக மீண்டும் மூழ்கினர். இருவரும் ஒருவராகப் பின்னும் கடல்நோக்கி அம்புகள் போல் நீரடியில் பாய்ந்துசென்றனர்.

கடல் வாயருகே இருபுறமும் நிலம் சற்று அருகருகாக இருந்தது. அவ்வாய்ப்பறிந்து மலையரசர் இருபுறமும் ஈட்டி குந்தமேந்தி அவர்களை வேட்டையாட வந்துநின்றனர்.

கழிமுகத்துக்கு நெருப்பிட்ட பின்னும் அவர்கள் தப்பியோடிவிட முடியும் என்று மலையரசர் முதலில் கனவு கண்டிருக்கவில்லை. தீப் பரவியதே அவர்கள் அழிந்ததாகக் கருதி ஆட்டமிடத் தொடங்கியிருந்தனர். ஆனால் மாந்தை அவ்வாறிருக்க முடியவில்லை. முத்தரசனை அழிக்கும் முயற்சியில் உருப்பளிங்கையும் இழக்க நேர்ந்ததே என்று அவன் கவலைப்பட்டான். தீ அணைந்ததே உருப்பளிங்கின் உடலையேனும் தேடிப்பிடிக்க எண்ணி கடல் வாயருகே வந்து நின்றிருந்தான்.



படகு அவன் எதிர்பார்த்தது போல் தீயில் எரிவதற்கு மாருக, தலைகீழாகக் கவிந்து மிதந்த நிலையில் கடல்நோக்கி விரைவது கண்டு அவன் வியப்படைந்தான். படகின் அடிப்புறம், மீன் எலும்புகளால் வலுச்செய்யப்பட்ட ஒன்ருதலால் அது கவிந்த நிலையில் தீப்பற்ருது என்பதை அவன் உணர்ந்தான். ஆனுல் அதை அவ்வாறு கவித்தவர் யார், எப்படி அது நீரோட்டத்தை எதிர்த்துக் கடலில் விரைகிறது என்பதை அறியாமல் அவன் திகைத்தான். அவன் திகைப்பே காதலர் தப்பியோடிய வகையைக் காட்டிக்கொடுத்தது. ஏனென்ருல்படகருகே காதலர்நீர்ப் பரப்பில் தலைதூக்குவதை அவன் கண்டுவிட்டான். கண்டு அவன் கூக்குரலிட்ட பின்னரே ஆட்டமாடிய மலையரசர் கடல்வாயின் கரைகளுக்கு ஓடிவந்தனர்.

படகு கவிழ்வதற்கும் காதலரைப் பின்பற்றியதற்கும் உருப்பளிங்கின் முன் கருதலே காரணம். அவள் படகின் பின்புறத்துடன் தன் காலைக் கயிற்ருல் பிணைத்திருந்தாள். அவள் நீரில் குதித்த வேகத்திலே படகு திடுமெனக் கவிழ்ந்தது. ஆனுல் நீர் உள்ளே ஏருமல் அது கவிழ்ந்ததால் அது தலைகுப்புற மிதந்து வந்தது. நீரடியிலே காதலர் செல்லும் திசையிலே படகு பின் சென்றதன் மருமம் இதுவே. இதையும் அச்சமயம் முத்தரசன் அறியவில்லை.

கடல்வாயின் இரு திசையிலும் மலையரசர் வேல்களுடனும் குந்தங்களுடனும் வில்லம்புகளுடனும் அவர்களை எதிர்பார்த்து நின்றதை உருப்பளிங்கு கரைவாயை அணுகு முன்பே கண்டுகொண்டாள். ஆகவே எப்பாடுபட்டும் கடல்வாய் கடக்கும்வரை நீர்ப்பரப்பில் தலை தூக்கக் கூடாதென்றும் அவள் முத்தரசனை எச்சரித்தாள். இருவரும் தொலைவிலேயே தலையுயர்த்தி நன்ருக மூச்சுவாங்கி இளைப்பாறிய பின், நீரில் மூழ்கி வேகமாகக் கடல்வாய் கடந்து கடல் செல்ல முனைந்தனர். அவர்கள் சென்ற திசையை நீர்ப்பரப்பில் அவர்கள் பின்னே மிதந்த கவிழ்ந்த படகு காட்டிற்று.

காதலினும் வலிமைமிக்கவியத்தகு ஆற்றல் எதுவும் இல்லை. காதலர் நீரடியில் மூச்சடக்கிக்கொண்டு ஒருவருக்காக மற்றவர் நெடுந்தொலை சென்ற செயல் இதைக் கரையில் காத்து நின்றவருக்கு விளக்கிக் காட்டிற்று. கால்மணி நேரத்துக்குள் இருவரும் கடல்வாய் கடந்து கடலில் நெடுந்தொலை சென்ற பின்பே தலைதூக்கினர். அவர்கள் தலைதூக்கியதே அம்பும்வேலும் மழையாகப் பொழியக் காத்திருந்த மலையரசர் ஏமாற்றமடைந்தனர். காதலர் தம் வெற்றி கண்டு பெருமூச்சுவிட்டனர். ஆயினும் மலையரசர் சீற்றம் படகின்மேல் செல்லாமல் இல்லை. அவர்கள் கற்களையும் ஈட்டிகளையும் அதன்மீது பாய்ச்சினர். அது படகின் திண்ணிய அடிப்புறத்தைத் துளைக்க முடியவில்லையாயினும் பெரிதும் வடுபடுத்திற்று.

அகல கடற்பரப்பில் சென்ற பின்பே இனி என்னசெய்வதென்ற புதுக்கவலை முத்தரசனுக்கு ஏற்பட்டது. ஆனுல் உருப்பளிங்கு படகைச் சுட்டிக் காட்டியதே அவன் வியப்படைந்தான். படகை நீர் கொள்ளாதபடி பாதுகாப்பாகநிமிர்த்தியபின் இருவரும் அதில் ஏறியமர்ந்தனர். கடலலைகளில் அதைப் பக்குவமாகச் செலுத்தி எதிர் தீவுக்குச் செல்ல முனைந்தனர்.

போகும் வழியில்தான் படகு எரியாமல் பாதுகாக்கப்பட்ட வகைபற்றியும், படகு அவர்களைப் பின்பற்றிய வகைபற்றியும் முத்தரசன் அறிந்தான். உருப்பளிங்கின் அழகைவிட, அவள் வீரத்தைவிட, அவள் முன்கருதல் அறிவும் அதை இயக்கிய அவள் காதலும் அவன் உள்ளம் உருக்கின. அவன் கடலலைகளில் தாம் இன்னும் ஊறுபட்ட

படகில் மிதப்பதும் பாராமல் அவளை ஆர்வமுற அணைத்து மகிழ்ந்தான்.

'இடர் முற்றிலும் விலகிவிடவில்லை. அதற்குள் இவ்வளவு களிப்படைந்துவிட்டீர்களே!' என்று குறும்புடன் கேட்டாள் உருப்பளிங்கு.

'இனி இடர்பற்றி எனக்குக் கவலையில்லை. இக்கணம் இறந்தாலும் இருவரும் ஒருங்கே மகிழ்வுடன் இறக்கத் தடையில்லை. அத்துடன் இனிப் படகு உடைந்தால் கூடக் கவலையில்லை. படகைவிட உன் அறிவார்ந்த காதல் எனக்கு நல்ல துணையாகும் அல்லவா?' என்று நகைத்தான் அவன்.

தீவுக்குத் தீவு அந்த ஊறுபட்ட படகிலேயே அவர்கள் மாதக்கணக்காகச் சுற்றினர். படகு அடிக்கடி சேதமடைந்தாலும், தீவிலுள்ள செத்தை சிம்புகளால் அவர்கள் தம்மாலானமட்டும் அதைச் செப்பம் செய்து பயணம் தொடர்ந்தனர். இறுதியில் தக்கோலத்திலிருந்து தமிழகம் செல்லும் ஒரு பெருங் கலம் அவர்களை ஏற்றுக்கொண்டது. தென்கடல் நங்கையும் தமிழ்ப் பல்லவ வீரனும் நாகர் வாழ்வுக்கு நிலையாக விடை கொடுத்துவிட்டு நாகப்பட்டினத்தருகே புது வாழ்வு தொடங்கினர்.

அவர்கள் வீரக் காதல் கதையின் முழு விளக்கத்தை அவள் வாயிலிருந்தே முத்தரசன் ஓரளவு அறிந்தான். கழிமுகம் முழுவதும் நெருப்புப் பற்றிய விந்தையை அவன் என்றும் முற்றிலும் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் உருப்பளிங்கு கூறிய விளக்கம் அறிவுக்கு அரைகுறை விளக்கம் அளித்தது. மலாய்க் காடுகளின் நடுவே நாகர்கள் நீருக்கு மாருக எண்ணெய் ஊறும் கிணறுகளைக் கண்டுபிடித்திருந்தனர். அதனை வடித்துப் பலவகை மாய எண்ணெய் வகைகளை அவர்கள் உருவாக்கினர். இதுபோலவே கல்லிலும் மண்ணிலும் பல நுண்ணுற்றலுடைய பொருள்களைக் கண்டிருந்தனர். இவற்றுள் சிலவற்றின் ஆற்றலால்தான் அவர்கள் நீரில் நெருப்பிடவும் கல்லைக்குடையவும் முடிந்தது. கழிமுகத்தில் கடல் நீரோட்டத்தின்மீது எண்ணெய் ஊற்றி அதற்கு நெருப்பிட்டதாலேயே அது நீர்ப் பரப்பெங்கும் நீரோட்டத்துடன் மிதந்து பறந்து சென்று எரிந்ததென்று உருப்பளிங்கு கட்டுரைத்தாள்.

முத்தரசனைவிட அவன் பிள்ளைகள் ஆர்வத்துடன் உருப்பளிங்கு கூறிய கதை விளக்கங்களைக் கேட்டனர். ஆனால் அவநம்பிக்கையும் ஐயமும் அவர்கள் முகத்தில் தென்பட்டன. அயலாரிடமோ அவநம்பிக்கை பெருகிற்று. ஆனால் அதே சமயம் கதையில் கேட்ட அரு நிகழ்வுடன் கேளாத அருநிகழ்வுகளும் சேர்த்துப் பலர் அவற்றை முழுதும் புத்தம் புதுக்கட்டுக் கதைகளாக்கிப் புராணமாக்கிவிட்டனர். நாகர்மலையரசர்களின் பண்டைய அறிவுச் செயல்களே, இடைக்காலப் பயனீடுகளே பிற்காலப் புராணங்களில் இயற்கை மீறிய நிகழ்வுகளாகக் காட்சியளித்தன என்னலாம். ஆனால் நாகையடுத்த பகுதிகளில் கதைக்குச் சான்ருக உருப்பளிங்கின் சிறுபதிப்புகளும் முத்தரசனின் சிறுபதிப்புக்களும் நெடுங்காலம் புகழ் வாழ்வுடன் விளங்கினர்.

★

# எனக்கு நடந்ததும

எதிர்பார்ப்பதும், எதிர்பாராததுமான இரண்டும் இல்லையென்றால், வாழ்க்கை இரு சக்கரங்களில்லாத 'எஸ்கிமோ' வண்டியின் கதையாகத் தான் மாறியிருக்கும், என்று அடிக்கடி கூறிக்கொள்வான் நமது அழகப்பன்.

இன்றைய நிலை அவனை அப்படிக் கூற வைத்தது.

ஆனால் அன்றைய நிலை...

எளிமையான குடும்பத்தில் பிறந்து வாழ்வின் இன்பத்தைத் தினம்தினம் எதிர்பார்த்த அவன் சிறுகச் சிறுகப் பித்தனாகிக்கொண்டிருந்தான்.

தந்தையார் இறக்குமுன் எப்பாடு பட்டோ, அவனைப் பத்தாம் வகுப்பு வரை படிக்க வைத்த பெருமைக்கு ஆளானார். இம்மாதிரியான பெருமைக்கு ஆளான தந்தைமார்கள் தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில் நூற்றுக்கு ஐந்து சத விகிதம்கூட இருக்கமாட்டார்கள்.

இதனால் அழகப்பன் அடிக்கடி தன்னுடைய தந்தையை வாயாரப் புகழ்ந்துகொள்வான்.

வாழ்த்துதலுக்குரிய தந்தைமார்கள் எப்போதுமே நீண்ட ஆயுளுடன் வாழ்ந்ததில்லை.

கோவி. மணிசேகரன்

அழகப்பனுடைய தந்தையும் திடீரென்று மாரடைப்பில் இறந்துவிடவே தொல்லை மிக்க குடும்பத் துயரப் பளுவிற்கு அவனே சுமைதாங்கியாக நேரிட்டுவிட்டது.

இளமையிலேயே தாயையும் இழந்த அவனுக்கு இப்போது இருப்பது ஒரே தமக்கை; அவளும் மணமாகாதவள்.

பருவத்தின் உச்சியிலே பரிதாபத்துடன் காட்சி தரும் தன்னுடைய தமக்கையைப் பார்க்குந்தோறும் அழகப்பனுடைய மனம் புழுங்கும். மேலும் அவனை வேலையில்லாக் கொடுமை வேறு வேதனையிலாழ்த்தி வந்தது. சிபார்சுக்கும், கைக்கூலிக்கும் பெயர் போன சென்னையில், ஆதரவற்ற அவனுக்கு வேலை தேடி வைக்கும் பெரியமனிதர்கள்கிடைக்க வில்லை. தினம் தினம் வேலைக்காக நாய்போல் அலைவான்; பேய்போல் திரும்பி வருவான். ஆனால் இந்த மனிதப் பேய்க்குப் பொறுமை இருந்ததால், வெறியுணர்ச்சி கண்ணீரால் கரைந்து போய்விடும்.

அன்றாட வாழ்க்கையை நகர்த்திச் செல்வதே குதிரைக் கொம்பாக இருக்கும் இந்நிலையிலும்கூட, தன்னுடைய தமக்கையை ஒருவனுக்குக் கைப்பிடித்துக், கொடுத்துவிட்டால் போதும் என்று எண்ணினான். மானம் என்ற அரிய கருவூலமே அவனுடைய இனத்திற்குத்தானே சொந்தம்!

எப்போதும் போலவே அன்றும் வேலை தேடிவிட்டு வீடு சேர்ந்தான் அழகப்பன்.

''ஏண்டா அழகப்பா, காயா, பழமா?''—வாடிக்கையாக என்றும் கேட்பதுபோல் அன்றும் கேட்டாள் பார்வதி.

''காயும் பழமும் கடைத்தெருவில் சொற்ப விலைக்குக் கிடைக்கும் பொருள்களக்கா;இது வேலை! ஒன்று பணப் பெருமானின் பார்வையாவது இருக்க வேண்டும்; இல்லையென்றால் சிபார்சு தேவதையின் சீராட்டலாவது இருக்க வேண்டும். நமக்கு அதுவுமில்லை; இதுவுமில்லை''

அழகப்பன் குழந்தைபோல் தேம்பித் தேம்பி அழலானான். தம்பியின் வேதனையைக் கண்ட பார்வதிக்கு அழுகை தன்னை மீறிப் பொங்கிக் கொண்டுதான் வந்தது. இருப்பினும், தானும் அவனுடன் சேர்ந்து அழுதால் நெருப்பைத் தணிக்க நெய்யை விட்டதுபோலாகும் என்றெண்ணி, பொங்கிவந்த அழுகையைப் பொறுமையுடன் அடக்கிக்கொண்டாள். அத்துடன் ''அழாதே தம்பி! நாம் யாருக்கும் எந்த விதமான தீங்கும் மறந்துகூட செய்தறியோம். அப்பா இருந்திருந்தால் நமக்கு இப்படியான துன்பம் நேர்ந்திருக்காது.'' என்று கூறித் தேற்றவும் செய்தாள்.

காலம் சிரித்தது. எங்கெங்கு நலம் புரியவேண்டுமோ, அங்கெல்லாம் தீங்கிழைத்து, வேண்டப்படாதவர்களுக்கெல்லாம் வேண்டி வேண்டி நலத்தையளித்து, முடிவில் நீதி வழங்குவதுதானே காலதேவனின் திருவிளையாடல்!

## 2

சென்னையில் அப்போதுதான் புதிதாக ஒரு சவுக்காரத் தொழிற்சாலை ஏற்பட்டது. அதன் முதலாளி, விருதுநகரிலிருந்து சென்னைக்குக் குடியேறிய புது மனிதர். அவருடைய வாழ்க்கையே விசித்திரத்தோடு கலந்த ஒரு தனி அத்தியாயம். அந்த அத்தியாயத்தின் சிறப்புகள் நமக்குத் தேவையில்லை. நமக்குத் தேவையானது ஒன்றே ஒன்றுதான்: அவர் ஒரு பரந்த நோக்குடையவர்.

மேற்கண்ட தொழிற்சாலையில் அலுவலகப் பணியாட்கள் தேவை என்று கேள்விப்பட்டான் அழகப்பன். வேலை தேடும் படலத்திற்கென்றே நல்ல முறையில் வைத்திருந்த முழுக்கால் சட்டையையும், முழுக் கைச் சட்டையையும் எடுத்து உடுத்திக் கொண்டு, பழைய, செருப்புக்கு எண்ணெய் மூலம் புது மெருகேற்றி அணிந்துகொண்டு தன்னுடையதமக்கையின் ஆசியுடன் தொழிற்சாலையை நோக்கிப் புறப்பட்டான்.

தொழிற்சாலையை அடைந்த அழகப்பன், அலவலகப் பொறுப்பாளரின் அழைப்பிற்குப் பிறகு அவருடைய அறையை நாடினன்.

வணக்கத்தோடு எதிரே வந்து நின்ற அழகப்பனை, பொறுப்பாளர் மேலும், கீழுமாக ஒருமுறை உற்றுக் கவனித்தார். பிறகு அருகே கிடந்த நாற்காலியில் அமரச் செய்தார்.

வாய்ப்புக்கன்னி மனித வாழ்க்கையில், ஒவ்வொருவிதமாக ஒப்பனை செய்துகொண்டு நுழைகிருள். பலருடைய வாழ்க்கையில், அவள் 'பூதகி' உருக்கொண்டுதான் நுழைகிருள். சிலருடைய வாழ்க்கையில்தான் அவள் 'மோகினி' உருக்கொண்டு தன்னுடைய மெல்லாடையையும், மென்மையான கூந்தலையும் மன்மதக் காற்றில் அலையவிட்டு நுழைகிருள்: இன்பம் தருகிருள்.

வெளிக் கதவு கிரீச்சிட்டதைக் கேட்டுப் பொறுப்பாளருடைய கண்கள் வாயிலை நோக்கின. கதவைத் திறந்துகொண்டு, அழகின் இளமை நுணுக்கத்தைப் பிறர்க்குப் போதிப்பவள்போல் உள்ளே நுழைந்தாள் தொழிற்சாலை முதலாளியின் மகள் ராணி. அவளைக் கண்ட பொறுப்பாளர் எழுந்து நின்று மரியாதை செலுத்தினர். இதைக் கவனித்த அழகப்பன் மட்டும் வெறுமெனே உட்கார்ந்திருக்கமுடியுமா? அவனும் எழுந்து நின்று மரியாதை செலுத்தினன். இருவருடைய மரியாதையையும் ஏற்றுக் கொண்ட ராணி, கம்பீரமுடன் அருகே இருந்த நாற்காலியில் அமர்ந்தாள். அவளுடைய தோற்றம் பெயரில் மட்டுமல்ல வாழ்க்கையிலும்கூட நான் ராணி, என்பதைப் பறைசாற்றியது.

ராணியின் உருண்டு திரண்ட கண்கள் அழகப்பனை முற்றுகையிட்டன. அழகப்பன் மட்டும் என்ன சளைத்தவனு? அவனுடைய குடும்பத்தில் தான் தரித்திரப்பேயின் தாண்டவமிருந்ததேயொழிய, அவனிடம் மட்டும் அழகு தேவதை மண்டியிட்டு இருந்தது.

சில கணங்கள் அவனை உற்று நோக்கிய ராணிக்கு ஏதோ ஓர் இனந்தெரியாத பாசம் குடிகொண்டது. இரண்டுமுறை சென்னை வீதியிலே அவனைப் பார்த்ததாக அவளுக்கு நினைவு. ஓ......! நினைவு வந்து விட்டது; ஒருமுறை காரை வேகமாகச் செலுத்திக்கொண்டு போனபோது இந்த இளைஞன்மீது ஏற்ற இருந்தோமே! அப்போது இந்த இளைஞன் எத்தனை சாந்தமாக தன் மீதே பழியை ஏற்றுக்கொண்டான்! அத்துடனு விட்டான் இந்தக் குறும்புக்கார வாலிபன்? 'பெண்களுடைய வேகம் குடும்பத்தைக் காக்கும் தீவிர சிந்தனையிலிருக்க வேண்டுமே யொழிய, காரோட்டுவதிலல்ல' என்று எத்தனை தைரியமாகச் சொன்னன்! இன்று எதற்காக இங்கு வந்திருக்கிருன்? சற்றே பொறுத்துதான் பார்ப்போமே!

"மானேஜர் சார்! உங்கள் பேச்சுகளை முடித்துக்கொள்ளலாம். பிறகே நான் வந்த காரியத்தைப் பற்றிப் பேசுகிறேன்" என்ருள் ராணி.

அழகப்பனுக்கு ராணி ஏதேனும் குறுக்கிட்டுத் தன் வாழ்வில் மண்ணள்ளிப் போட்டுவிடுவாளோ என்ற பயம். இருப்பினும் தன்னை அவள் அடையாளம் கண்டு கொள்ளப் போகிருளா என்ற நினைவில், தானும் அவளைக் கண்டுகொள்ளாமலேயே யிருந்துவிட்டான்; எப்போதோ நடந்த ஒரு நாள் சம்பவம்தானே அந்தக் 'கார்' சந்திப்பு!

பொறுப்பாளர் அழகப்பனைகேள்விப் போருக்கு அழைத்தார்.

"உன் பெயர்?"

"அழகப்பன்"

"படிப்பு?"

"எஸ். எஸ். எல். ஸி."

"முன் அனுபவம்?"

"ஒன்றுமில்லை; இதுதான் முதல் தடவை, சார்!"

"ஷார்ட்ஹேண்ட், டைப் தெரியுமா?"

"தெரியாது"

"பிரயோஜனமில்லே. அனுபவமும் இல்லே; டைப்பும் தெரியாது. உன்னே வைத்துக்கொண்டு மாரடிக்கமுடியாது. போகலாம்"

பொறுப்பாளர் இவ்வாறு இரத்தினச் சுருக்கமாகப் பதில் சொல்வார் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லே.

"சார்! கொஞ்சம் கருணே வையுங்கள் சார். அனுபவத்தை மனிதன் பழக்க வழக்கங்களில் தான் சார் தெரிந்துகொள்ளுகிருன். சம்பளம் என்ன கொடுத்தாலும் சரிதான் சார். வேலேமட்டும் இல்லே என்று சொல்லாதீர்கள் சார்! வாரத்திற்கு மூன்று முறை சாப்பிடும் எங்களுக்கு ஏதோ ஒரு வேலே கொடுத்து ஆதரிப்பதில் உங்கள் பிள்ளே குட்டிக்குத் தருமம் உண்டு சார்! சார்! சார்!"

மூச்சுக்கு முடிந்தவரை 'சார்' போட்டுக் கதறிய அழகப்பன் நிலே ராணிக்கு விம்மலே உண்டுபண்ணியது. அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் மௌனமாகவே இருந்தாள். ஆனல் அவளுடைய உள்மனம்மட்டும், அழகப்பன் அன்று கூறிய 'வேகமான சிந்தனே'யில் ஈடுபட்டிருந்தது.

"அழகப்பன்! உன்னேப்போன்று எத்தனேயோ பெயர்கள் இந்நாட்டில்! யாருக்காக இரங்குவது? போ, போ"

அழகப்பன் வேறு வழியின்றி எழுந்தான். தன்னுடைய சோகநாடகத்தை நுழைவுக் கட்டணமின்றி உட்கார்ந்து கவனித்திருந்த ராணியை மீண்டும் ஒருமுறை நோக்கினன். அந்த நோக்கலில் ஏழையுலகின் கண்ணீர் நதிகள் தென்பட்டன. அவை ஒரு கணத்தில் மறைந்தன.






அழகப்பன் வெளியேறினான். இம்முறை அவனுடைய வருங்கால நினைவு முறிந்துவிட்டது. அவன் நடைப்பிணம்போல் வீதியிலே நடந்து சென்றுகொண்டிருந்தான். எண்ணப் போராட்டங்களுக்கிடையே எழுந்த பலவிதமான பயங்கர முடிவுகள் எழுந்தன. அந்த எழுச்சிகளை அடக்கி வைத்தது, தமக்கை பார்வதியின் பரிதாபமான முகத்தோற்றம்.

---

எந்த வீதியைக் கடக்கிறோம் என்றே அவனுக்கு நினைவில்லை. எப்பக்கம் போகிறோம் என்றுகூட அவனுடைய கண்களுக்குத் தெரியவில்லை. சில சமயம் தள்ளாடி நடந்தான்; மற்றொரு சமயம் சற்றே வேகமாக நடந்தான். வேறு சமயம் அப்படியே திடீர் என்று நிற்பான்; பிறகு நடப்பான். இத்தனைக்கும் காரணம் அவனுடைய மனப் போராட்டம்; அதனால் எழுந்த பித்தோட்டம்.

'சரேல்' என்று ஒரு கார் அவனை மோதுவதுபோல் வந்து அருகே நின்றது. பயந்து நடுங்கிய அழகப்பன், தன்னினைவிற்கு வரவே, காரை உற்றுக் கவனித்தான். என்ன வியப்பான செயல்! காருக்குள் அமர்ந்திருந்தவள் திருமதி ராணியல்லவோ!

அழகப்பன் தன்னையுமறியாமலேயே தன்னுடைய கரங்களைக் கூப்பினான். அவனுடைய கண்களில் மாலை மாலையாக நீர் புரண்டு வந்தது.

"ஒரு பெண்ணை, ஆண் வணங்குவது தவறான செயலல்லவா?" — ராணி காருக்குள்ளிருந்தே கேட்டாள்.

"மதிக்கப்படும்போது மகாலட்சுமியும் வணங்கப்படுகிறாள்!" - உலர்ந்த குரலுடன் இவ்வாறு கூறினான் அழகப்பன்.

"உண்மை. ஆனால் நான் எந்த விதத்தில் மதிக்கப்படுகிறவள்? முன்பு தங்களால் புத்தி புகட்டப்பட்டவள்தானே நான்?"

"அது வேறு சந்தர்ப்பம். ஆனால் இன்று சவுக்காரத் தொழிற்சாலைப் பொறுப்பாளரே தங்களை வணங்கிய போது, நான் எம்மாத்திரம்?"

"இதுதான் தவறான எடை. இந்த உலகத்தில் 'வணக்கம்' பலவிதமாகப் பொருள் கொள்ளப்படுகிறது. சரி, சரி நேரமாகிறது." என்று கூறிய ராணி, ஒரு முகவரிச்சீட்டை எடுத்து அவன் முன்னே நீட்டி, "நாளை மாலை ஐந்து மணிக்கு, இந்த முகவரிக்கு வாருங்கள். மனம் இருக்குமானால், உங்களுக்குவாழ்வு உண்டு. மறக்கவேண்டாம்." என்று கூறிவிட்டு, 'விர்' என்று காரில் பறந்தாள்.

முகவரிச்சீட்டை அழகப்பன் படித்தான். அவனுடைய தலையே சுழன்றது.

## 3

பார்த்தால் முகம் தெரியும் பளிங்குச் சுவரில் சாய்ந்தவாறு, மாடியின் வாயிலில் நின்றுகொண்டிருந்தாள் ராணி. அவளுடைய அகக்கண்முன்

அழகப்பன் செப்படி வித்தையாடிக் கொண்டிருந்தான்.

இன்னொரு பக்கம் ராணியின் தகப்பனார் கறுப்பையா யார் வருகையையோ எதிர்பார்ப்பவர்போல் காணப்பட்டு உலவி வந்தார்.

"ஏம்மா ராணி! மணி ஐந்து ஆகப் போகுது, இன்னும் அந்தப் பிள்ளை யாண்டான் வரலேயே?"

தகப்பனாரின் குரல் கேட்டு, ராணி தன்னுடைய மனவரசிலிருந்து விடுபட்டாள்.

"எப்படியும் வந்துவிடுவார் என்பது,என்னுடைய நம்பிக்கையப்பா!"

"நீ ஒரு பெண்ணம்மா! ஏதோ ஒரே பெண்ணென்று உன்னுடைய மனம் கோணாமல் நடக்கிறேன்..."

"நானும் அதைக் காப்பாற்றிக் கொண்டு தானேப்பா வருகிறேன். மேலும், நான் கேட்ட வரத்திற்கு, இன்றுதானேப்பா தலையிட்டிருக்கிறேன்? அநேகமாக இதுவே முதலும், முடிவுமாக இருக்கும் என்பது என்னுடைய நம்பிக்கையப்பா!

"என்னமோம்மா! பணத்தைப் பொறுத்த வரையில் நீ கொடுத்து வைத்தவள். மணத்தைப் பொறுத்து உன் மனத்திற்கே விட்டுவிடுகிறேன்."

'சார்' என்ற குரல் கேட்டு இருவரும் ஒரு மனதுடன் திரும்பிப் பார்த்தனர். அழகப்பன் கரும்பாயு தன்போல்களை சொட்ட நின்றுகொண்டிருந்தான்.

குறித்த காலத்தில் அழகப்பன் வந்தது ராணிக்கு பெருமை தந்தது. மேலும், மாப்பிள்ளைபோல் ஒப்பனை செய்துகொண்டு வந்த அவனுடைய மனோதத்துவ ஞானத்தை எண்ணி மேலும் மேலும் பெருமைகொண்டாள். பெருமை மேலோங்க மேலோங்க, அவளுடை இளமைத் துடிப்புகள், எதிர்பார்ப்புத் தன்மையின் வலிமைக்கு வாய் திறந்தன. ஆனால் பேசமுடியவில்லை. சொல்லற்ற மொழிபேசுவதுதானேகாதல்?

அந்தக் காதல், சந்தர்ப்பத்தின் உதவியால் ஏற்படாமல், இயற்கையின் உதவியால் திடீரென்று அரும்பி, குப்பென்று மணம் வீசும் பாரிஜாத மலரைப்போல் ஏற்படும்போது...?

ராணி இதுபற்றியதில் வாய்ப்பு நிறைந்தவளே. ஏனென்றால் இம் மாதிரியான காதல், அதுவும் ஒரு தலைக் காதல் பெரும்பாலும் காட்டாற்றின் கதையாகவே முடிவது வழக்கம். ஆனால் அழகப்பன், அறிவில் மட்டுமல்ல, ஒழுக்கத்திலும் உயிர் நதி போன்றவன்—காவிரி போன்றவன்!

கறுப்பையா அழகப்பனைக்கண்டு ஒருவாறு உள்ளத்தால் திறனய்ந்தார். பிறகே, எதிரே கிடந்த பஞ்சு நாற்காலியில் உட்கார அனுமதித்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் சுவைநீர் கொண்டு வரப்பட்டது. எல்லார் நெஞ்சும் சுவையானது; உள்ளமும் சுவையாகப் போகிறது என்பதை சொல்லாமற் சொல்லியது.

"உன் வயது என்ன தம்பி?"- வயதான கறுப்பையா வயதைப் பற்றிக் கேட்டார்; அதுதான் அவருக்குத் தேவையானதும்கூட.

"இருபத்து நான்கு"

"ஏதாவது சொத்து சுதந்திரம் உண்டா?"

"சொத்து கிடையாதுங்க; ஆனால் சுதந்திரம் உண்டு."

"அதாவது...நாட்டை வைத்துச் சொல்லுகிறாயா? இல்லை..."

அழகப்பன் பொருளுணர்ந்து சிரித்தான்.

"என்வரை சுதந்திரமானவன்."

தந்தையும் சிரித்தார்; நங்கையும் சிரித்தாள்.

"உற்றார், உறவினர்?"

"ஒருவரும் கிடையாது; என் ஒரே அக்காள் இருக்கிறாள்; மணமாகாதவள். அவளுடைய இளமைக் கண்ணீரைத் துடைத்துவிட்டால், என் வாழ்க்கையின் முக்காற் குறிக்கோள் நிறைவேறினாற் போன்று.

அதற்காகத்தான் வேலை தேடி அலைகிறேனுங்க.''

''அப்படியா ? இவ்வளவும் ஏன் கேட்கிறேன் என்றால், உனக்குப் பொறுப்புள்ள ஒருவேலை தரப் போகிறேன்.''

''உங்களுக்கும், உங்களுடைய மகளுக்கும் கோடிப் புண்ணியம் உண்டுங்க.''

''அப்படியென்றால் அதில் ஐம்பது லட்சம் புண்ணியம் உங்களைச் சேரும்''–என்று கூறிச் சிரித்தாள் ராணி, கருப்பையா கனத்த உடலைக் குலுக்கிச் சிரித்தார். ஆனால், அழகப்பன் ஏனோ அமைதியாகவே இருந்தான்; அவனுடைய மனக்கணக்கில் புள்ளி புரண்டிருக்குமோ என்ற ஓர் ஐயம்.

''அது சரி, முதலில் உனக்கு மணமாகி விட்டதா என்று கேட்கவில்லையே; அப்போதுதானே சம்பளம் நிர்ணயிக்க முடியும் !''

எல்லாருமே அமைதியில் சிரித்தார்கள்.

''என்னுடைய அக்காளைப் பற்றி நான் கூறியதிலிருந்து என்னைப் புரிந்துகொண்டிருக்க வேண்டுமே நீங்கள் ?''

''புரிந்துகொண்டேன் !''...

பிறகும் அவரே கேட்டார்:

''தம்பி ! நீ நாடி வந்தது உதவிக்குத்தானே ?''

''இல்லை. உழைப்புக்கு ஊதியம் !''

''அது நிறைய கிடைத்துவிட்டது. நல்லது; மாதம் முழுதும் உழைத்து கிடைக்கக்கூடிய எண்பது ரூபாய் ஊதியம் தேவையா ? அல்லது எண்பது லட்சத்தையுடைய என் மகள் ராணி தேவையா? எது தேவை தம்பி ?''

கருப்பையா நேர்முகமாகவே தன்னுடைய கருத்தை வெளியிட்டார். அழகப்பனுக்கு அந்த மாளிகையே அதலபாதளத்தை நோக்கிச் செல்வதுபோலிருந்தது. அவனுடைய நாவு உலர்ந்து சுருங்கிவிட்டது.

இந்தச் சமயத்தில் வெளியே அழைக்கும் குரல் கேட்டு கருப்பையா எழுந்து சென்றார்.

ராணி மெல்ல அவனருகில் வந்தாள். அவனிடம் எப்படிப் பேச்சைத் துவங்குவது என்று ஒருமுறை சிந்தித்தாள். அவளுடைய இதயம் மட்டும் போட்டிக்குக் கதையெழுதியவன் முடிவை எதிர்பார்ப்பதுபோல் துடித்துக்கொண்டிருந்தது.

''எதற்காகத் தயங்கவேண்டும் ?''

மாலைப்பொழுதில் மதுவையருந்தி மயக்கமுற்றவன், மலர்ச்சோலையில் மங்கையின் பக்கம் அமர்ந்திருக்கும் போது, மணத்துடன் கலந்த மந்தமாருதம் அவன்மீது வீசினால் எவ்வாறான உணர்ச்சி ஏற்படுமோ, அதுபோல் ராணியின் வீணைத்தமிழ்ச் சொற்கள் அழகப்பன்மீதுசொரியவே, தன்னை மறந்து அவளை நோக்கினான். அந்த இருநோக்குகளுக்கும் இடையே, கம்பனின் காவிய நோக்கு வெறும்கற்பனையோடு நின்றது !

''ஏன் மௌனம்? இந்த வாழ்வு தங்களுக்குப் பிடிக்கவில்லையா ? சொல்லுங்கள் !''

அழகப்பனுடைய கண்களுள் ஒன்றில் ஆனந்தக்கண்ணீர் வழிந்தது; மற்றொன்றில் சோகக்கண்ணீர் வழிந்தது.

''ஏன் ? பணக்காரப்பெண்களிடம் ஒழுக்கமிருக்காது என்று ஒருசிலர் பாடும் ஒப்பாரிகளுக்கு உங்கள் காதுகளை அடிமைபடுத்தியதால், கண்கள் நீரைச் சொரிகின்றனவா ? 'நாய் என்றால் கறுப்பானது' என்று ஒரு புத்திசாலி நாய் சொல்லும். அது தவறானது என்றறிந்த தர்க்க ரீதி தெரிந்த மற்றொரு நாய், 'எல்லா நாய்களும் கறுப்பானவைகளல்ல' என்று சிறிதே மாற்றியமைக்கும். இன்னும் கொஞ்சம் வெளிப்படையாகவே மாற்றலாம் என்றறிந்த மூன்றும் நாய், 'கறுப்பானவைகள் அத்தனையுமே நாயாக இருக்கமுடியாது' என்று திருத்தியமைக்கும். இது உலகம் ! இந்த உலகில், நான்

குறிப்பிட்டு வந்த நாய்மனிதர்களும் உண்டு.''

ராணி தன்னுடைய கண்களைச் சேலையின் முகப்பால் துடைத்துக் கொண்டாள்.

அழகப்பன் பேசினுன் :

''ராணி ! நீ அழகில் மட்டுமல்ல, அனைத்திலும் ராணிதான்! ஆனல் நான் ராஜாவாக முடியுமா ?''

''சரித்திரத்தில்கூட வந்தியத் தேவன் என்ற வாணர் குலத்தவர், சோழமாதேவி குந்தவிபிராட்டியாரை இப்படித்தான் கேட்டதாகப் படித்திருக்கிறேன். மாவீரர் வந்தியத் தேவரைக் காட்டிலும் தாங்கள் எந்த விதத்திலும் குறைந்தவரல்ல. ஒரு வேளை உங்களிடம் வீரமில்லாம லிருக்கலாம். அது இக்காலத்திற்குத் தேவையில்லை. நம்வீட்டில் இரண்டு கைத்துப்பாக்கிகள் இருக்கின்றன; இரண்டு பெருநாய்களிருக்கின்றன.''

அழகப்பன் சிந்தனை மறந்து சிரித்தான். அவன் முடிவை அவன் அழைத்த 'நீ' என்ற சொல், சொல்லி விட்டது. அப்போது கறுப்பையா வும் தொழிற்சாலைப் பொறுப்பாளரும் உள்ளே நுழைந்தனர். அப்போதும் அழகப்பன் பொறுப்பாளருக்கு எழுந்து மரியாதை செய்யத் தவற வில்லை. இது ராணிக்கு வியப்பளித்தது.

''மன்னிக்கணும் சார் ! நான் உங்களுக்கு மரியாதை செய்யக்கடமைப் பட்டவன். ஏனென்ருல், நீங்கள் தானே அடுத்த முதலாளி !''

பொறுப்பாளர் இப்படிக் கூறியதும், அழகப்பன் உள்ளமெலாம் புளகாங்கிதமடைந்தது. அடுத்து, ''அப்படியல்ல மானேஜர், அழகப்பன் தங்களுக்கு மைத்துனராகப் போகிருர் என்ருல், மாமனுக்குப் பணிந்து மரியாதை செய்யவும் கடமைபட்டவராகிருர் அல்லவா ?'' என்ருர் கருப்பையா. ★

## புத்தகங்கள்

சில நூல்களை ஒரு மணிநேரம் அல்லது இரண்டு மணிநேரம் வைத்திருந்து ஒரு பகுதியைப் படித்து முடித்த பிறகு கவலை இல்லாமல் மறந்துவிடலாம். அவைகள் புகைவண்டியில் பயணம் செய்து நட்புக் கொள்ளப்படுகின்றவர்களைப் போன்றவைகள்.

சில நூல்கள் கற்போரைத் திருத்த முடியாது; எண்ணச் செய்யவும் முடியாது. படிக்கும் நேரத்தில் இன்பம் பயக்கும். தொடர்ந்து படித்தால் மிகுதியான பயன் காண முடியாது. அதற்கு மாருகக் கடமையை மறக்கச் செய்து மனச்சான்றையும் அடங்கச் செய்து பொழுதைப் போக்குமாறு தூண்டும்.

இன்னும் சில நூல்கள் முதல் முறையாகப் படிக்கும்போது தொல்லையாகவும் இருக்கும். தொடர்ந்து படிக்கப் படிக்க, இன்பம் பயக்கும். வாழ்நாளில் மறக்க முடியாத துணையாக இருக்கும்; வழிகாட்டியாக நிற்கும்; மனச்சான்றைப் பண்படுத்தும்; வழுக்கி விழும்போதெல்லாம் காப்பாற்ற முன்வரும்; நெறி தவறும்போதெல்லாம் இடித்துரைத்துத் திருத்தும். வாழ்நாளில் உயிரின் உணர்வுபோல் கலந்துவிடும் ஆற்றல் அத்தகைய நூல்களுக்கு உண்டு.

—மு. வ.

# தமிழ் நாடகங்கள்

**- சிவ. இளங்கோ -**

ஆதி காலத்தில் நமது நாடகங்கள் யாவும் திறந்த வெளியில காட்சி ஜோடனைகளின்றி தீவட்டி ஒளியில் நடத்தப்பட்டன. பாத்திரங்களுக்குத்தக்க உடை அமைப்புகள் மட்டும் அக்காலத்திலும் உபயோகிக்கப்பட்டன.

கி. பி. பதினெட்டாம் நூற்றுண்டில் வசனமும் பாட்டும் கலந்து 'விசாப்பு' என்றழைக்கப்பட்ட நாடகங்கள் நடத்தப்படலாயின. இந்த நூற்றுண்டில் ராமச்சந்திரக் கவிராயர் முதன் முதலில் சரித்திர நாடகமாக எழுதிய "இரங்கூன் சண்டை" நாடகம் குறிப்பிடத்தக்கதாகும். மாரிமுத்துப் பிள்ளை என்பவர் நவாப்கள், ஜமீன்தார்கள், கணக்கர்கள் ஆகியோருடைய தொல்லைகளையெல்லாம் விளக்கி 'அநீதி நாடகம்' எழுதியிருக்கிருர். இதே சமயத்தில் இதிகாசங்களைத் தழுவி சுமார் நாற்பது நாடகங்களுக்குமேல் எழுதப்பட்டன.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் வசன நடையில் மேனுட்டு நாடகங்களும் மொழிபெயர்க்கப்பட்டன. ஆனல் பல நாடகங்கள் நடிக்கப்படவேயில்லை. அப்படி நடிக்கப்பட்ட நாடகங்களும் எழுதப்பட்டபடியே நடிக்கப்படவில்லை; நடிகர்கள் தங்கள் தங்கள் மனதில் தோன்றியவிதத்தில் வசனம் பேசி நடித்தனர்.

1890ல் சுந்தரம் பிள்ளை எழுதிய மனேன்மணீயம், ஷேக்ஸ்பியர் நாடக அமைப்பை ஒட்டி அகவற்பாவால் அமைக்கப்பட்டது. இந்த நாடகம் கற்ருேர் பலரால் வெகுவாகப் பாராட்டப்பட்டது. இந்த சமயத்தில்தான் குறவஞ்சி நாடகங்கள் பல தோன்றின. பரிதிமாற் கலைஞன் வி. கோ. சூரியநாரயண சாஸ்திரியார் நாடகஇயல், கலாவதி முதலிய நூற்களை எழுதியதும் இந்த ஆண்டில்தான்.

1791-ம் ஆண்டுமுதல் சங்கரதாஸ் சுவாமிகளால் நாடக உலகில் ஒரு புது திருப்பம் உண்டாயிற்று. இவர் நாடகங்களை எழுதியதோடு ஷேக்ஸ்பியரைப் போல தான் எழுதிய நாடகங்களில் நடிக்கவும் செய்தார். இவர் நாற்பது நாடகங்களுக்குமேல் எழுதி தமிழ்நாடக உலகில் தனக்கென ஒரு தனி இடம் வகுத்துக்கொண்டார். இவர் அடிச்சுவட்டைப் பின்பற்றி முத்துச்சாமிக் கவிராயர் எழுதிய கிருஷ்ண லீலாவும் புகழுடன் பல நாடகக் குழுவினரால் நடிக்கப்பட்டது.

இதே 1891-ம் ஆண்டில் நாடகக் கலையில் மற்றும் ஒரு பெரிய முன்னேற்றம் ஏற்பட்டது. இந்த ஆண்டில்தான் திரு. பம்மல் சம்பந்த முதலியார் 'சுகுண விலாச சபா' என்ற பயில்முறை நாடகக்குழு ஏற்படுத்தி, 'நாடகம் வருவாய்க்கு மட்டுமல்ல; பொழுது போக்குவதற்கும்தான்' என்று நிருபித்தார். இவரைப் போன்ற உயர்பதவி வகித்துவந்த பலர், நாடக உலகில் ஈடுபட்டதால் நாடகக் கலையின் தரமே வெகுவாக உயர்ந்தது. இவர் மேனுட்டு நாடகங்களையும், வடமொழி நாடகங்களையும் தழுவியும், சொந்தமாகப் புதிய முறையிலும் எண்பதுக்கு மேற்பட்ட நாடகங்கள் எழுதியதோடு அவைகளில் நடிக்கவும் செய்தார். இவருடைய மனோகரா, சபாபதி, ரத்னவளி போன்ற நாடகங்கள் என்றும் அழியாத சிறப்புடையன.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் நூற்றுக் கணக்கான

தொழில்முறை நாடகக் குழுக்கள் தோன்றி நாடகக் கலையை வளர்த்தன. இந்தக் குழுக்களில் பல விரைவிலேயே மறைந்துவிட்டாலும் சில சமீப காலம்வரை தொண்டாற்றி வந்தன. முதன் முதலில் பெண்களை நாடகத்தில் பங்குகொள்ளச் செய்த பெருமை பாலாமணி நாடகக் கம்பெனிக்கு உரியதாகும். இது முதல் பெண்களால் நடத்தப்பட்ட பாலாம்பாள், ராஜம்பாள் கம்பெனிகள் ஏற்பட்டன. வேலுநாயரின் ஷண்முகானந்த சபா திருமதி. சுந்தராம்பாளையும், கன்னையா கம்பெனி கிட்டப்பாவையும் நாடக உலகத்திற்கு அறிமுகப்படுத்தின.

அப்பொழுது தோன்றியிருந்த நாடகக் கம்பெனிகள் பலவற்றுள் கட்டுப்பாடின்மையும், ஒழுக்கமின்மையும் மலிவுற்றது கண்ட சங்கரதாஸ் சுவாமிகள், சிறுபையன்களைக் கொண்டு 'பாய்ஸ் கம்பெனி'களை ஏற்படுத்தினர். ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனி, பாலஷண்முகானந்த சபா, நவாப் ராஜமாணிக்கம் கம்பெனி முதலியவை இந்தப் பிரிவைச் சார்ந்தனவாகும்.

ஏறக்குறைய முப்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் நடந்த நாடகங்கள் பலவற்றிலும் சங்கீதமே முக்கிய அம்சமாக விளங்கியது. நடிகர்கள் பாடலிலேயே சண்டையிட்டனர்; பாடியேகாதலித்தனர்; பாடியே சிரித்தனர். ஒரே ஒரு காட்சியில் ஒரு நிமிடம் வந்து மறையும் நடிகர்களும் சரி, கதாநாயக நாயகியர்களும் சரி பாடாத நாடகம் ஒரு சிலதான்.

இந்த நாடகங்களை மக்கள் முதலில் ரசித்தாலும் காலக்கிரமத்தில் இவைகள்மீது வெறுப்புஏற்பட்டது. 1920-ம் ஆண்டிலிருந்து பால்ய விவாகம், வரதட்சணை போன்ற மூடக்கொள்கைகளை எதிர்த்து சமூக நாடகங்கள் வெளிவர ஆரம்பித்தன. இந்த வரிசையில் ரங்கராஜு, துரைசாமி அய்யங்கார் போன்றோரின் நாவல்கள் கந்தசாமி முதலியாரால் நாடகங்களாக்கப்பட்டன.

அடுத்து அரசியலை அடிப்படையாகக்கொண்டு அநேக நாடகங்கள் வெளிவந்தன. சுதந்திர எழுச்சியைக் கிளப்பும் வகையில் தேசியக் கொடி, கதரின் வெற்றி, பம்பாய் மெயில் போன்ற நாடகங்களை இராமநாதபுரம் பாலமனோகரகான பாய்ஸ் கம்பெனி கிருஷ்ணசாமிப் பாவலர் எழுதினார்.

இந்த நாடகங்கள் தமிழ் நாட்டில் மட்டிலுமின்றி 1923-ல் லண்டனிலும் நடத்தப்பட்டன.

இருபதாம் நூற்றாண்டின் இடைக்காலம் தமிழ் நாடகக் கலையுலகின் பொற்காலம் என்று புகழப்படும் பெருமை பெற்றது. அறிஞர் அண்ணா அவர்கள் நாடக உலகில் காலடிவைத்தார். அவருடைய 'வேலைக்காரி' நாடகம் நடிப்பிசைப் புலவர் கே. ஆர். இராமசாமி அவர்களின் குழுவினரால தஞ்சையில் தொடர்ந்து நூறு நாட்களுக்குமேல் நடத்தப்பட்டது. 'ஓர் இரவு' 'காதல் ஜோதி' 'சந்திரோதயம்' 'சிவாஜி கண்ட இந்துராஜ்யம்' முதலிய நாடகங்களை அண்ணா எழுதியதோடு, அவரே பலநாடகங்களில் நடித்தார்.

நாடகக்கதையிலும், கருத்திலும் உரையாடல்களிலும் அண்ணா ஏற்படுத்திய மறுமலர்ச்சி மிகப் பெரிது. இவருடைய வழியை ஏராளமானோர் பின்பற்றத் தொடங்கினார்கள். அவர்களுள் குறிப்பிடத் தகுந்தவர் திரு. மு. கருணாநிதி. இவருடைய 'தூக்குமேடை' 'மணி மகுடம்' இரண்டும் புகழ்பெற்ற கருத்தோவியங்கள்.

பாலசண்முகானந்தா சபா என்ற பெயர் கொண்டிருந்த டி. கே. எஸ். சகோதரர்கள் நாடகக் கலை வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டனர். நல்ல நாடகங்கள்

எழுதப்பட வேண்டுமென்பதற்காக எழுத்தாளர்களுக்கு நாடகப் போட்டி வைத்தனர். ஏராளமான புதிய நாடகங்களை இவர்கள் நடத்தினர். ப. நீலகண்டன் எழுதிய முள்ளில் ரோஜா, ரா. வெங்கடாசலத்தின் இமயத்தில் நாம், நாரண துரைக்கண்ணனின் உயிரோவியம், கல்கியால் எழுதப்பட்டு S. D. சுந்தரத்தால் நாடகமாக்கப் பட்ட கள்வனின் காதலி, ஸ்ரீதரின் ரத்தபாசம், எத்திராஜுலுவின் ஔவையார் முதலியவை முக்கிய மானவை. இவர்கள் நடத்திய 'மனிதன்' சமுதாயத்தில் புரையோடிப் போன சில சம்பிரதாயங்களைசாடியது இரண்டாண்டுகளாக இவர்கள் நடத்திவரும் 'இராஜராஜ சோழன்' ஈடும் எடுப்பு மற்று எங்கும் புகழ் பரப்பி வருகிறது. தமிழ்ச் செல்வம் வாழ்வில் இன்பம் என இருபுதுமையான நாகங்களை இவர்கள் அரங்கேற்றினர். ஆனுல் அறிஞர் தம் ஆதரவையும், பத்திரிகைகளின் பாராட்டுதலையும் பெற்ற அந்த நாடகங்களை, பொது மக்கள் சரியான முறையில் கவனிக்கத் தவறிவிட்டனர் என்பது வருத்தத் திற்குரியதாகும். இவர்கள் அண்மையில் (1957-ம் ஆண்டில்) மலேயா சென்று நாடகங்களை நடத்திவந்தனர்.

இதேபோல 1856-ல் கே ஆர். இராமசாமியும், திரு.மனோகரும் முறையே மலேயாவுக்கும் இலங்கைக்கும் சென்று தமிழ் நாடகக்கலையின் பெருமையைப் பறை சாற்றி வந்தனர். இராவணனுடைய வாழ்க்கையைப்புதுக்கோணத்திலே 'இலங்கேஸ்வரன்' என்ற பெயரில் நாடகமாக்கினுர் துரையூர்மூர்த்தி. அதை மனோகருடைய 'நேஷய் தியேட்டர்ஸ்' நடத்தி வருகின்றனர்.

அமரர் என். எஸ். கே. அவர்களின் நாடகசபாவும் சில முக்கியமான திருப்பங்களை தமிழ் நாடாகக் கலைக்கு அளித்தது. மனோகரா, இழந்த காதல், கிருஷ்ணலீலா முதலிய பல நாடகங்களை அவர் தயாரித்தார். ஓவியர் மாதவனின் வர்ணஜாலம் நிறைந்த புதுமுறைக் காட்சி அமைப்புகள் இந்த நாடகங்களுக்கு சிகரம் வைத்தாற்போல் அமைந்தன. என்.எஸ்.கே. நாடக சபையின் நிர்வாகப் பொறுப்பை சகஸ்ரநாமம் மேற்கொண்ட பிறகு நடத்தப்பட்ட 'நாம் இருவர்' நாடகம், ஒரு பரப்பரப்பையும் உண்டாக்கியது. நாடகத்தில் பின்னணி அமைக்கும் பழக்கம் இந்த நாடகத்தில்தான் முதன் முதலில் ஏற்பட்டது. இதன் மூலம் நன்ருக நடிக்கக் கூடிய, பாடத்தெரியாத நடிகர்கள் மேடைமீதேறும் வாய்ப்புப் பெற்றனர். இதையடுத்து சமூக சீர்திருத்தத்தை அடிப்படையாகக் கொண்டு சகஸ்ரநாமம் எழுதிய 'பைத்தியக் காரன்' பல மாதங்கள் தொடர்ந்து நடத்தப்பட்டு, பெயரும் புகழும் பெற்றது.

என். எஸ். கே நாடகசபா இடையிலே நிறுத்தப்பட்டதும், சகஸ்ரநாமம் 1952-ல் 'சேவா ஸ்டேஜ்' என்ற பெயரில் புதிய குழுவொன்று தொடங்கினுர். சேவா ஸ்டேஜின் முதல்தயாரிப்பு "கண்கள்" இதைத், தொடர்ந்து 'இருளும் ஒளியும்' 'வானவில்' முதலியவை அரங்கேறின. இம்மூன்று நாடகங்களையும் எழுதியவர்என்.வி. ராஜாமணி.

கண்கள் நாடகத்தில் வர்ணப்படுதாக்களை நீக்கி, அழகும் சிறப்பும் வாய்ந்ததாக அமைக்கப்பட்ட கலாசாகரம் ராஜகோபாலின் காட்சி அமைப்புகள் முப்பரிமாண வகையைச் சார்ந்ததாக யாவராலும் பாராட்டப்பட்டன. இதன் மூலம் கலாசாகரம் அரங்க அமைப்பு முறையில் தனக்கென ஒரு தனி வழி வகுத்ததுமின்றி, ஒரு புது சகாப்தத்தையும் ஆரம்பித்துவைத்தார். இருளும் ஒளியும் நாடகம் ஐந்தே காட்சிகள், ஐந்து நடிகர்கள், நான்கு பாடல்களுடன் இரண்டே

மணிநேரத்தில் நடத்தப்பட்டு புதுப் பாதை அமைத்தது.

இந்தச் சமயத்தில் பிரபல சிறு கதைஎழுத்தாளர் பி.எஸ்.ராமையா எழுதிய 'பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்' 1956-ல் அரங்கேற்றியது. காட்சிக்குக் காட்சி நகைச்சுவையை அள்ளித்தெளித்து, ரசிகர்களை சிரிப் புக்கடலில் ஆழ்த்தி, சகஸ்ரநாமம் புகழ்க்கடலில் வெற்றிப் பயணம் நடத்தினர். இப்பொழுது மல்லியம் மங்களம், தேரோட்டிமகன், நாலு வேலி நிலம் முதலிய நாடகங்களை சேவா ஸ்டேஜ் சிறப்புற நடத்தி வருகிறது.

நாடகக் கலைக்கு சகஸ்ரநாமம் செய்த மற்றொரு நல்ல தொண்டு நாடகத்தில் இளைஞர்களுக்கு ஆதாரப் பயிற்சியளிக்க கல்வி நிலையம் ஒன்று ஏற்படுத்தியதாகும். சென்ற ஆண்டு நடத்தப்பட்ட இந்தக் கல்வி நிலையம் பயனுள்ள பல சாதனைகளை சாதித்தது. கதை வசனம் எழுத, நடிக்க, காட்சி அமைக்க, தயாரிக்க இங்கே பயிற்சியளிக்கப் பட்டது. சுமார் இருப்பத்தைந்து மாணவர்களும், ஒரு மாணவியும் இங்கே பயிற்சி பெற்றனர்.

நவாப் ராஜமாணிக்கமும், நடிகவேள் M R ராதாவும் தமிழ் நாடக வளர்ச்சிக்கு செய்துவரும் சேவைகளும் சாமான்யமல்ல. இருவரும் வெவ்வேறு லட்சியங்கள் கொண்டிருந்தாலும், அவர்களுடைய நோக்கத்தையும், நெறியையும் திறம்பட நாடக உலகில் செய்து வருகின்றனர்.

தென்னகத்தின் புகழ்பெற்ற திரையுலக நடிகர் எம். ஜி. ராமசந்திரன் நாடக உலகில் முழு கவனம் செலுத்த நேரம் இடங்கொடுக்கவில்லை யெனினும், தனியானதோர் நாடகமன்றம் அமைத்து, 'இன்பக் கனவு' 'அட்வகேட் அமரன்' 'சுமைதாங்கி' ஆகிய நாடகங்களை நடத்தி வருகிறார்.

எஸ்.எஸ். இராஜேந்திரன், பி. கே. சரஸ்வதி, தங்கவேலு ஆகியோரும் தங்களை முன்னுக்குக்கொண்டுவந்த நாடகக்கலையை வளர்க்க தங்களாலானபணிகளைச்செய்துவருகின்றனர். நடிகர் திலகம் சிவாஜிகணேசன் 1953-லிருந்து சிவாஜி நாடக மன்றத்தை ஏற்படுத்தினாலும் நல்ல நாடகங்களைத் தர அவருக்கு சந்தர்ப்பமில்லாமலிருந்தது. 1956-ல் சேலத்தில் அரங்கேற்றமான கட்டபொம்மன் நாடகம் இன்று தமிழ் நாடெங்கணும் உலா வருகிறது.

பயில் முறை நடகக் குழுக்களில் சென்னையிலுள்ள கிருபா அமெச்சூர் குழுவினரும், திருவல்லிக்கேணி பைன் ஆர்ட்ஸ் குழுவினரும் பாராட்டத்தக்கவை. தமிழகத்தில் ஆயிரக்கணக்கானபயில் முறை நாடக மன்றங்கள் உள்ளன. இவற்றுக்கெல்லாம் பொதுவானதோர் திட்டம் வகுக்கப்பட்டு, மத்திய கேந்திரம் நிறுவப்பட்டால் இன்னும் நல்ல முறையில் இவைகள் பணியாற்ற வாய்ப்புண்டு.

1944-முதல் தமிழகத்தில் நடத்தப்பட்ட மூன்று நாடகக்கலை மாநாடுகளிலும், நடிகர்கள் ஒன்று சேர்ந்து நாடகத்திற்கான பொழுது போக்கு வரியை நீக்க வேண்டுமெனபோராடினர். இவர்களுடைய கோரிக்கைகளுக்கு அரசியலார் செவிமடுத்து நாடகங்களுக்கு தமாஷா வரியை 1951-ல் விலக்கினர். பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் திறந்தவெளி அரங்குகள் ஏற்படுத்தப்பட்டன. நடிகைகளுக்கு உபகாரச்சம்பளமும், விருதுகளும் அளிக்கப் பெறுகின்றன. இன்று நாடகக் கலைஞர்களுக்கு நல்ல மதிப் பேற்பட்டிருக்கிறது சமூகத்தில். சிறந்த முறையில் செலாற்றிவரும் தென்னிந்திய நடிகர் சங்கம் இதற்கோர் காரணம். திராவிட மொழிகளில் இன்றையதினம் ஏற்பட்டுள்ள இந்த மறுமலர்ச்சியைப் பயன்படுத்தினால் உலகம் வியக்க திராவிடத்தின் நாடகக்கலை மிளிரும். ★




இரா. கோதண்டராமன்

என்ன இருந்தாலும் இதயத்தை உரிமையாக்கிக் கொண்டவள் இல்லையா? போனதும் அந்த முகத்தில்தான் விழிக்க வேண்டும். இதயத்தைக்கூட எடுத்து வைத்துவிட்டு அமைதியாக இருக்கலாம் போலிருக்கிறது. மனத்துக்கும், மனிதனுக்கும் இருக்கிற உறவு அவ்வளவு சீக்கிரத்தில் அற்றுவிடுவதாகத் தெரியவில்லை. இப்படி நினைப்பதே அவளுக்குப் பிடிப்பதில்லை. கூண்டாக இருந்தால், தப்பிவிட்டதாக நினைத்துக் கொண்டு, எங்காவது தொலைந்துகூட விடலாம். எங்கிருந்தாலும், கூட்டுக்கு வந்துதான் சேர வேண்டியிருக்கிறது. அந்த எதிர் வீட்டுத் 'தத்துவம்' இருக்கிறதே, அப்படியே அதன் கழுத்தைப் பிடித்து...

ஒரு வேலையாவது ஓட வேண்டுமே! ஆத்திரம் வரும்போது மட்டும் எதுவும் தெரிவதில்லை. 'தத்துவம்'தான் என்னவோ பிதற்றிக் கொண்டிருந்தது.

யாருக்குத்தான் உள்ளம் என்று ஒன்று இல்லை! உற்றுக் கேட்டால் தெரியும்; காற்றில்கூட சலனம் இழைக்கிறது. வெற்றுவெளியில் பெய்யும் மழைகூட என்னவோ பேசிப்பார்க்கிறது. எல்லாம் உள்ளத்தின் விழைவுகள் தாம். யாராகத்தான் இருக்கட்டுமே, மதிக்கவேண்டிய உணர்ச்சிகளைப் புறக்கணித்தால், மனிதர்களா அவர்கள்! அடிச்சுவடுகளுக்காகவா நடக்கிறார்கள்; நடந்தால்தான் அச்சுவடுகள் விழாமலிருக்க முடியுமா?

அலையாகத்திரண்ட ஆத்திரத்தில் ஏதாவது நடந்துவிட்டிருக்க வேண்டும். துளசி இல்லாமலிருந்திருந்தால் 'தத்துவம்' நிலைகுலைந்துதான் போயிருக்கும். பிறவிப்பயன் படிக்க வந்த 'தத்துவம்' குறிப்பாக நடந்துவிட்டது.

“இதையெல்லாம் போய் வெளியில் சொல்லிக் கொண்டிருப்பதுதான் உனக்கு வேலையா? அப்படியென்ன, மதிக்காத உணர்ச்சியையும், விழாத அடிச்சுவட்டையும் இந்தத் 'தத்துவம்' கண்டுவிட்டது? அதைச் சொல்லிக் குறையில்லை; இந்தவீட்டில் ஒருவன் இருகிறானே என்ற நினைப்பே உன்னை விட்டு அடியோடு...”

“போதும், போதும். அந்த ஒருவருக்குத்தான் இந்த ஒருத்தியைப்

பற்றி நினைக்க நேரம் இல்லை. அவரைப் போலவே இவளும் இருந்து விடுவதற்கு, உள்ளம் ஒன்றும் 'தங்கம்' இல்லை. புரிந்து கொள்ளாவிட்டால் தெரிந்தாவது கொள்ளவேண்டும். எதுவுமில்லை; எல்லாம் 'எழுத்து'."

அதற்குப் பிறகு என்னவோ நடக்காதது நடந்துவிட்டது. கொஞ்சம் நயமாகச் சொல்லியிருக்கலாம். அவள் நயமாகத்தான் சொல்லியிருப்பாள். 'தத்துவம்' வந்து தடுக்காமலிருந்திருந்தால் இவ்வளவு தூரம் நடந்திருக்காது. அதன்மீது வந்த ஆத்திரம் இப்படித் திரும்பி விட்டது.

'தங்கம்' என்று சொன்னாள்! உண்மைதான்; அது அவ்வளவு சீக்கிரத்திலா உருகிவிடுகிறது? எல்லாம் நடந்துவிட்ட பிறகு மட்டும் உருகத் தெரிகிறது. பிணைப்பு என்ற நிலை ஏற்பட்டுவிட்ட பிறகு, புரிந்து கொள்ளவேண்டியவற்றைக் கூடப் புரிந்துகொள்ளாமல் இருக்க முடியுமா? விழைவுகளும், வேட்கைகளும் அவளுடைய உணர்ச்சிகளில் மட்டும் தானா கொக்கியிடுகின்றன? எல்லாம் சொல்லியாகி விட்டது; எத்தனை முறைதான் சொல்லுவது?

ஒரே ஒரு துளி. அது இலையிலும் தூங்க வேண்டும். இலையையும் ஈரமாக்கக்கூடாது. எப்படிவேண்டுமானாலும் உருளட்டும். உணர்ச்சிகள் வடிவம் பெருமலிருந்தால் சரிதான்; மதிக்காமலிருக்க முடியுமா? கடைசி வரையிலும் இப்படியே இருந்துவிடுவதில் தொல்லை ஒன்றும் இருக்காது. கேட்டால்தானே; அந்தத் துணிச்சல் இல்லையாம்!

உணர்ச்சிகளையும் மதிக்க வேண்டும்; வடிவமும் தரக்கூடாது. பக்கத்து வீட்டில் பவளதுக்கு ஒரே பெருமிதம். என்னதான் 'வடிவம்' வளரத் தொடங்கிவிட்டாலும் இத்தனை தருக்கிக்கொள்ளக்கூடாது. என்ன செய்வது? இங்கே கதை அப்படியிருக்கிறது. நரம்பையும் தட்டி, அதிர்வையும் தடுத்து விட்ட பிறகு, அப்புறம் என்ன இசை வாழ்கிறது? மூடிக்கொண்டே கூடத்தான் இமைக்கலாம்; கண்கள் எதற்காகவோ? பிறைக்கோடு ஒளிவீசுமா? எட்டிகூடத்தான் கனியாகிறது...

இந்த வேம்பு என்றைக்குத்தான் கனியுமோ?

கன்னம் மட்டும் கனிந்துதான் இருந்தது. நான்கு விரல்களும் எத்தனை அழகாகக் கதிர் விரித்திருக்கின்றன! அந்தக் கடைசி விரல் இல்லாமல் எதுவும் இல்லை. அது தான் அவர்; அவர்தான் இதயம். இதயத்தைக்கூட எங்காவது எடுத்துப் போடமுடியுமா? மழையின் துளிகளா நீரை வடுப்படுத்தப் போகின்றன?

'இதயம்' வீட்டுக்கு வந்தபோது இருட்டிவிட்டிருந்தது. 'கூடு' அதற்குள் துடித்த துடிப்பு இருக்கிறதே... 'இதயம்' இளகிக்கொண்டிருந்தது. இப்படி அடித்துவிட்டு வேதனைப்படுவதில் எத்தனை நெகிழ்ச்சி இருக்கிறது? இளக்கம் எப்படியும் இறுகிவிடும். அதற்குள் ஏதாவது ஒன்று நடந்துவிடவேண்டும். அதுவரையில் இப்படி நிறைவில்லாமல்தான் தவிக்க வேண்டும்.

துவண்டிருக்கும் கொடியில்கூட என்னவோ கவர்ச்சி இருக்கும் போலிருக்கிறது. அந்த விளக்கைச் சிறிதாக்க இவ்வளவு நேரம் வேண்டியதில்லை. சிறிதாக்கிக்கொண்டே மெல்லத் திரும்புகிறாள். அந்த அழகான கன்னங்களைக் கன்றிவிடச் செய்தது, இந்தக் கரம்தான்; இல்லாவிட்டால் இத்தனை துணிச்சலுடன் அந்தச் சுடரை இருளாக்குமா?

'மென்மை' நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. நினைத்தது, நினைக்காத நிலையில் நடந்தது. 'வன்மை' 'மென்மை'க்குள் சுருண்டுவிடும் ஒரு தத்துவம் பொய்க்கவில்லை. அலை ஊர்ந்து கடல் வடிந்ததாகக் கதையில்லை. கலம் கிழித்த காற்றும், கலம் கிழித்த நீரும் ஒருமையாகி ஒன்றிவிடுவதைத் தடுக்க முடியுமா என்ன? எதிர் வீட்டில் 'தத்துவம்'

நிம்மதியாக மூச்சுவிட்டுக் கொண்டது.

கிழக்கத்தில் தூங்கிய முகில்திரள் அசைந்து நெளிந்தது. கதை எப்படியோ திரும்பிவிட்டது. கங்குலும் கலைந்துவிட்டது. விடிவில் தெளிவு இருந்தது. பகலுக்காக விடிவதை விட இருளுக்காகவிடிவது அருமை தான். இப்பொழுதெல்லாம் துளசியைக் கண்டு பிடிக்கத்தான் முடிகிறதா? அத்தனை கலகலப்பு. 'இதயம்' எதையும் நினைப்பதில்லை; இயந்திரம் போல் போகிறது, வருகிறது.

முன்றிலில் படர்ந்த கொடி, பந்தலிட்டுக்கொண்டிருந்தது. மலர்கள் கொடியைப் போர்த்திக்கொண்டிருந்தன. கொத்து மஞ்சள் வரிசை அகன்ற பீள் விரித்து, நீண்ட குருத்துக்கள் விட்டிருக்கின்றன. இந்தத் தடவை, பாளம் பாளமாகக் கிழங்கு பரவும் என்று 'தத்துவம்' சொல்கிறது. அது உண்மையைத்தான் சொல்லும். அத்தனை அனுபவம். இந்தநாகலிங்க மரம்மட்டும் அந்தப் பழக்கத்தை எப்பொழுது மாற்றிக் கொள்ளப் போகிறதோ? ஒரே காலத்தில் உதிர்ந்து ஒருமிக்கத் தளிர்விடலாம்; அதுதானே கிடையாது. ஒரு பாதி உதிர்கிறது; இன்னொரு பாதி எண்ணெ வடியும் இளந்தளிர்களை ஈன்றுவிட்டு, பெருமிதத்தில் சிலிர்த்துக்கொள்கிறது.

சொல்லிவிட வேண்டுமென்று துடிப்புதான் இருக்கிறது. எப்படிச் சொல்லுவது என்றுதான் புரியவில்லை. பவளத்துக்கு இவர் எதிரில் வந்து நிற்கவே வெட்கம். இந்தத் 'தத்துவம்' கூட எங்கும் போய்விடவில்லை. என்னவோ பெரிய வழக்கு வந்து சேர்ந்துவிட்டது.

"அந்தண்டைத்தெருவில் பெரிய அதிசயமான அநியாயம் நடந்திருக்கிறது. வரைமுறை எல்லாம் வரம்பு மீறிவிட்டது. காயாகாமலே, பிஞ்சு பழுத்து விடப் பார்க்கிறது. இந்த வேலாயுதம் பையனுக்குப் புத்தி ஏன் இப்படிப் போக வேண்டும்? இன்னும் இருபதுகூட சரியாக ஆகவில்லை. அதற்குள் காலில் ஒன்றைச் சுற்றிக்கொண்டு வந்திருக்கிறனே! அவளுக்குத்தான் எத்தனை துணிச்சல்! முப்பத்தைந்துவயதைத் தலைமாட்டில் வைத்துக்கொண்டு... இந்த ஊரை என்னவோ பிடித்துக் கொண்டுதான் ஆட்டுகிறது. காலத்தைவேறல்லவா கெடுத்து விடப்பார்க்கிறர்கள். என்னவோ, உலகம் போகிற போக்கும், காலம் இருக்கிற இருப்பும்..."-'தத்துவத்'தின் மலைப்பொழிவு அவ்வளவு சீக்கிரத்திலா ஓயப்போகிறது?

"யார் தலையிலாவது ஏதாவது வந்து விடியட்டுமே! போகிற காலத்தையும், பொல்லாத உலகத்தையும் இந்தப் 'பைத்தியம்'தானே கண்டுவிட்டது! இருக்கப் பிடிக்கவில்லையென்றால், கடலில் போய் விழுவது தானே!"

இவருக்கும் அந்தத் 'தத்துவத்'துக்கும் பிடிப்பு எப்பொழுதுதான் ஏற்படுமோ? பவளத்துக்குக் காலையிலிருந்து சரியில்லை. இல்லாவிட்டால் இழுத்துவந்து நிறுத்தியாவது சொல்லச் சொல்லலாம். சீ! இதைக் கூட நேரில் சொல்லவில்லையென்றால், அப்புறம் என்ன உறவு கிடக்கிறது? ஏறிட முடியுமா? போனால் எல்லாம் புரிந்துவிடப் போகிறது. கண்ணாடியை எதிரில் வைத்துக் கொண்டா இவ்வளவும்? அதற்கா இந்த முகம் இப்படிச்சிவக்க வேண்டும்? இந்தக் கன்னங்கள் மட்டும் அன்றைக்குக் கனியாமல் இருந்திருந்தால்...

பக்கத்தில் ஒரே ஆரவாரம். துளசி சுருட்டி வாரிக்கொண்டு ஓடினாள். பத்து மாதம், ஒரு 'கதை' சொல்லிவிட்டிருந்தது.

"ஓஹோ, சுவடா?"-உதட்டைக் கடித்துக் கொண்டாள் துளசி.

அந்த இளம்பிஞ்சு எத்தனை அழகாக சந்தம் சிதையாமல் அழுகிறது! குரல் வளைக்கு மீறிய ஆற்றலில் கத்துவதுகூடக் கவிதையாகத்தான் இருக்கிறது. இனிமை துள்ளும்

'இசை'யில் பவளம், இமைகளை மூடித் திளைக்கிருள். விழிகளைத் திறக்கும் போது நாணமாக இருக்கிறது. அடடா, கையும் காலும் ஒரு கணமாவது ஓய வேண்டுமே! அத்தனை துடிப்பு. நலுங்காமல், குலுங்காமல் அப்படியே எடுத்து, மார்பில் வைத்து அழுத்தி, கன்னத்தில் இதழைக் குவித்து, நெற்றிப் பொட்டை நீவி...

"துளசி, அவர் வந்திருக்கிருர்!"

நினைவுகளின் மயக்கம் கலையாத நிலை. சுமந்து வந்த நினைவுகளில் எதுதான் கேட்கிறது? எதையோ சொல்லிவிட்டு 'இதயம்' வெளியில் கிளம்பிக் கொண்டிருந்தது. எப்பொழுது வரும் என்று கூடக் கேட்கவில்லை. படுக்கையில் விழுந்த பிறகும், மனம் நிலையில் இல்லை. கண்ணுடியைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது. சீ, இத்தனை வெட்கமா?

நாகலிங்க மரத்தில் இதழ் உதிராத இளம்பிஞ்சுகள் சரம் தொடுத்துக்கொண்டிருக்கின்றன. 'தத்துவம்' சொன்னுல்கூடவா பொய்த்து விடும்?

எந்த நிலையில் இருக்குமோ? நிச்சயமாக எல்லாமே வளர்ந்து கொண்டுதான் இருக்கும். பக்கத்து வீட்டில் அந்தக் குஞ்சுக்கு, அரும்பைப் பிளந்து வைத்ததைப்போல் கண்கள் எத்தனை அமைப்பாக இருக்கின்றன; அந்தக் கண்ணேட்டம், பரந்த கண்ணேட்டம். இங்கே எப்படி இருக்குமோ? அந்தக் குஞ்சுக்கு, இளங்கிளிஞ்சல் போன்ற செவிகள். வாழைப்பூவின் மடலுக்குள் தூங்கும் பிஞ்சுப்பூ அடுக்கைப் போன்ற மென்மை புரையும் விரல்களைத் தின்றுவிடலாம்போல் இல்லையா! இங்கே, எல்லாம் முழுமை பெறப் போகிற ஓவியத்தின் ஓரக் கோடுகளைப் போலத்தான் இருக்கும்.

கண்படுமோ, என்னவோ? இன்னும் பார்க்கக்கூட வில்லையே! நினைப்பதில் ஒன்றும் தவறு இல்லை யென்று சொல்கிறதே தத்துவம்; அதற்கில்லாத அனுபவமா? பத்தையும் பெற்றுப் பதினென்றையும் பறிகொடுத்த பெருந்தெய்வமாயிற்றே அது! நினைவுகளில் ஓவியத்தின் தனித்தன்மை உருவாகுமாம்.

அடுத்துவரப்போவது ஐந்து. அம்மாடி, இன்னும் ஐந்து இருக்கிறதே! பவளம், பத்தாண்டுகள் கூட பொறுத்துக் கொள்வதாகக் கிணற்றடியில் சொன்னுள். அவளுக்கு இதயமே இல்லையோ, என்னவோ? இரண்டு போனுல் பிறகு மூன்று; மூன்றுக்குப் பிறகு இரண்டு. ஒன்றும் போகும்; ஒன்றுக்குப்பிறகு...

பக்கத்து வீட்டில் மீண்டும் ஆரவாரம். முகிலின் மேல் நிலவு காய்ந்துகொண்டிருந்தது. துளசிக்கு என்னவோ போலிருந்தது. எழுந்து போகவும் பயமாக இருந்தது.

என்னவாக இருக்குமோ? ஊரெல்லாம் ஒரே இடத்தில் திரள்கிறது. வெளியில் போனவர் இன்னும் திரும்பவில்லை. எழுந்து போய்க் கதவை மூடலாம். தெம்பு எங்கோ போய் நிற்கிறது. எல்லாம் பிரமையாக இருக்கும். உள்ளே இருக்கும் 'ஓவியக் கோட்டு'க்கு எந்தவிதச் சலனமும் இருக்கக் கூடாது.

திறந்து இமைக்கக்கூடத் துணிவில்லாமல், மூடிக்கொண்டே இமைக்கின்றன இந்தக் கண்கள். நடுநிசியாக இருக்குமோ? இன்னும் அந்த ஆரவாரம் ஓயவில்லை. ஒருவேளை இவர் படத்துக்குப் போய்விட்டிருப்பார். இன்றைக்குப் பார்த்துதானு படத்துக்குப் போக வேண்டும்? அவர் இல்லாவிட்டால் இந்தத் 'தத்துவம்' ஆயிரந் தடவை நடந்துவிடும். அதற்குக் கூட என்ன வந்துவிட்டதோ? எரியும் சுடர் எதற்கு இப்படி அலைகிறதோ? இருளாகிவிட்டால் எப்படி இருக்குமோ?

நாகலிங்க மரம் சிலிர்த்துக்கொள்கிறது. அது வெறும் சிலிர்ப்பாகவா இருக்கும்? போனதடவையே

அதை வெட்டிவிட வேண்டும் என்று திட்டம். சொன்னால் கேட்டால்தானே. 'தத்துவம்' மட்டும் பாடிப் பாடி ஓய்ந்துவிட்டது.

அடி தொலைவுகூட இடைவெளி இருக்காது. பக்கத்தில் அப்படி என்ன நடந்து விட்டிருக்கும்? எழுந்து உட்காரக்கூட விடாமல் எதற்குத்தான் இந்த உடல் இப்படி நடுங்குகிறதோ? நினைக்கமுடியாத தொலைவையும் கணத்தில் கடந்து விடுகிற இந்த மனம், ஒரு நாலடி நடப்பதற்குக் கோழையாகி விட்டிருக்கிறது.

கொஞ்ச நேரம் வரை குழந்தையின் குரல் ஒலித்துக் கொண்டிருந்தது. அது கூட இப்போது கேட்கவில்லை. ஆரவாரத்தில் அடங்கி விட்டிருக்கும். இல்லை, ஒருவேளை... அப்பா, என்ன பயங்கரம்!

உடம்புகூட சுடுகிறதா? உள்ளே இருப்பதற்கு ஒன்றும் ஆகாமல் இருக்கவேண்டும். இன்னுமா படம் முடியாமலிருக்கும்? இந்தத் 'தத்துவம்' ஒரு தடவையாவது வந்துவிட்டுப் போகலாம்; வந்தால்தானே... செவிகளை அடைத்துக்கொண்டு, தொண்டை கிழியக் கூவலாமா? எங்கே முடிகிறது?

விதிக்கு அப்பாலும், அதை ஆட்டுவிக்கிற சக்தி ஒன்று இருக்கிறது என்று சொல்கிறது 'தத்துவம்.' பக்கத்தில் எதுவும் நடக்காமலிருக்க அந்தச் சக்திக்கு ஆற்றல் இருக்குமா...?

ஆரவாரம் கொஞ்சம் அடங்கியிருக்கிறது போலிருக்கிறது. உண்மையில் அடங்கிதான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் குழந்தை அழும் ஒலி கேட்க முடியுமா? நன்றாகத்தான் அழுகிறது. அழுதுகொண்டிருக்கும் வரையில் ஆறுதல்தான்.

'சக்தி' ஆற்றல் படைத்ததுதான். பேரலைக்கு முன், திவலை என்ன செய்ய முடியும்?

கண்கள் துணிச்சலாக இமைக்கத் தொடங்கிவிட்டன போலிருக்கிறது. எரியும் சுடரை அணைக்க வேண்டியதில்லை. 'தத்துவம்' காலையில்தான் வரட்டுமே. படத்துக்குப் போனவர்தான் இதற்குள் எப்படி வரமுடியும்? நாகலிங்கம் சிலிர்க்கவில்லை; சிரிக்கிறது. காற்றில் சிரிக்காமல்கூட இருக்க முடியுமா? எழுந்து உட்கார்ந்துவிட்ட பிறகு, இப்படியே கொஞ்சம் எழுந்து நடந்து போய் அந்தக் கதவை மூடிக்கொண்டு வந்துவிடலாம்.

குழந்தை அழுகிறதா? அழுகிறது. நன்றாக அழட்டும். அழுவது நல்லதுதான். ஒரு பேச்சாளன், ஒரு பாடகன், ஓர் உழைப்பாளன், எப்படி உருவாகிவிட்டாலும் பெற்ற உள்ளத்துக்கு ஒரு பெருமிதம்தான்.

பவளம், படுகோழை. மணற் படுகையில் கொஞ்சம் 'பொத்' தென்று உட்கார்ந்து விட்டால் என்ன நடந்துவிடும்? இரண்டு மூன்று நாட்கள் சாப்பிடாமல்கூடப் புலம்பிக் கொண்டிருந்தாள். வேகமாக நடப்பதென்றால் பயம்; பெருமூச்சு விடுவதென்றால் பயம்; கண்ணாடியைப் பார்த்தால் கண் பட்டுவிடும் என்று பயம். இத்தனைக்கும் நடுவில், 'சுவடு' அழகாகப் பதிந்துவிட்டது.

மணிப்பொறி பெருமூச்சு விட்டுக் கொண்டது. எத்தனை அடித்ததோ? அதைக்கூடக் கவனிக்கவில்லை. தூங்கவேண்டும் போலிருக்கிறது. படுத்தால் நிம்மதியாகத் தூக்கம் வந்துவிடும். அவரும் வருகிற நேரமாகத்தான் இருக்கும். வந்தால் கதவு திறக்க வேண்டும். ஊமைத் தூக்கம் வந்தால் வந்துவிட்டுப் போகட்டும்.

பவளம் கொடுத்து வைத்தவள் தான். அவள் சிரிக்கும்போது விழுகிற குழி இருக்கிறதே!...குழந்தைக்கும் அதைப் போல் அமைய வேண்டும். அவளுக்கு நுட்பமான நோக்கம். குரலில் மென்மையின்

இனிமை துலங்கும். ஒரு வேளை அந்தப் பிஞ்சு, பெரிய பாடகனுகி விட்டாலும் வியப்பதற்கில்லை.



விடிந்தால் நான்கு முடியப் போகிறது. கோடுகள் எப்படி முழுமையும் பெறப் போகின்றனவோ? இருக்கும்போது வள்ளலாக இருக்கலாம்; அதுவரையில் விரிந்த உள்ளம் இருந்தால் போதும். விளக்கைச் சிரிதாக்கிக் கொண்டு, வேதனையை விழுங்கிய போது, ஒளியை நடுவிலிட்டுக் கொண்டு நின்ற அவருடைய முகம் எத்தனை கவர்ச்சியாக இருந்தது! அந்தக் கவர்ச்சியும், விரிந்த உள்ளமும் உருவாகிவிட்டால் போதும்.

கதவு மெல்ல ஒலித்தது. துவர்ப்பு கரையாத தூக்கத்தில், துகிலை இழுத்துப் போட்டுக்கொண்டு கதவைத் திறந்தாள் துளசி. 'இதயம்' ஒன்றும் பேசாமல் பலகையில் உட்கார்ந்துகொண்டது; பார்க்கவே சகிக்கவில்லை. நெற்றியில், நீர் சரமிட்டுக்கொண்டு வடிந்தது. கண்களை நிமிட்டியபடி, நின்றுகொண்டிருந்தாள் துளசி.

விளக்கின் சுடருக்கு நடுவில் வத்தி வெந்துகொண்டிருந்தது. அணைந்துவிட்டால்கூட வத்தியில், பொறிச்சுடர் இருக்கும்; புகைச்சல் அவ்வளவு சிக்கிரத்தில் தணிந்துவிடாது. துளசி மெல்ல அருகில் வந்து நின்ருள். நெஞ்சுக் குமிழ் வெடித்துவிடும்போல் இருந்தது; வெடித்துவிட்டால் முடிவு தெரிந்துவிடும். 'இதயம்' எதையோசொல்லி விட்டுத் தலையை நட்டுக்கொண்டது.

துளசி செயலிழந்து இடிந்து போய் உட்கார்ந்துவிட்டாள். புறந்தலை இறுகிவிட்டதோஎன்னவோ? பன்னீரின் ஒலி கிழித்துக்கொண்டு பாய்கிறது; எல்லாம் அதற்குள் அடங்கிவிட்டது. உதயத்தின் விடிவில் ஒன்றிவிட்ட 'முடிவு'ம், முடிவின் அந்தியில் கலந்துவிட்ட 'விடிவு'ம் விளையாடி விட்டன

கங்குல் விழிக்கும்வரை கண்ணீர் வடிந்துகொண்டிருந்தது.

விடிந்தபோது 'பக்'கென்றது. நிய திகள்நெறிபுரண்டுவிட்டதுபோன்ற நிலையில், துளசி 'தத்துவத்'திடம் ஓடினாள். 'தத்துவம்' சமைந்துவிட்டது. தலையில் கை வைத்துக் கொண்டு, 'இதயத்தை' வெறிக்கப் பார்த்தது. பேரதிர்ச்சிதான். துளசி குலுங்கிக் குலுங்கி அழுகிறாள்.

எல்லாம் பொல பொலக்காமல் பொடிந்துவிட்டன. எத்தனை கனவுகள்! எத்தனை நினைவுகள்! இனி மேல் எதற்கும் இடமில்லை; எல்லாம் கலைந்துவிட்டன. 'குபுக்' கென்று பொங்குகிறது அழுகை. இதயம் ஒடுங்கிவிடுவதைப்போலிருக்கிறது. இரண்டு நாட்களில் இத்தனை துரும்பாகிவிடுவாள் என்று நினைக்கவில்லை 'இதயம்.'

''விடுமுறை எழுதிவிட்டு, என் பக்கத்திலேயே இருக்க வேண்டும்!''-இந்தக் குரலே புதுமாதிரியாக இருக்கிறது. 'இதயத்தை' நெகிழ்த்து உருக்கியது.

''உன்னுடைய இதயம் உன்னை விட்டு எங்கும் போய்விடாது. ஏன் இப்படிக் கலங்க வேண்டும்?''

துயரத்தின் வரண்ட சிரிப்பை வரவழைக்கத் துடித்தது அந்த முகம். கதவு உடைவதுபோல் திறந்துகொண்டது. பன்னீர் ஓடி வந்து, மலங்க மலங்கத் துளசியைப் பார்த்தது. கொஞ்ச நேரம்வரை நின்று பார்த்துவிட்டுப் பேசாமல் திரும்பிவிட்டது.

துளசி ஊமையாகத்தான் இருந்தாள். 'திடுக்'கென்று துணுக்குறும் இதயம்? பன்னீரா அவர்? பாவம், படீர், படீரென்று தூணில் மோதிக் கொள்கிறாரே! உடல் சாம்பலாகி விட்டிருக்கும்; உயிருக்குத்தான் வடிவமில்லை. இனிமேல் என்ன இருக்கிறது? எல்லாம் வெற்று வெளி தான். துடிப்பு எப்படி ஒடுங்கியதே.

''போன வாரம் இருந்ததைவிட, இப்பொழுது எப்படி இருக்கிறது, துளசி?''

''எனக்கு ஒன்றும் இல்லை. நான் தான் இப்பொழுது எழுந்து வேலை செய்கிறேனே! சாயந்தரம் சீக்கிரம் வந்துடணும், தெரியுமா?''

மனமுறிவு பட்டுவிட்டது; மாற்றுவதென்பது நடக்கக்கூடியதில்லை. 'ஞானம்' பிறப்பதென்பது அபூர்வமான அற்புதம்தான். உண்மையில் ஞானம்தான் பிறந்துவிட்டிருக்குமோ?

பன்னீர் எழுந்து வெளியில் ஓடிவிட்டதாம். என்னென்னதான் நடக்குமோ? இழுத்து வந்து அறையில் போட்டா மூடிவிட்டார்கள்? பாவம், 'ஓ'வென்று அலறுகிறது. இப்படியா அதைத் தவிக்கவிட்டுப் போக வேண்டும்?

'அது' பாவமில்லையா? 'தத்துவம்' எவ்வளவோ சொல்லிப் பார்த்துவிட்டது. மருள் நீங்கிய ஒரு தெளிவு. பாவமா?

'''அது' பாவம் என்றால் அதை விட எனக்கு வேறு புனிதம் இல்லை. பன்னீரைப் பார்க்கும்போது, என்னுடைய 'இதயம்' எனக்கு இதயமில்லையா? இலையை ஈரமாக்காமல் துளி, துளங்கும் 'சுவர்'களைவிட, என்னுடைய 'இதயம்'தான் எனக்குப் பெரியது. அவர் இப்படியெல்லாம் முட்டி மோதிக்கொண்டு, சித்தம் கலங்கிப் பிதற்றும்போது நான் இங்கிருக்கமாட்டேன். எதிலுமே நிறைவு இருக்காது. எனக்கு நிறைவுதான் வேண்டும்!''

துளசி, இட்டுக்கொண்ட திலகம் நுதல் கிழித்த விழிபோல் இருந்தது. 'இதயம்' மலர்க் குவியலுடன் வந்தது. அவர்கள் மருத்துவ மனைக்குப் போவதைக் கடைசி வரையிலும் 'தத்துவ'த்தால் தடுக்க முடியவில்லை. இனிமேல் எதுவும் இருக்காது; எல்லாம் நடக்கும்! ★

# காதல் நோய்

"உங்களிடத்தில் "நேவ்வாகடின்" மருந்து இருக்கிறதா?"

."நேவ்வாகடினு? நேவ்வாகடின் இல்லை. 'நேவ்வோகடின்' உங்களுக்கு வேண்டுமா? அது இருக்கிறது."

"நேவ்வோகடினு? 'நேவ்வாகடின்' இல்லையா?"

'கெமிஸ்டும், டிரக்கிஸ்டுமான' விவேக்கினுத் அமர்க்களமாக ஒரு முறை சிரித்துக்கொண்டே தலையை ஆட்டிவிட்டு, "நேவ்வாகடின் என்கிற பெயரையே நான் இவ்வளவு வருஷங்களாகக் கேட்கவில்லை. நீங்கள் டாக்டரின் சீட்டு கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"இல்லை" என்றுள் சசிகலா.

"அப்படியானுல் டாக்டரிடமிருந்து எழுதிக்கொண்டு வாருங்கள். அதுதான் சிறந்தது!"

"ஸல்பாயிட் மாத்திரை இருக்கிறதா சார்?" என்று கேட்டுக்கொண்டே இன்னெருவர் அந்த மருந்துக் கடையில் நுழைந்தார்.

"இருக்கிறது" என்றுன் விவேக் அவரைப் பார்த்து.

மாத்திரைப் புட்டிகளின்மீது ஒரு கண் போட்டுவிட்டு, ஒரு புட்டியின் விலை என்னஎன்றுக் கேட்டுவிட்டு, ஒன்றும் வாங்காமல் அவர் சென்றுவிட்டார்.

மருந்துக் கடையில் இருக்கும் அத்தனை புட்டிகளின் மீதும் ஒட்டப்பட்டிருக்கும் 'லேபில்'களைப் படித்துக் கொண்டும், பார்த்துக் கொண்டும் அங்கேயே நின்றிருந்தாள் சசிகலா தாம்பே.

"ம்...என்ன சொல்லுகிறீர்கள்? அதே மருந்தைக் கொடுக்கவா?" என்று கேட்டான் விவேக், அவளைப் பார்த்து.

"எங்கே, அந்த மருந்தைக் காண்பியுங்கள்" என்றுள் சசி.

விவேக் அலமாரியிலிருந்து மருந்துப் புட்டியை எடுத்துவந்து அவள் முன் வைத்தான். அவள் அதைக் கையில் வாங்கிக்கொண்டு, அதன்மேல் எழுதியிருக்கும் 'லேபிலை'ப் படித்தாள்.

"இந்த மருந்துதான் எனக்கு வேண்டும். நீங்கள் டாக்டரின் சீட்டு வேண்டும் என்கிறீர்களே?" என்றுள் சசிகலா.

விவேக்கிற்கு அவள் வார்த்தைகளைக் கேட்டதும் சிரிப்பு வந்தது. "ஆமாம்; ஏனெனில்"—என்று சொல்லிக்கொண்டே, 'பில் புக்கில்' கார்பன் பேப்பர் வைத்துக்கொண்டே, மறுபடி பேசலானுன். "உங்களுக்கு நேவ்வாகடின் மருந்து வேண்டுமா, அல்லது நேவ்வோகடின் மருந்து வேண்டுமா என்று தெரியாமல் தடுமாறுகிறீர்கள். அதற்காகத்தான் டாக்டர் சீட்டு இருந்தால் நல்லது என்றேன்; இல்லையா?" என்று கேட்டான்.

"ஆமாம்—ஆனுல் 'நேவ்வாகடின்'—இந்தப் பெயரில் மருந்து ஒன்றும் இல்லை என்கிறீர்களா?"

"ஆமாம்—எனக்குத் தெரிந்த வரையில் அம்மாதிரிப் பெயரில் மருந்து இல்லை." விவேக் சொல்லலானுன்: "ஏனெனில் இருபத்திநாலுமணி நேரத்திற்குள் நூற்றுக்கணக்கான புதுப்புது மருந்துகள் விற்பனைக்கு வருகின்றன. எனவே

---


மராட்டி மூலம்:
கோ. கோ. தாதே

தமிழில்:
பி. ஆர். ராஜாராம்

அம்மருந்தின் பெயர் நேவ்வாகடின் தானு அல்லது நேவ்வோகடின் தானு என்று எனக்கே நிச்சயமாகத் தெரியாது.''

''நிச்சயமாகத் தெரியாதா?'' சசிகலா குதித்தெழுந்தாள்.

''அதனுல் என்ன? நீங்கள் பயப் படும்படி ஒன்றுமில்லே!''

''என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? இந்த மருந்து எனக்கு ஒத்துக்கொள்ளவில்லே, அல்லது கேடு செய்துவிட்டால் என்ன செய்வீர்கள்?''

''இல்லே, இல்லே; அப்படியெல்லாம் இல்லே. ஆனுல் புதுசுபுதுசாக வரும் மருந்துகள் எல்லாம் சிறந்தவையாகவே இருக்கின்றன. பயப்படாதீர்கள்!'' என்ருன் விவேக்.

''எதற்கும் ஒருமுறை உங்கள் "நேவோகடின்'' மருந்தை உபயோகித்துப் பார்க்கிறேன்.''

''என்ன ? டாக்டராகச் சொல்லவில்லேயா, இந்த மருந்தை உபயோகிக்க?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் விவேக்.

தலேயை அசைத்துக்கொண்டே, ''டாக்டர்களிடம் சென்று சிகிச்சை பெற்றுக்கொண்டு எனக்குப் போதும் என்ருகி விட்டது. இதை நானுகவே வாங்கி 'டிரை' செய்து பார்க்கப் போகிறேன்!'' என்ருள் சசிகலா.

ஒருமுறைஅவளே உற்றுப்பார்த்து விட்டு, விவேக் சொன்னுன்: ''அப்படியானுல் வாங்குங்கள். இதன் விலே விற்பனேவரி எல்லாம் சேர்த்து ஐந்து ரூபாய் ஆறரை அணு ஆகிறது.''

தன் 'மணிபர்ஸி'லிருந்து பத்து ரூபாய் நோட்டை வெளியில் எடுத்தாள் சசிகலா. ஆனுல் அதைக் கொடுக்க மனமில்லாதவள்போல கையிலேயே வைத்துக்கொண்டு, அங்கிருந்த மற்ற மருந்துகளேப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

விவேக் 'பில்' எழுதி கிழித்து அவள் எதிரே வைத்தான். அவள் அதைப் பெற்றுக்கொண்டு ரூபாய் கொடுக்கும்பொழுது, அவள் கைகள் 'தடதட' வென்று நடங்குவதைப் பார்த்தான். அவள் கொடுத்த ரூபாயை மேஜையினுள் வைத்துக் கொண்டே, ''என்ன, உங்களுக்கு உடம்பு சரியாக இல்லேயா?'' என்று கேட்டான்.

தன்னுடைய கையில் கொண்டு வந்திருந்த சிறு துண்டினுல் முகம் கை, நெற்றி இவைகளேத் துடைத்துக்கொண்டே, சசிகலா, ''ஆமாம்! எனக்கு உடம்பு சரியில்லே. இங்கேயே கொஞ்ச நேரம் நான் இருக்கிறேன்'' என்ருள்.

''ஆஹா! அதற்கென்ன? நாற்காலி கொடுக்கட்டுமா, வெளியில் போய் உட்கார? அல்லது உள்ளேயே வந்து உட்கார்ந்தால் நல்லது.''

சசிகலா உள்ளேபோனுள். அந்த மருந்துக் கடையினுள் ஒரு சிறிய இடம் காலியாக இருந்தது. அங்கே ஒரு நாற்காலிவைத்து அதில் அவளே உட்காரச் சொன்னுன். ஒரு பஞ்சில் ஏதோ ஒரு மருந்தை ஊற்றி, அதை முகர்ந்து பார்க்கச் சொன்னுன். அவன் கடைக்குச் சென்று வியாபாரத்தைக் கவனித்து விட்டுசிறிது நேரங் கழித்து உள்ளே வந்துபார்த்தான். அப்பொழுது சசிகலா, அவன் கொடுத்த மருந்தை நாசியில் இழுத்துக்கொண்டும், இன்னொரு கையை நாற்காலிமேல் வைத்துக்கொண்டும் இருந்தாள். அப்பொழுது அவளுடைய உடல் நிலே சற்று அதிகமானது போல் காணப்பட்டது. மார்பில் கையை வைத்துக்கொண்டும் 'உஷ் உஷ்' என்று பெமூச்சு விட்டாள்.

''என்ன உங்களுக்கு இன்னும் தேவலே ஆகலே போல இருக்கிறதே!'' என்ருன்விவேக், உள்ளே நுழைந்து கொண்டே.

''இல்லே மிஸ்டர்...! கைகால் எல்லாம் பாரிச வாயு வந்ததுபோல

ஆகி, தொங்கிவிட்டது. தொண்டை யில் ஏதோ அடைத்தது போல இருக்கிறது. மார்பிலும்வலிக்கிறது'' என்றாள்.

''அப்படியா?'' என்று கேட்டான் விவேக். முன்னால் வந்து அவள் கையைத் தொட்டும் பார்த்தான் அவன்.

''இன்னும் நடுக்கம் இருக் கிறதா? அவ்வளவு இல்லை... கொஞ்சமாக இருக்கிறது,...ஆனால் பயப்படாதீர்கள்'' என்றான் அவன்.

அவன் உடனே வெளியில் சென்று, தன் கடையிலிருந்து ஒரு மருந்தைக் கலந்து வந்து கொடுத் தான். அவளும் அதைக் குடித் தாள்.

''காப்பி கொண்டு வருகிறேன், இன்னும் சிறிது நேரத்தில். அதைக் குடித்தால் உங்களுக்கு இதமாக இருக்கும்.''

இன்னும் ஐந்தாறு நிமிஷங்கள் கழித்துவந்தான் விவேக். சசிகலா வைப்பார்ப்பதற்கு உடம்பு தேவலை போல் இருந்தது.

''ரிக்ஷா கூப்பிடட்டுமா? ரிக்ஷா வில் ஏறிவீட்டிற்குப்போகிறீர்களா? உங்கள் வீடு எங்கிருக்கிறது?''

''வேண்டாம்! ரிக்ஷா வேண் டாம்!...இன்னும் நாலைந்து நிமிடம் இப்படியேஉட்காருகிறேன். ஆனால் எனக்கே ரிக்ஷா வேண்டும் என்று தேவைப்பட்டால்,ஏறிப்போகிறேன் உங்களுக்கு ரொம்பவும் தொந்தரவு கொடுத்து விட்டேன். உங்களு டைய உதவிகளுக்கு என் நன்றி இப்படி அடிக்கடி ஏற்படு வதால்தான், நான் எங்குமே வெளி யில் கிளம்புவதில்லை.''

விவேக் மருந்து இருக்கும்பகுதிக் குச் சென்று வியாபாரம் கவனிக்கச் சென்றான். அவள் அந்த அறையை ஒரு முறை நோட்டம் விட்டாள். அது ஒரு சிறிய அறை. அதனுள் மருந்து பாட்டில்கள் தட்டுகளில் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட் டிருந்தன. இன்னொரு மூலையில் இன்னொரு தட்டில்,நிறைய புத்தகங் கள் அடுக்கி வைத்திருந்தது.

அவள் அந்த புத்தக அலமாரி யிடம் சென்றாள். ஒவ்வொரு புத் தகமாக எடுத்து பிரித்துப்பார்த்துக் கொண்டே வந்தாள்.

விவேக் மறுபடி அவ்வறையினுள் நுழைந்தான். அவள் புத்தகம் படிப் பதில் ஆழ்ந்திருப்பதைக் கண்டான்

''இப்பொழுது உங்களுக்கு உடம்பு தேவலை அல்லவா?'', என்ற கேள்வியைக் கேட்டு, அவள் திடுக்கிட்டாள். உடனே அவள் தன் கையிலிருந்த புத்தகத்தை புத் தக அலமாரியில் வைத்துவிட்டு, நாற்காலியில் வந்து உட்கார்ந்து ''ஆமாம் ... இப்பொழுது நான் போகிறேன்'' என்றாள்.

''நடந்து போகிறீர்களா?''

''ஆமாம். மெள்ள மெள்ள நடந்து போவேன். அப்படி ஒன்றும் என் வீடு ரொம்ப தொலைவில் இல்லை.''

''எங்கிருக்கிறீர்கள், நீங்கள்?

''கன்யாசாலைத் தெருவில்''

''சரி. அப்பொழுது டாக்டரை வரவழைக்க அவசியம் இல்லையே? உங்களுக்கு என்ன 'இருதய நோயோ?''

''யாருக்குத் தெரியும், எனக்கு எந்த நோய் என்று? எனக்கு ஒரு வியாதியும் இல்லை என்று டாக்டர் கள் சொல்லுகிறார்கள். ஆனால் என் நிலையோ திண்டாட்டமாக இருக் கிறது''

''அப்படியானால் 'ஹிஸ்டரியா வா?''

''யாருக்குத் தெரியும் ஹிஸ்டரி யாவா அல்லது பிஸ்டரியாவா என்று? ஆனால் எனக்கு அடிக்கடி இப்படி நேருகிறது. எனக்கே சில சமயம் பயமாக இருக்கிறது'' என் றாள் அவள்.

''உங்களுக்கு திடீரென்றுஎன் னென்ன ஆகிறது? அதைச் சொல் முடியுமா?''

"என்ன ஆகிறதுஎன்று என்னைக் கேட்காதீர்கள்! முக்கியமாகச் சொல்ல வேண்டுமென்ருல், தூக்கம் வருகிறதில்லை. சாப்பாடுபிடிக்கவில்லை. உடம்பெல்லாம்வலிக்கிறது. மார்பு அடைக்கிருப்போல ஏற்படுகிறது. தலையெல்லாம் வலிக்கிறது"

"இன்னும் இரண்டைச் சொல்ல மறந்து விட்டீர்களே?" என்ருன் விவேக், பெரிதாக சிரித்துக் கொண்டே.

"என்ன?" என்ருள் சசி.

"அதுதான் கைகால் வலிப்பு வந்தாற்போல இருக்கிறது; மார்பு வலிக்கிறது என்று சொல்ல மறந்து விட்டீர்களே!' அவன் பரிகாசமாகப் பேசுவதை, அவள் லட்சியம் செய்யவில்லை.

"உங்களைப்போல அநேகம் பேர் என்னைப் பரிகாசம் செய்கிருர்கள், இப்படி நான் பேசுகிறேனே என்று. ஆனல் நான் அவஸ்தைப்படுவது யாருக்குத் தெரியும்?" என்ருள் அவள், நிஷ்டூரத்துடன்.

இதற்குள் "விவேக் சாகேப்! இந்த மருந்து இருக்கிறதா பாருங்கள்?" என்று யாரோ வெளியிலிருந்து கூப்பிட்டார்கள்.

விவேக் வெளியில் சென்றவுடன் அவள் அவனைப்பற்றி யோசிக்க ஆரம்பித்தாள். அவளுக்கும் அவனுக்கும் தர்க்கம் நடக்கும்பொழுது அவள் அவனைக் கூர்ந்து கவனித்தாள். அவன் நன்ருக, சொல்லப்போனல் 'டீக்காக' புது உடையணிந்து, தலையை அழகாக வாரியிருந்தான். பார்ப்பதற்கு அழகான வாலிபனுக இருந்தான் விவேக் அவனுடையபேச்சில் ஒரு 'மெருகு' இருப்பதைப்போல அவள் உணர்ந்தாள். அவனுடைய வயது என்னவாக இருக்கும் என்று யோசித்துப் பார்த்தாள். பார்ப்பதற்கு பதினேழு பதினெட்டு வயதுதான் இருந்தாலும், அவனுக்கு இருபத்திஐந்து அல்லது இருபத்தி ஆறு இருக்கும் என்று நினைத்தாள். அவனுக்கு கல்யாணம் ஆகியிருக்குமா? அவன் எதுவரைக்கும் படித்திருப்பான்?... ம்...நமக்கு எதற்கு இந்த விசாரம் எல்லாம்!"

"உங்களுக்கு ஒன்று சொல்ல வந்தேன்" - என்று உள்ளே நுழைந்து வந்தான் விவேக். "உங்களுக்குஇவ்வளவு 'வலிகள்' இருக்கிறது என்ருல், நீங்கள் எவ்வளவு வகை மருந்துகள் சாப்பிட்டிருக்க வேண்டும்? என்னைக் கேட்டால் உங்களுக்கு உண்மையிலேயே ஒரு வியாதியும் இல்லை என்கிறேன். சும்மா நீங்கள் இப்படிக் கண்ட கண்ட மருந்துகளைச் சாப்பிட்டதால் தான்..."

"மருந்துதான் நீங்கள் விற்பனை செய்கிறீர்கள் என்று நினைத்தேன். மருந்து வாங்க வந்தவர்களை இப்படி கேலியாகப்பேசி மனத்தைப் புண்படுத்துவீர்கள் என்று நான் நினைக்கவில்லை. நீங்கள் கொடுத்த மருந்து எனக்கு வேண்டாம்; திருப்பி எடுத்துக்கொள்ளுங்கள்!" என்ருள் அவள் கோபமாக.

"ஒருமுறை விற்ற மருந்தை நாங்கள் திருப்பி வாங்கிக் கொள்வதில்லை!"

"சரி, வாங்கவேண்டாம்! ஆனல் மற்றவர்கள் என்னைக் கேலி செய்வதைப்போல நீங்களும் செய்யாதீர்கள்! சரி. அப்பொழுது நான் வருகிறேன்..."

"கொஞ்சம் இருங்கள்! இன்னொரு முக்கியமான கேள்வியும் கேட்கவேண்டும். கேட்கட்டுமா?"

அவன் தன் கைகளினல் தன் சட்டைக் காலரைத் தூக்கி விட்டுக் கொண்டே கேட்டான். அப்பொழுது அவன் கைகளைக்கவனித்த சசிகலா, "ஆஹா! என்ன அழகான கை! எவ்வளவு நீளமான, சிவந்த விரல்கள்! அந்த விரல்களுடன் நம் விரல்களும் சேர்ந்து, அவன் கைகளுடன் நம் கைகளும் சேர்ந்தால் எவ்வளவு...ம்... அது முடியுமா?" என்று நினைத்தாள்.

"என்ன? மறுபடி என்னைக் கேலி செய்யப் போகிறீர்களா?"—அவள் கேட்டாள்.

"இல்லை...இல்லை...! நீங்கள் பலவித மருந்துகளையும் வாங்கி, அவைகளை முயற்சி செய்து சாப்பிட்ட 'காலியான' புட்டிகள் உங்களிடம் நிறைய இருக்குமல்லவா? அம்மாதிரி எவ்வளவு புட்டிகள் உங்கள் வீட்டில் இருக்கிறது?" என்றான் விவேக். சசிகலா இதைக் கேட்டு அவமானத்தால் தலை குனிந்தாள்.

"உங்களுக்கு ஒரு வியாதியும் இல்லை என்று டாக்டர்களும், மற்றவர்களும் சொல்லுகிறார்கள் என்றீர்களே; அதையேதான் நானும் சொல்கிறேன். எதற்காக இப்படி கண்ட கண்ட மருந்துகளை வாங்கிச் சாப்பிடுகிறீர்கள்? இப்பொழுது நீங்களே சொன்னீர்கள். 'இந்த மருந்திற்கு டாக்டர் 'பிரஸ்கிரிப்ஷன்' கொடுக்கவில்லை; நானாக வாங்கி முயற்சி செய்கிறேன்', என்றீர்கள். உங்களுக்கு இந்த மருந்தினால் என்னென்ன வியாதிகள் தீரும் என்று தெரியுமா? இந்த மருந்தை உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான் கைகளைக் கட்டிக் கொண்டே.

"பஸ்ஸில் இரண்டு பெண்கள் இம்மருந்தைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். அதைக் கேட்டு......"



"சபாஷ்!" என்றான் விவேக் கைகளை ஆட்டிக்கொண்டே.

"இந்த மாதிரி சிநேகிதிகளின் பேச்சைக்கேட்டு இப்படிமருந்துகள் வாங்கி உடம்பைக் கெடுத்துக் கொள்ளலாமா? எப்பொழுதும் நம் நண்பர்களிடமிருந்து ஏழடி பின்னால் இருக்கவேண்டும்."

"ஏன் அப்படி?"

"நீங்கள் அவர்களுடன் எப்பொழுதும் பழகிக்கொண்டிருக்கக்கூடாது. நாம் அரை நொடி ஏழடி பின்னால் தங்கிநின்றால், அவர்கள் முன்னேறி விடுவார்கள் நம்மைக் கவனிக்காமலேயே. நம்மைத் தன்னந்தனியாக விட்டுவிடுவார்கள், நாம்தான் திண்டாட வேண்டும். அப்படிப்பட்டவர்களின் பேச்சை நாம் கேட்கலாமா...?" அவன் அவளை நெருங்கிக்கொண்டே, இன்னும் ஏதோ பேசிக் கொண்டிருந்தான். திடீரென்று அவள்,

"மகத்தான ஒரு காரியத்தை மறந்துவிட்டீர்களே, உங்கள் பேச்சில்!" என்றாள்.

"என்ன மறந்துவிட்டேன்?"

"நீங்கள் என் கையை உங்கள் கைகளுடன் கோர்த்துக் கொண்டிருக்கிறீர்களே!"

"அப்படியா?"

சட்டென்று விலகி நின்றான் விவேக். அவள் பேசாமல் சிரித்துக் கொண்டே நின்றிருந்தாள்.

"இப்பொழுது சொல்லுங்கள். இந்த மாதிரி மருந்துகள் வாங்குவதெல்லாம் வீண்தானே! நான் அப்பொழுது கொடுத்தேனே அம்மாதிரி மருந்து..."

"அதெல்லாம் எனக்கு வேண்டாம். எனக்கு ராம பாணத்தைப் போல ஒரு மருந்து வேண்டும். எவன் ஒருவன், என் உடம்பில் நோயை எல்லாம் கேட்டு, பிறகு அவன் மருந்து கொடுத்து, அது ராம பாணம்போல் வேலை செய்து, என் உடம்பிலிருக்கும் அவ்வளவு நோய்களையும் ஒரே நிமிடத்தில் அகற்றி விடுகிறானோ, அவனையே தான் நான் நிரம்பப் புகழ்வேன். அந்த மாதிரி டாக்டர்தான் எனக்கு வேண்டும். நான் மருந்து சாப்பிட்டு சாப்பிட்டு எனக்கு ரொம்ப வெறுப்பு வந்துவிட்டது என்பது உங்களுக்குத் தெரியாது." அவள் நயனங்கள் நனைந்தன. கண்கள் நீரைப் பொழிந்தன. அவள் அழுது கொண்டே சிறிய குரலில், "எனக்கு வாழ்க்கையே வெறுத்து விட்டது. எனக்கு ஒரேயடியாக விஷத்தை கொஞ்சம் சாப்பிட்டு விட்டால் தேவலை என்று தோன்றுகிறது" என்றாள்.

"சே...சே! நீங்கள் ஏன் இப்படி நிராசையுடன் பேசுகிறீர்கள்?"

"நான் நிராசையுடன் பேசவில்லை. உண்மையிலேயே எனக்கு சிறிது விஷம் ஒரு பாட்டில் கொடுங்கள். இதோ பார்த்தீர்களா...என் கைகள் மறுபடியும் எப்படி 'தடதட' வென்று நடுங்குகின்றன!......"

விவேக் அவள் கைகளைப் பார்த்தான். அவை இழுப்பு வந்தாற் போல ஆடின. ஆனால் அவன் அவைகளைப் பிடிக்கவில்லை.

அப்பொழுது அவள் சொன்னாள்: "எனக்கு இழுப்பு வந்தாற் போல இருக்கிறது. என்னை பிடித்துக் கொள்ளுங்கள்"—என்று கைகளை நீட்டினாள். அவள் கைகளை அவன் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

"உங்கள் கை சூடாக இருக்கிறதே!" என்று அவள் தன் விரல்களுடன் அவன் விரல்களைக் கோத்துக்கொண்டாள். ஒரு நிமிஷம்தான் அப்படி. திடீரென்று அவள் அவனிடமிருந்து விடுபட்டு,"நான்வந்து ரொம்ப நாழியாகிவிட்டது. என்னை மன்னியுங்கள். இங்கே இவ்வளவு புத்தகம் இருக்கிறதே, எல்லாம் உங்களுடையதா?" என்றாள்.

"ஆமாம். எல்லாம் என்னுடையதுதான். உங்களுக்கு படிக்க

வேண்டுமா? அப்படியானால் எந்தப் புத்தகம் வேண்டுமோ அதை எடுத்துக்கொண்டு போங்கள். நீங்கள் திருப்பித் தருவதற்காக இன்னொரு முறை என் கடைக்கு வரநேரிடும்''

''நான் வந்தால், மறுபடி இன்றைய தினம்போல் அனாவசியமாக உங்களுக்கு தொந்தரவு நேரிடும். உங்களுடைய வியாபாரம் கெடும். பொழுதை வீணாக்க நேரிடும். பல ஹீனமான, சாகப்போகிற நான் இங்குவந்து என்ன ஆகவேண்டும்? மேலும் நான் பேசுவதெல்லாம் உங்களுக்குப் பிடிக்காது.''

''நீங்கள் சாகப்போறீர்களோ, அல்லது இங்கு வந்துதான் பொழுதை வீணடிப்பீர்களோ எனக்குத் தெரியாது. நான் உங்களுக்கு நண்பனாகி விட்டேன் அல்லவா! அந்த முறையில்தான் அழைக்கிறேன்.''

''அப்படியானால் நான் உண்மையில் செத்துவிட வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

''சே, சே! வியாதியஸ்தர்களிடம் எது பேசினாலும் அவர்கள் குதர்க்கமாக பேசுவதாக நினைத்துக் கொள்வார்கள்! இதிலிருந்து உங்களை தப்பவைக்கத்தான் நான் இங்கு வரச்சொன்னேன்; நீங்கள் அதைத் தப்பாக எடுத்துக் கொள்கிறீர்களே!'' என்று மழுப்பினான் விவேக்.

''நன்றி! இரண்டு மூன்று புத்தகங்கள் எடுத்துச் செல்லட்டுமா?''

''தாராளமாக எடுத்துக் கொள்ளுங்கள்!'' என்று சொல்லிவிட்டு, அவன் வியாபாரத்தைக் கவனிக்க வெளியில் சென்றான்.

தனக்கு வேண்டிய மூன்று புத்தகங்களைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு, அவள் வீட்டிற்குச் சென்றாள்.

★

மறுநாள் அவள் மூன்று புத்தகங்களையும் எடுத்துக்கொண்டு கடைக்குச் சென்றாள். கடை மூடியிருந்தது. கடை வாசலில், ''பிரதி திங்கட்கிழமை விடுமுறை'' என்கிற போர்டு தொங்கியது.

''ம்...நாம் நினைக்கிறாற்போல ஒன்றும் நடப்பதில்லை. கடையை மூடிக்கொண்டு போகிறாற்போல அவ்வளவு வேலை என்ன இவருக்கு? என்னை ஏமாற்றத்தான் அவர் இப்படிச் செய்திருக்கிறார். ஆமாம், ஏமாற்றத்தான். எங்கு போனாலும் எனக்கு ஏமாற்றம். இவர் என் நண்பராம்! ஹூம்... நான் வருவதை அறிந்தும் கடையை மூடிக்கொண்டு போயிருக்கிறாரே! கொஞ்சம் மட்டும் கடையைத்திறந்து வைத்திருந்தால், நான் உள்ளே உட்கார்ந்து பேச...எவ்வளவு நன்றாக பொழுது போயிருக்கும்! இப்படிச் செய்துவிட்டாரே! ஒருவேளை என்னைக் கண்டாலே பிடிக்கவில்லையோ, என்னவோ? 'அவர்' எவ்வளவு நல்லவர்! பார்ப்பதற்கும் எவ்வளவு அழகாக இருக்கிறார்!......'' இப்படி அவள் எண்ணிக்கொண்டே திரும்பிப் போய்க் கொண்டிருந்தாள்.

விவேக் இன்னொரு வீட்டின் பக்கத்திலிருந்து சைகிளை எடுத்து வந்து அதில் ஏற உட்கார்ந்தவன் சசிகலாவைப் பார்த்து 'அட! நீங்களா!' என்றான், ஆச்சரியத்துடன்.

''உங்களுடைய நாவலைத் திருப்ப வந்தேன்.''

''அப்படியா? அப்படி ஒன்றும் எனக்கு அவசரமில்லையே!''

''வெளியில் ஏதோ வேலையாகப் போவதாகத் தெரிகிறது.''

''ஆமாம்! நான் விடுமுறை நாட்களில் வீட்டில் சும்மா உட்கார்ந்திருப்பதில்லை. இப்பொழுதுதான் நான் புதிதாக கடை வைத்திருக்கிறேன். அதனால் விடுமுறை நாட்களில் 'கமிஷன் ஏஜெண்ட்' வேலையும் செய்கிறேன். என் வேலையைப்பற்றிய செய்தியெல்லாம் ஏன் உங்களிடம் சொல்லித் துன்புறுத்த வேண்டும்? வாருங்கள், வீட்டிற்குப்

போகலாம். நீங்கள் இன்றைக்கு என் வீட்டில் தேநீர் அருந்திவிட்டுத் தான் போகணும்!''

''இல்லே...இல்லே...நான் வர வில்லே. நீங்கள் எங்கோ அவசர மாக வேலைக்குப் போகும்பொழுது நான் தடைப்படுத்துவது நியாய மில்லே. உண்மையில் பார்க்கப் போனல் நான்தான் உங்களை வீட் டிற்கு அழைத்து தேநீர் கொடுக்க வேண்டும்.''

''அதனல் என்ன! பரவாயில்லே. வாருங்கள் போவோம். இப் பொழுது ஒன்றும் உங்களுக்கு அவ சரமாக வேலே இல்லேயே?''

''இல்லே''—என்றுள் அப் பூங் கொடியாள். அவர்கள் இருவரும் கடையைநோக்கி நடக்கலானர்கள்.

விவேக் கடைப்பூட்டைத் திறந் தான். சசிகலாமுதலில் கடையினுள் புத்தகத்துடன் நுழைந்தாள். பிறகு அவள் பின்னல் விவேக் வந்தான். அவன் கடையை உள்ளே தாழ்ப் பாள் போட்டுவிட்டு வந்தான்.

உள்ளே வந்ததும் அவன் அறை யின் விளக்கைப் போட்டான்.

''உங்களுடைய அலமாரியில் ஏது இத்தனை புத்தகம்?'' என்று கேட்டாள் சசி. விவேக் தன் கடைக்கு அடுத்த தோட்டத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

**வேறு எதை மாற்றுவது ?**

ஒரு நடிகை நாளுக்கு நாள் மெலிந்துகொண்டே போவதைக் கண்ட அவளுடைய டாக்டர், 'தங்கள் உடல்நிலேக்கு இப்போது மாற்றம் தேவை' என்றுர்.

அதற்கு அந்த நடிகை சலிப் போடு பதில் சொன்னுள் :

'இந்த ஒரு வருடத்தில் மூன்று கணவர்கள், நான்கு கார்கள், ஆறு பங்களாக்கள், பத்து சமை யல்காரர்கள் மாற்றியாகிவிட்டது. இன்னும் எதை மாற்றச் சொல்லு கிறீர்கள் ?'

அவன் உள்ளே வந்து, ''இதற்கு முன் இந்த இடத்தில் ஒரு வாசக சாலே இருந்தது. அது நாளடை வில் செத்து விட்டது. நான் இந்த அறைகளே வாடகைக்கு எடுத்துக் கொண்டபோது அவ்வளவு புத்தகங் களேயும் நானே விலேக்கு வாங்கி விட்டேன்.''

''நீங்கள் படிக்கவேண்டும் என்று இவ்வளவு புத்தகங்கள் வாங்கினீர் களா?''

''இல்லே. என் சகோதரிக்காக.''

''அப்படியானல்உங்கள்சகோதரி நிறைய படிப்பார்கள்?''

''இல்லே. அவளேப் படிக்கவைக்க வேண்டும் என்ற விருப்பத்தால் வாங்கினேன்.''

''அப்படியா?'' சசிகலா ஆச்சரி யத்துடன் கேட்டாள். அவன் சொல்வதை எல்லாம் அவள் கவ னத்துடன் கேட்டுக் கொண்டே வந்தாள்.

''வாங்களேன்; அப்படிப் போய் உட்காரலாம்.''

இருவரும் கடைக்குப் பின்புற மிருந்த தோட்டத்தில் போய் உட் கார்ந்தார்கள்.

''உங்களுடைய சகோதரி உங் களேவிடசிறியவளா,அல்லது பெரிய வளா?'' அவள் உற்சாகத்துடன் கேட்டாள்.

''என்னேவிட இரண்டு வயது சிறியவள்.''

''ஒரே ஒரு தங்கைதான?''

''இல்லே. இன்னெருத்தி இருக் கிருள்.

சகோதரனும் ஒருவன் இருக் கிருன். என்னேவிடச் சிறியவன். எட்டாவது படிக்கிருன்.''

''இவ்வளவு சகோதரர்கள்தான நீங்கள்?''

''ஆமாம்''

''பெற்ருேர்கள்...?''

''ஐயோ! அவர்கள் இருந்திருந் தால் நான் 'மெடிகல் காலேஜில்' படித்துக்கொண்டிருப்பேன்!''

"த்சொ...த்சொ ... எப்பொழுது காலமானார்கள்? ஒருவர் பின் ஒருவராகவா...?"

"ஆமாம் ... ஒன்றரை வருடமாகிறது."

"அவர்கள் போனவுடன் குடும்ப பாரம் உங்கள் தலையில்தான் விழுந்ததோ?"

"ஆமாம். என் தந்தை என்னை டாக்டராக்குவதற்காக 'மெடிகல் காலேஜில்' சேர்த்தார். எனக்கும் டாக்டராகி, சுயமாக 'டிஸ்பென்சரி' வைத்து சம்பாதிக்க வேண்டும் என்று ஆசை. ஆனால் என் ஆசையில் மண் விழுந்தது. இருந்த பணத்தில் 'டிஸ்பென்சரி' வைத்தேன். அதற்குமேல் பணமில்லை. எனவே படிப்பை நிறுத்திவிட்டு இப்படி சம்பாதிக்கிறேன். நான் டாக்டராகா விட்டாலும், என் தம்பியையாவது நிச்சயம் டாக்டராக்குவேன்."

"உங்களுடைய தங்கை என்ன செய்கிறாள்?

"காலேஜில்'இண்டர்' படிக்கிறாள். அவள் படிக்க வேண்டும் என்பதற்காக என் படிப்பையும் நிறுத்திக் கொண்டேன். அவளுக்காகத்தான் இவ்வளவு புத்தகங்கள் வாங்கினேன். ஆனால் அவள் ஒரு புத்தகத்தையும் தொடுவதில்லை."

"அப்படியா?" அவள் தன்னை மறந்து விவேக்கையே பார்த்தாள்.

"என் தங்கை படிக்காவிட்டாலும் எனக்கு மனைவியாக வருபவள் இவைகளைப் படிக்க வேண்டும் என்பதற்காக வைத்திருக்கிறேன். எனக்கு மனைவியாக வருபவள் நிறைய படித்தவளாகவும், ஒரு வாசகசாலையை நிர்வகிக்கும் திறமை உடையவளாயும் இருக்க வேண்டும்!"

"அடிசக்கை! அப்படியானால் உங்களுக்கு வாசகசாலையை நிர்வகிக்கும், அதாவது 'புத்தகப்புழு' போன்ற பெண் வேண்டும் என்று சொல்லுங்கள்"

"ஆமாம்! பெண்கள் நிறைய படித்து முன்னுக்கு வரவேண்டும் என்பது என் அவா. இருந்தாலும் வீட்டையும் நிர்வகிக்கத் தெரிந்திருக்க வேண்டும். வீட்டைச் சுத்தமாக, அலங்காரமாக வைத்திருக்க வேண்டும். எனக்கும், என் வேலைக்கும், உதவி செய்பவளாக இருக்க வேண்டும் என்பதுதான் என் விருப்பம்."

"நான் உங்களுக்கு உதவிசெய்து, கைகொடுக்கத் தயாராக இருக்கிறேன்"—அவசர அவசரமாக, தன் வாயிலிருந்து என்ன வார்த்தைகள் வெளிவருகின்றன என்பதையும்கவனிக்காமல் சொல்லி விட்டாள். இப்படி மூர்க்கத் தனமாக, முன்பின் யோசிக்காமல் 'உளறி' விட்டோமே என்று பின்னால் வருத்த மடைந்தாள். தான் சொன்னதை நினைத்து நாணம் மிகுந்து, தலை கவிழ்ந்துக் கொண்டாள். திடீரென்று தான் உட்கார்ந்திருந்த பெஞ்சிலிருந்து எழுந்து, "எழுந்து வாருங்கள், என் வீட்டிற்கு! நான்

## தெரிந்த விதம்!

ஒரு பெண் 'செக்' ஒன்றை மாற்ற, ஒரு பாங்கிக்குச் சென்றாள்.

அவளை 'இந்த பாங்கில், உங்களுக்குக்கணக்குஇருக்கிறதா?' என்று குமாஸ்தா கேட்டதற்கு, 'இல்லை' என்றாள் அவள்.

'அப்படியானால் உங்களைத் தெரிந்த ஒரு நம்பிக்கையான ஆள் யாரையாவது அழைத்து வாருங்கள்' என்றார் அவர்.

சிறிது நேரத்தில் போலீஸ்காரர் ஒருவருடன் வந்தாள் பெண். போலீஸ்காரரைப் பார்த்து 'இவர்களை உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார் குமாஸ்தா.

போலீஸ்காரர் சொன்னார்:

'நன்றாகத் தெரியும். ஒரு வருடத்துக்குமுன்பு, கடையில்சாமான் திருடியதற்காகக் கைது செய்திருக்கிறேன்!'

உங்களுக்குதேநீர் கொடுப்பதற்காக கூப்பிட்டதை மறந்தே விட்டேன். ஏதேதோ பேசி பொழுதை வீணுக்கி விட்டேன். பேசினதையெல்லாம் மறந்து விடுங்கள்; மன்னியுங்கள்... என் மூளை குழம்பியிருக்கிறது... அதனுல்...'' என்ருள்.

''உங்கள் மூளை ஒன்றும் குழம்ப வில்லை. எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. நீங்கள் இப்படி உட்காருங்கள்.''

''வேண்டாம், வேண்டாம்! கடையினுள் நுழைந்து யாராவது இங்கு வந்து, நம்மைப் பார்த்தால் ஏதாவது நினைத்துக்கொள்வார்கள். வாருங்கள் போவோம்...''

''வந்தால் என்ன? உயர்ந்த ரக மது வகை வாங்க வந்திருக்கிருர்கள் என்று நினைப்பார்கள். ஏனெனில் இது 'கெமிஸ்ட் அண்ட் டிரக்கிஸ்டு' கடை!''

''என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?'' அவள் பயந்து விட்டாள். முகம் பேயறைந்தது போல் ஆகி விட்டது.

''ஹஹ்ஹா! ஏதோ விளையாட்டிற்குச் சொன்னுல் இப்படி பயப்படுகிறீர்களே! சரி. நாம் கிளம்புவோமே?''

''நான் புத்தகம் வைப்பதற்காக இன்று கடையைத் திறந்தீர்களோ?''

''ஆமாம். புத்தகத்தை வைத்து விட்டீர்களல்லவா? நீங்கள்புத்தகம் வைக்கவந்த சாக்கில், எல்லாக் கேள்விகளேயும் கேட்டு விட்டீர்கள். நானும் உற்சாகமாகப் பதில் சொல்லி வந்தேன்.''

''ஆமாம். அது என் குற்றம்தான். அதற்காக நீங்கள் இப்படி 'மது... அது' என்று பயங் காட்டுவதா? இன்னும் நாம் இங்கே உட்கார்ந்திருப்பது அழகல்ல. வாருங்கள் போவோம்...''

''எங்கே? ... நான் வரவில்லை... நீங்கள் போங்கள்...''

''அப்படியானுல் தேநீர்...?''

''எனக்கு வேண்டாம்.''

''ஆனுல், நான் இன்றைக்கு கட்டாயமாக கொடுப்பதாக உத்தேசம் செய்துவிட்டேன்.''

''ஆனுல், நான் சாப்பிட விரும்ப வில்லை.''

''நீங்கள் வெளியில் போகவில்லையா?''

''போவேன்...இன்னும் சிறிது நேரத்தில் போவேன்''

''நான் போகட்டுமா...?''

''ம்.........''

சசிகலா வாசற்கதவு வரையில் சென்றவள், மறுபடியும் திரும்பி விட்டாள்! ''எனக்கு என்னமோ மாதிரி இருக்கிறது, உடம்பிற்கு!'' என்ருள் விவேக்கினிடம் வந்து. அவன் பேசவில்லை.

''என் மீது கோபமா?''

''இல்லை.''

''ஒரு பலஹீனமான பெண் கஷ்டப்படுகிருள் என்பதைக் குறித்து,உங்களுக்குபச்சாத்தாபமே இல்லையா?''

''அவள் பலஹீனமான பெண்ணல்ல...!''

''நீங்கள் பொய் சொல்கிறீர்கள்''

''இல்லை. அவள் நல்ல திடகாத்திரமான மங்கைதான்!''

''அப்படியானுல் பாருங்கள்! என் கைகால்கள் எல்லாம் 'வெட வெட' வென்று துடிக்கின்றன. இரத்தமெல்லாம் சுண்டிவிட்டது போலிருக்கிறது. எனக்கு வேர்வை கொட்டுகிறது.''

''எல்லாம் வேஷம்...!''

''அப்படியானுல் நான் வேஷதாரியா? பலஹீனமான, மூர்க்கமானபெண்ணு?''

''இப்படியே நீங்கள் பேசிக் கொண்டிருங்கள்! உங்கள் உடம்பிற்குத்தான் ஒன்றுமில்லை, நன்ருகயிருக்கிறீர்கள் என்று சொன்னுல், ஏன் நீங்களே தைரியமாக இருக்க

மாட்டேன் என்கிறீர்கள். ஏன் நீங்கள் பலஹீனமானவள் என்று நினைக்கிறீர்கள்? இப்படியெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தால் இந்த வியாதிக்கு ராமபாணம் போன்ற மருந்தே கிடையாது!''

''நீங்கள் வெட்டி வேதாந்தம் பேசுங்கள்! என் வலி உங்களுக்கென்ன தெரியும்?''

''நான் 'மது', 'ரசாயனம்' என்ற பொழுதெல்லாம் உங்களுக்கு வலியோ, இழுப்போ வரவில்லை. இப்பொழுது திடீரென்று வந்துவிட்டதோ?''

''அப்பொழுது நான் பொய்பேசுகிறேனு? நீங்கள் அப்படி பயமுத்தினது இப்பொழுது......''

''அப்பொழுதுஎன் வார்த்தையை வாபஸ் வாங்கிக்கொள்கிறேன்.''

''ஆமாம்! என்னைக் கண்டாலே உங்களுக்குப் பிடிக்கவில்லை; உள்ளதைச் சொல்லுங்களேன்.''

''ஏன் இப்படி குதர்க்கமாகப் பேசுகிறீர்கள் ?''

இதைக் கேட்டதும் அவள் பெஞ்சில் உட்கார்ந்து அழ ஆரம்பித்து விட்டாள். சட்டென்று அவளருகில் உட்கார்ந்து, ஒரு கையால் அவள் கேசத்தைக் கோதிவிட்டுக் கொண்டே, இன்னொரு கையால் அவளிரு கைகளையும் பிடித்துக்கொண்டு, ''ஏன் இப்படி பைத்தியமாட்டம் அழுகிறீர்கள்?'' என்ருன் விவேக்.

''என் பெயரை உங்களுக்குத் தெரியாது. உங்கள் பெயரும் எனக்குத் தெரியாது. அப்படியிருக்க, நீங்கள் எப்படி என்னைக் கேலி செய்யலாம்? கையை விடுங்கள்...''

''என் பெயர்தானே வேண்டும்... என் பெயர் வினேத விவேக்... உன் பெயரென்ன? உங்கள் துன்பத்தையும் சொல்லி அழுங்கள், வேதனையாவது தீரும்!'' அழுதுகொண்டிருந்தவள் இதைக்கேட்டு சிரித்தாள்.

''என் பெயர் சசிகலா...'சசிகலா தாம்பே! என் பெயரும் உங்களுக்குப் பிடிக்காது. அப்படியே என் உருவமும் உங்களுக்குப் பிடிக்கவில்லை!! அப்படித்தானே?''

''சசிகலா...சசிகலா...சசிகலா..''

சசிகலா இதைக்கேட்டு இன்னும் சிரித்தாள்.

''உனக்கு கொஞ்ச நேரமுன்பு 'ஏதேதோ' நோவு ஏற்பட்டதே, அற்கெல்லாம் இதுதான்ராமபாணம் போன்ற மருந்து!''

''அப்படியென்ருல்...?''

''அப்படியென்ருல், இப்படி நீ வாய்விட்டுச் சிரிப்பதுதான்!''

சசிகலா இன்னும் கம்பீரமாகச் சிரித்துவிட்டு, ''நான் எதற்காகச் சிரித்தேன்?'' என்ருள்.

''எதற்காகவா? நான் உன் பெயரை மூன்று முறை சொன்னேன். இதன் மூலம் எனக்கு உன்மேல் அன்பு இருப்பதைக் காண்பித்தேன்.''

''வெறும் பெயர் மட்டுந்தான் பிடிக்கிறதா?''

''இல்லை இல்லை; உன்னையே பிடிக்கிறது!''

''என்னைப் பிடிக்க என்னிடம் என்ன இருக்கிறது?''

''அது சொல்ல எனக்குத் தெரியாது.''

தன் கைக்குட்டையினுல் நெற்றி, முகத்தையெல்லாம் துடைத்துக்கொண்டு, ''இம்மாதிரி நடக்கும் என்று நான் கனவில்கூட நினைக்கவில்லை'' என்ருள் சசிகலா விவேக்கைப் பார்த்து.

''கனவில் என்ன? நினைவிலேயே நீ நினைத்திருப்பாய் இப்படி ஆகும் என்று! நீ பொய் சொல்லுகிருய்!''

இதைக்கேட்டு அவள் பெரிதாகச் சிரித்தாள். சிரித்துக் கொண்டே அவள், ''விவேக்! எனக்கு உண்மையில் பைத்தியம் பிடிக்கவில்லையே, வி...வே...க்.''

''ம்...நான் உன் பெயரை மூன்று முறை உச்சரித்தேனுக்கும்!''

"வி-வே-க்... வி-வே-க்..." என்று தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் சசிகலா. "எனக்கு இதில் நம்பிக்கை இல்லை. எனக்கு பயமாக இருக்கிறது." என்றாள்.

அவள் கைகளை வருடியவாறே, "என்ன பயம் உனக்கு, சசி?" என்று அன்பொழுகக் கேட்டான் விவேக்.

"எனக்கு; சொல்ல வரவில்லை விவேக்! எனக்கு கைகால் நடுங்குகிறது விவேக்"

அவள் கைகளை இறுக்கிப் பிடித்துக்கொண்டு, "இன்னுமா பயம் உனக்கு, சசி?" என்றான் அவன்.

"இல்லை...ஆனால் எனக்கு இதெல்லாம் கனவில் நடப்பது போலிருக்கிறது."

"கனவுதான் என்றாலும், உனக்கு சந்தோஷமாக இல்லையா?"

"சந்தோஷமாகத்தான் இருக்கிறேன். என்னை நீங்கள் விட்டுவிட மாட்டீர்களே?" அவன் தோள்களில் தன் கையைப் போட்டவாரே சசி அவனைக் கேட்டாள்.

"ஆமாம். செய்வேன். உன்னை விட்டு விடுவேன்."

அவள் இதைக்கேட்டு திடுக்கிட்டு ஒதுங்கினாள்.

"ஆனால்...உன்னை இப்படி கொஞ்சம் விட்டுவிட்டு, மறுபடி உன்னை அணைத்துக்கொள்வேன்!" என்றான் அவளைத் தழுவியவாறே. கொஞ்சநேரங் கழித்து இருவரும் கடையை விட்டு வெளியே வரும் பொழுது சசி சொன்னாள் :

"இந்தக் கடை எனக்கு ரொம்பப் பிடிக்கிறது! இதிலிருக்கும் ஒவ்வொரு பொருளும் இப்பொழுது எனக்குப் பிடிக்கிறது. நானும் உங்களுடன் உட்கார்ந்து மருந்து விற்பேன்."

"ஆஹ்ஹா! ஆனால் எனக்கு அது பிடிக்காதே!"

"ஏன்...?"

"கடையில் எவ்வளவோ விஷமுள்ள மருந்துகள் எல்லாம் இருக்கின்றன. திடீரென்று நீ ஏதாவது..."

"விஷ மருந்திலும் நான் சாக மாட்டேன்!"

"காரணம்?"

"காரணமா?" அருகிலிருந்து விவேக்கை அணைத்து, அவனுடைய உதட்டில் சட்டென்று தன் உதட்டை வைத்தவாறே, "காரணம், இது அமிர்தம்" என்றாள் அவள். ★

## யார் தைரியசாலி ?

கணவனும் மனைவியும் ஒரு பல் டாக்டரிடம் சென்றார்கள்.

"டாக்டர்! ஒரே ஒரு பல்லைப் பிடுங்க வேண்டும். அவசர வேலை இருக்கிறது; நான் சீக்கிரம் போக வேண்டும். மயக்கமருந்து ஒன்றும் கொடுக்க வேண்டாம்" என்றாள் மனைவி.

டாக்டர் அவளை ஆச்சரியத்துடன் பார்த்துவிட்டு, "உண்மையிலேயே நீங்கள் தைரியசாலிதான். எந்தப் பல்லைப் பிடுங்க வேண்டும்; காட்டுங்கள் பார்க்கலாம்" என்றார்.

அவள் தன் கணவனிடம் சொன்னாள் :

"டாக்டருக்கு உங்கள் பல்லைக் காட்டுங்கள்; பார்க்க வேண்டுமாம்!"

ஆசிரியர் : கண்ணதாசன். வெளியிடுபவர் : சுப. அருணாசலம்.
ஏ. எல். எஸ். அச்சகம். 2-127, மவுண்ட்ரோடு, சென்னை 6.—தமிழ்நாடு

